# ஹண்டே ஹாஸ்பிடல் மாஸ்டர் ஹெல்த் செக்கப்

# (MASTER HEALTH CHECK-UP)

இன்றைய சூழ்நிலையில் நோய்வாய்ப்படும் வரையிலோ, அல்லது ஏதாவது நோய் வந்து செயல்படவிடாமல் தடுக்கும் வரையிலோ, காத்துக் கொண்டிருக்க வேண்டியதே இல்லை. நோய் வெளிக்காட்டிக் கொள்வதற்கு முன்பே உரிய நடவடிக்கை எடுப்பது எளிது. அவசியமும் கூட.

இதற்காக ஹண்டே ஹாஸ்பிடலில் 'உடல்நலப் பரிசோதனை' முறையை நாங்கள் வடிவமைத்திருக்கிறோம். இதில் ஒரு சிறப்புப் பயிற்சிப் பெற்ற மருத்துவர், பரிசோதனைக்குரிய நபருக்கு விரிவான ஆய்வையும், இரத்தப் பரிசோதனை, எக்ஸ்ரே, ஈ.சி.ஜி., மற்றும் அல்ட்ராசௌண்ட் முதலான பரிசோதனைகளையும் மேற்கொள்வார். இப்பணிகளுக்கு பெண்களுக்காக தனி பெண் மருத்துவர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். தேவைப்பட்டால் ஒரு மகப்பேறு மருத்துவர், இதயநோய் நிபுணர் மற்றும் குடல்நோய் நிபுணர் கூட பரிசோதிப்பார்கள். ஆரம்பத்திலேயே, எளிய முறையில் நோயாளியின் உடல்நலம் பற்றிய அனைத்துத் தகவல்களும் தரப் படுவதோடு, நோய் வருமுன் தடுத்து குணமாக்குவதற்கான வழிமுறைகளும் கூட உடனடியாக ஹண்டே ஹாஸ்பிடலில் மேற்கொள்ளப் படும்.



உங்களது பிரத்தியேக உடல் நலத் தேவைகளுக்காக ஹண்டே ஹாஸ்பிடல் அதிக செலவில்லாமல் உங்களது வசதிக்கேற்ப பல்வேறு திட்டங்களை உருவாக்கி செயல் படுத்தி வருகிறது.

மிகக் குறைந்த கட்டணத்தில், சேவை மனப்பான்மையுடன் அனைவர்க்கும் 'மாஸ்டர் ஹெல்த் செக்கப்' (Master Health Check-up) செய்வதே *ஹண்டே ஹாஸ்பிடலின்* நோக்கமாகும்.



MAKING QUALITY CARE AFFORDABLE

## HANDE HOSPITAL

Centre for General Surgery, Surgical Gastro - Enterology, Laparoscopic Surgery, Surgery of the Breast, Plastic and Cosmetic Surgery.

44, Lakshmi Talkies Road, Shenoy Nagar,
Chennai - 600 030. Ph : 6442517, 6449422, 6447538.

E-Mail : hande@md2.vsnl.net.in
Webpage : http://www.handehospital.com

# இது ரஜினிக்குத் தெரியுமா?

**பொ**ங்கல், குடியரசு தினங்களன்று, சன் டி.வி.யில் லதா ரஜினிகாந்த் தொகுத்து வழங்கிய "ரஜினி - 25" நிகழ்ச்சியைப் பார்த்திருப்பீர்கள்.

போயஸ் தோட்டத்திலுள்ள ரஜினியின் வீட்டில் படமாக்கப்பட்ட லதா ரஜினியின் பேட்டியின் போது, அவருக்குப் பின்னால் இருந்த சத்ரபதி சிவாஜியின் ஓவியம் அனைவரின் கவனத்தையும் நிச்சயம் ஈர்த்திருக்கும்.



• சிவாஜியும் சிவாஜிராவும்

இந்த வீர சிவாஜியின் ஓவியத்தைத் தீட்டியவர், பெங்களூர் ராமமூர்த்தி நகரைச் சேர்ந்த இளம் ஓவியர் சிட்டிபாபு!

ரஜினி - திரையுலகில் நுழைந்து 25 ஆண்டுகள் நிறைவானதையொட்டி, லதா ரஜினிகாந்த், 'ரஜினி - 25' விழாவை ஏற்பாடு செய்ததைப் பத்திரிகைகளில் பார்த்த சிட்டிபாபு, ரஜினிக்குப் பரிசளிக்க இந்த ஓவியத்தை வரைந்தார்.

தாம் வரைந்த ஓவியத்துடன் 22.12.99 அன்று ரஜினியின் வீட்டுக்குச் சென்றார் சிட்டிபாபு.

ரஜினியின் வீட்டுக்குள், அந்த ஓவியத்தைப் பாதுகாப்பாகக் கொண்டு செல்வதே பெரும்பாடாகி விட்டது! காரணம், ரஜினியின் வீடு ஏற்கெனவே விழாக்கோலம் பூண்டு விட்டதுதான்.

வி.ஐ.பிக்களின் நெரிசலில் நுழைந்து, வீட்டுக்குள் பிரவேசித்த சிட்டிபாபு, தன்னந்தனியாக ஒரு மூலையில் நின்றிருந்த கோலத்தைப் பார்த்துவிட்ட லதா, இவர் அருகில் வந்து அன்புடன் விசாரித்தார்.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com


• சிட்டிபாபு


• வேணுகோபால்

தம்மைப் பற்றிய விவரங்களைச் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்ட இந்த ஓவியக் கலைஞர், சூப்பர் ஸ்டாருக்குத் தாம் கொண்டு வந்த பரிசைத் திறந்து காட்ட, லதா மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு சிட்டிபாபுவுக்கு ஆயிரம் ரூபாய் அன்பளிப்பாகக் கொடுத்ததுடன், கூடவே இரண்டாயிரம் ரூபாய் பெறுமான முன்ன 'ரஜினி -25' விழாவுக்கான நுழைவுச் சீட்டையும் அளித்து அனுப்பி வைத்தார்.

சிட்டிபாபுவுக்கும் திரையுலகப் பின்னணி உண்டு. ஐந்து கன்னடப் படங்களுக்கு ஓவியராகப் பணியாற்றியிருக்கிறார். சில படங்களில் துணை நடிகராகவும் நடித்துள்ளார். இவருடைய பெரியப்பாவான டி. வேணுகோபால், தமிழ்த் திரையுலகில் ஒப்பனைக் கலைஞராகப் பல ஆண்டுகள் பணியாற்றியவர்தான். குரு சிஷ்யன், தர்மத்தின் தலைவன், அதிசயப் பிறவி, தாய் மீது சத்தியம், ரங்கா, அன்புக்கு நான் அடிமை, அன்புள்ள ரஜினிகாந்த் போன்ற பதினைந்துக்கும் மேற்பட்ட திரைப் படங்களில் ரஜினிக்கே மேக்கப் மேனாகப் பணியாற்றியிருக்கிறார். வயதாகி விட்டதால், சில ஆண்டுகளாகத் திரையுலகிலிருந்து ஒதுங்கியிருந்தார்.

'ரஜினி - 25' விழாவைப் பற்றிக் கேள்விப் பட்டதும் அந்த விழாவில் கலந்து கொள்ள மிகவும் ஆர்வத்துடன் இருந்தார் வேணுகோபால். ஆனால் தள்ளாத வயதில் (73 வயது) உடல்நிலை பாதிக்கப்பட்டிருந்ததால் அந்த எண்ணத்தைக் கைவிட்டு ரஜினிக்குத் தம் கைப்பட ஒரு வாழ்த்துக் கடிதத்தை, (ரஜினியுடன் அவருக்கு இருந்த தொடர்பை, பழைய நினைவுகளை மலரும் நினைவுகளாக்கி) எழுதினார். ஆனால் அக் கடிதத்தைத் தபாலில் சேர்க்காமலே விட்டு விட்டார்.

ஓவியர் சிட்டிபாபு சென்னை வந்து வேணுகோபாலைச் சந்தித்து தாம் தீட்டிக் கொண்டு வந்த ஓவியத்தைக் காட்ட, மிகவும் நெகிழ்ச்சியுற்ற அவர், நோயுற்று இருப்பதால் ரஜினியை சந்திக்க இயலவில்லையே என அங்கலாய்த்திருக்கிறார். தபாலில் சேர்க்கப் படாத கடிதத்தைத் தேடிக் கண்டுபிடித்த போது அது கிழிந்து போயிருந்தது. கிழிந்து போன அந்தக் கடிதத்தையும் ரஜினி வீட்டுக்கு எடுத்துப் போன சிட்டிபாபு, அதை லதா ரஜினியிடம் காட்டியிருக்கிறார்.

லதாவைச் சந்தித்தாலும் ரஜினியைச் சந்தித்துப் பேச முடியாத ஏமாற்றத்துடன் திரும்பிய சிட்டிபாபுவுக்கு பெரியதொரு அதிர்ச்சி காத்திருந்தது. தன் தம்பி மகன் ரஜினியை சந்தித்துப் பேசிவிட்டு வருவான்; தொடர்புவிட்டுப் போனதை நினைவு கொண்டு ரஜினியே தன்னை மீண்டும் தொடர்பு கொள்ளக் கூடும் என்றெல்லாம் எண்ணியிருந்த டி. வேணுகோபால் அன்று மாலையே மரணமடைந்து விட்டார்!

— அ. சங்கரன்


The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

**FORM IV**

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Chennai |
| 2. Periodicity of Publication | : | Weekly |
| 3. Name of Printer | : | K. Rajendran |
| Nationality | : | Indian |
| Address | : | 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034. |
| 4. Name of Publisher | : | K. Rajendran |
| Nationality | : | Indian |
| Address | : | 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034. |
| 5. Name of Editor | : | Seetha Ravi |
| Nationality | : | Indian |
| Address | : | 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041. |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.2000

K. Rajendran
Publisher

டெல்லி மற்றும் பாண்டிச்சேரி
மக்களின் வசதிக்காக

தமிழக அரசின் நிதி நிறுவனம்

# 'பவர்ஃபைனான்ஸ்'

வழங்கும் ஓர் அரிய வாய்ப்பு !

## டெபாசிட் திரட்டும் முகாம்

### டெல்லி

இடம் : "டெல்லி தமிழ் சங்கம்"
தமிழ் சங்கம் மார்க், செக்டார் 5,
ஆர்.கே. புரம், புதுடெல்லி - 110 022.
தொலைபேசி: 6193964, 6193966

நாள் : 2-3-2000 முதல் 4-3-2000 வரை

நேரம் : காலை 10.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை

### பாண்டிச்சேரி

இடம் : ஹோட்டல் ராம் இன்டர்நேஷனல்,
398, அண்ணா சாலை,
பாண்டிச்சேரி - 605 001.
தொலைபேசி: 337230-39

நாள் : 5-3-2000 முதல் 7-3-2000 வரை

நேரம் : காலை 9.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை

வாருங்கள், இந்த வாய்ப்பை பயன்படுத்தி வாழ்வில் வளம் காணுங்கள்!




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894
மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com

"Also available on the Internet" www.tn.gov.in /
www.chennaionline.com / www.aaraamthinai.com



சூழல் அமைப்பையும் தனது பொறுப்பில் எடுத்துக் கொண்டு நடத்தி வருகிறார். மத்திய அரசில் பா.ம.க. பங்கு கொண்டு, தேசிய அளவில் முக்கியத்துவம் பெற்று வரும் சூழலில், அன்புமணியைப் பற்றிப் பல வதந்திகள். 'கட்சி மட்டத்தில் அன்புமணியின் தலையீடுகள் அதிகம்; பா.ம.க. அமைச்சர்களின் செயல்பாடுகளை அவர் கண்காணிக்கிறார்; டாக்டர் தனது அரசியல் வாரிசாக அவரை உருவாக்கப் பார்க்கிறார்' இப்படிப் பல.

அன்புமணியைச் சந்தித்துப் பேசினோம்.

''இதுவரை எந்தப் பத்திரிகைக்கும் நான் பேட்டி கொடுத்ததில்லை. இதுதான் என் முதல் பேட்டி'' என்று நம்முடன் இரண்டு மணி நேரம் அவர் பேசியவற்றின் தொகுப்பு :

டாக்டர் அன்புமணி, பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸின் ஒரே மகன். ஏற்காடு மாண்ட்போர்டு மற்றும் திண்டிவனம் செயிண்ட் ஆன்ஸ் பள்ளிகளில் ப்ளஸ் டூ வரை படிப்பை முடித்துவிட்டு சென்னை மருத்துவக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவர். பின்னர் சொந்த கிராமமான கீழசிவிரியில் சில வருடங்கள் பிராக்டீஸ். அதன்பின் குழந்தைகளின் படிப்பு காரணமாக சென்னை தி. நகருக்குக் குடி பெயர்ந்து விட்டார். இப்போது மருத்துவ பிராக்டீஸ் பின்னுக்குத் தள்ளப்பட, ரியல் எஸ்டேட் துறையில் பிஸியாகி இருக்கிறார்.

இது தவிர, அப்பாவால் துவக்கப்பட்ட 'பசுமைத் தாயகம்' என்று சுற்றுச்

''சுற்றுச் சூழல் பாதுகாப்பு என்பது அப்பாவின் 'பெட் சப்ஜெக்ட்'. பொதுவாகவே அப்பாக்கள் வெளியூர் சென்றால் திரும்ப வரும்போது குழந்தைகளுக்கு சாக்லேட், உடைகள் வாங்கி வருவார்கள். ஆனால் என் அப்பா வெளியூரிலிருந்து காரில் வந்து இறங்கினால், கூடவே செடி மற்றும் மரக் கன்றுகள்தான் இறங்கும். பாலாறு மற்றும் பவானி ஆறு மாசுபடுவதை எதிர்த்து பெரிய இயக்கமே நடத்தி இருக்கிறார். சில வருடங்

# பா.ம.கனவு

களுக்கு முன்னர் மெரீனா கடற்கரையைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி துடைப்பத்தைக் கையில் பிடித்து, களத்தில் இறங்கினார். எனவே, 'பசுமைத் தாய'கத்தை அவர் துவக்கியதில் வியப்பில்லை. அரசியல் சுமை அவரை அழுத்தியதால் அந்த அமைப்பை நடத்தும் பொறுப்பு என்னிடம் வந்திருக்கிறது. அப்பாவால் ஊட்டி வளர்க்கப்பட்ட சுற்றுச் சூழல் உணர்வு காரணமாக முழு ஈடுபாட்டுடன் பணியாற்றி வருகிறேன்.

''இப்போது இரண்டு பிரச்னைகளை எடுத்துக் கொண்டிருக்கிறோம். வேலூர் மாவட்டத்தில் தோல் தொழிற்சாலைகள் வெளிப்படுத்தும் கழிவு காரணமாக விளைநிலங்கள் தரிசாகப் போய் விட்டன. மத்திய அரசின் விவசாய இலாகா மூலம்

## முதல் முறையாக மனம் திறக்கிறார்

பாதிக்கப்பட்ட பகுதிகளை சர்வே செய்து நஷ்டாடு கொடுக்க ஏற்பாடு செய்கிறோம். மற்றொரு பிரச்னை, கடலூர் சிப்காட் வளாகத்தில் இயங்கும் ரசாயனத் தொழிற்சாலைகளால் உண்டாகும் சுற்றுச் சூழல் கேடுகளைப் பற்றியது. இந்த பாதிப்புகளை உடனடியாகத் தடுக்கா விட்டால் விரைவில் கடலூர், போபாலாகி விடும் அபாயம் உள்ளது. பசுமைத் தாயகம் இந்தச் சுற்றுச் சூழல் கேட்டை எதிர்த்து கடைசி வரை போராடும்.

"இந்தப் பணிகளைத் தவிர பள்ளி மற்றும் கல்லூரி வளாகங்களில் மரங்கள் நடுவது எங்களின் முக்கியமான செயல்பாடு. இரண்டு காரணங்களுக்காக பள்ளி, கல்லூரிகளில் மரங்கள் நடுகிறோம். ஒன்று, கால்நடைகளால் உண்ணப்படும் ஆபத்தில்லாமல், நன்றாகப் பாதுகாக்கப்பட்டு பராமரிக்கப்படும் வாய்ப்பு இருப்பது; மற்றொன்று, மாணவ, மாணவிகளுக்கு பசுமை உணர்வை வளர்க்க உதவுவது. இவைகளைத் தவிர இலவச மருத்துவ முகாம், ரத்த தான முகாம்களையும் அவ்வப்போது நடத்துகிறோம். இந்தியா முழுவதும் அடிப்படைக் கல்வியைப் பொறுத்தவரை ஒரே விதமான பாடத் திட்டம் வைக்க வேண்டுமென்பதும் எங்கள் நோக்கங்களில் ஒன்று!"

**"உங்களுக்கு அரசியலில் ஆர்வம் உண்டா?"**

"அப்பா அரசியல்வாதி! அப்படியிருக்கும் போது எனக்கு ஆர்வம் இல்லாமலா போய்விடும்? ஆர்வம் என்பது வேறு. அதில் இறங்கி செயல்படுவது என்பது வேறு. தற்சமயம் நான் அரசியல்வாதி அல்ல!"

**"பா.ம.க. விவகாரங்களில் நீங்கள் தலையிட்டு முடிவுகளைத் திணிப்பதாக – உங்கள் மேல் ஒரு குற்றச்சாட்டு சொல்லப்படுகிறதே!"**

பா.ம.க. சார்பில் போட்டியிட்ட உதய அரசு என் கல்லூரித் தோழர் என்பதால் ஸீட் கொடுக்கப்பட்டதாக எழுதினார்கள். அவர் ஒரு இன்ஜீனியர். என்னுடன் எப்படி படித்திருக்க முடியும்? கட்சியின் துவக்க காலத்திலிருந்தே அப்பாவுக்கு அறிமுகம் ஆனவர் அவர்."

**"பா.ஜ.க. அரசு 1998–ல் பதவிக்கு வந்த போது பா.ம.க.**



# ஆட்டிப் படைப்பது நானா?

"அடிப்படையில்லாத குற்றச்சாட்டு. பசுமைத் தாயகம் நிகழ்ச்சிகள் மாவட்டங்களில் நடக்கும் போது, கட்சிப் பிரமுகர்கள், தொண்டர்கள் பெருமளவில் கலந்து கொள்வார்கள். வலுவான கட்சிப் பின்னணிதான் எங்கள் அமைப்பின் பலம். அவ்வளவுதான். மற்றபடி கட்சி விவகாரங்களைக் கவனிக்க அப்பா இருக்கிறார்; கட்சித் தலைவர் இருக்கிறார். செயற்குழு, பொதுக்குழுக்கள் இருக்கின்றன. ரொம்பவும் வெளிப்படையாகவே சொல்லப் போனால், பல மாவட்டங்களில் கட்சிப் பொறுப்பில் இருப்பவர்களைக் கூட எனக்கு சரியாகத் தெரியாது. பத்திரிகைகளும் பரபரப்புக்காக எதையாவது எழுதி வருகின்றன. உதாரணமாக ராசிபுரத்தில்

**சார்பாக தலித் எழில்மலை 'அமைச்சராக்கப்பட்டார். 1999ல் அவர் கட்சியில் இருந்து விலகிய போது கொடுத்த பேட்டி ஒன்றில், 'நீங்கள் அவரது அமைச்சர் பணியில் தலையிட்டு மிகவும் தொல்லைப்படுத்தியதாகச்**

**ாக்டர் ராமதாஸின் மகன் அன்புமணி!**

சொன்னார்..."

"முற்றிலும் பொய். 'தலித்' அவர்களைப் பொறுத்தவரை கட்சி அவருக்கு எவ்வளவோ செய்திருக்கிறது. ஆனால் அவர் கட்சிக்கு என்ன செய்தார்? அமைச்சராக இருந்தபோது தொண்டர்களை மதித்ததில்லை. தமிழ்நாட்டிலிருந்து 2000 கி.மீ. கடந்து தில்லியில் தன்னைப் பார்க்க வந்த தொண்டர்களை இவர் நடத்தியவிதம் கட்சியில் எல்லோருக்கும் தெரியும். மற்ற கட்சிகளின் அமைச்சர்கள் தங்கள் தலைவர்களின் படங்களை அறையில் மாட்டி வைத்திருப்பார்கள். ஆனால் இவர் கண்டுகொண்டதில்லை. தான் ஏதோ சுயமாக உருவான தலைவர் போல் செயல்பட்டார். தாழ்த்தப்பட்டவர்களைக் கைதூக்கி விட வேண்டுமென்பது அப்பாவின் ரத்தத்தில்



**"ஏதாவது பேசினே செருப்பால அடிப்பேன்!"**

**"சும்மா இருய்யா! இது ஒண்ணும் மாநகராட்சிக் கூட்டமும் இல்லை, நீயும் நானும் கவுன்சிலர்களும் இல்லை. இது சாதாரண ஊர் கூட்டம்!"**

**– லட்சுமிபிள்ளை**

ஊறிய ஒன்று. பொருளாதார அடிப்படையில் பார்த்தால் மிகவும் பிற்பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும் ஒரே தட்டில் நிற்கும் நிலைதான் இருக்கிறது. இவர்களின் முன்னேற்றத்துக்குத்தான் பா.ம.க. பாடுபடுகிறது. தலித் எழில்மலை மற்றும் அவரது மகளின் பேட்டிகள், பேச்சுக்கள் அப்பாவை மிகவும் வேதனைப்படுத்தின என்பதுதான் நிஜம்!"

**"இப்போது மத்தியில் பா.ம.க. சார்பாக அமைச்சர்களாக இருக்கும் சண்முகம், பொன்னுச்சாமி ஆகியோர் உங்கள் ஆலோசனைப்படிதான் செயல்படுவதாகச் சொல்லப்படுகிறதே?"**

"இதுபோன்ற குற்றச்சாட்டுக்கள் பற்றி எனக்குக் கவலையில்லை. ஏனென்றால் அதில் சிறிதும் உண்மையில்லை. இப்போதிருக்கும் பா.ம.க. அமைச்சர்கள் மிகவும் திறமையானவர்கள், சிந்தித்து செயல்படுபவர்கள். கட்சித் தொண்டர்களை மதிக்கத் தெரிந்தவர்கள். அவர்களுக்கு ஏதாவது ஆலோசனை தேவையென்றால் அப்பா இருக்கிறார்; கட்சி இருக்கிறது. நான் எதற்குத் தலையிட வேண்டும்?"

**"அப்படியென்றால் உங்கள் தலையீடே கிடையாதா?"**

"தலையீடு என்று எதைச் சொல்கிறீர்கள்? பசுமைத் தாயகத்தை நடத்துபவன் என்ற முறையில் ஏராளமான பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறேன். அப்போது சிபாரிசு வேண்டி பல மனுக்கள் என்னிடம் கொடுக்கப்படுகின்றன. அவற்றைப் பெற்று எங்கள் அமைச்சர்களிடம் கொடுத்து 'ஏதாவது செய்ய முடியுமா' என்று பார்க்கச் சொல்வேன். அது கூடச் செய்யாவிட்டால் எப்படி? எனக்கிருக்கும் 'செல்வாக்கு' பற்றி ஒரு உதாரணம் சொல்கிறேன். என் நெருங்கிய உறவினரான ஒரு பட்டதாரி இளைஞருக்கு கடந்த ஒரு வருட காலமாக வேலை வாங்கித் தர முயற்சி செய்கிறேன். நடக்கவில்லை."

**"முதல்வர் மகன் ஸ்டாலினை துணை முதல்வராக்க வேண்டும் என்று உங்கள் அப்பா பேசியதற்குக் காரணம் அவரும் தம் மகனை (அதாவது உங்களை) அரசியலில் வாரிசாக உருவாக்கும் எண்ணத்தில் இருப்பதால்தான் என்று சொல்லப்படுகிறதே?"**

"அரசின் திட்டங்களுக்குப் பெரும் தடைகளாக அதிகாரிகள் இருக்கிறார்கள் என்பது அப்பாவின் அழுத்தமான கருத்து. எனவே எனது உறவினர் ஒருவர் வீட்டுத் திருமணத்தில் பேசும் போது, 'அதிகாரிகளைக் கண்காணிக்க முதல்வர், ஸ்டாலினைத் துணை முதல்வராக்க வேண்டும்' என்று பேசினார். அதற்கு வேறெந்த உள்நோக்கமும் கிடையாது. நான் அப்பா போல மதிக்கும் வாழப்பாடியார் கூட இதுபற்றிக் கிண்டல் செய்திருப்பதுதான் வருத்தத்தை அளிக்கிறது!"

**"அது சரி; உங்களுக்குப் பிடித்த அரசியல்வாதி யார்?"**

"இதில் சந்தேகமென்ன? அப்பாதான். குறிப்பாக அப்பாவின் வெளிப்படையான பேச்சும், பொது மக்களுடன் நேருக்கு நேராகப் பேசிப் பழகும் விதமும் எனக்கு மிகவும் பிடிக்கும்!"

சந்திப்பு : **ப்ரியன்**

படங்கள் : **ராஜன்**

**நா**லு பேர் காஷ்மீரிலிருந்து கன்யாகுமரி வரை சைக்கிளில் சுற்றுப்பயணம் போகிறார்கள். நாற்பது நாள் பயணம்.

'ஏதாவது கின்னஸ் முயற்சியாக இருக்கும்' என்ற எண்ணம் ஏற்படலாம். ஆனால் இந்தப் பயணத்தின் நோக்கம் சாதனையைப் பறைசாற்றுவது அல்ல. மனிதாபிமானத்தைத் திரட்டுவது. ஆதரவற்ற குழந்தைகள், கைவிடப்பட்ட பெண்கள் ஆகியோருக்கு ஆதரவுக்கரம் நீட்டச் செய்து மற்றவர்களை இதில் ஈடுபடுத்துவதற்காகவே இந்த அசுரப் பயணம்.

வியப்பான விஷயம், சம்பந்தப்பட்ட நால்வரும் வெவ்வேறு தேசத்தைச் சேர்ந்தவர்கள்.

சென்னையைச் சேர்ந்தவர் ராம்குமார். இந்த 36 வயதுக்காரர் துபாயிலுள்ள ஸ்டாண்டர்ட் சார்டர்ட் வங்கியில் மார்க்கெடிங் நிர்வாகியாகப் பணியாற்றுகிறார். 'வோர்ல்டு 4 இந்தியா' என்ற இந்த சைக்கிள் சாதனை யோசனை இவரது மூளையில் உதித்ததுதான். மணவாழ்வில் குழந்தைப்பேறு இல்லாமல் போக, இவரும் இவரது மனைவியும் பெங்களூரிலுள்ள 'ஆச்ரயா' என்ற மையத்திலிருந்து ஒரு குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்ளத் தீர்மானித்தனர். அந்தச் சமயம் திருமதி ராம்குமார் கருத்தரித்தார். இருந்தும் கொடுத்த வாக்கை மாற்றப் பிரியப்படாமல் தேர்வு செய்திருந்த குழந்தையை தத்தெடுத்துக் கொண்டனர்.

'ஆச்ரயா'வுடன் இந்தக் காலகட்டத்தில் அவர்கள் கொண்ட தொடர்பு ஆதரவற்ற குழந்தைகளின் நிலையையும், அவர்களுக்குச் சில அடிப்படைத் தேவைகளையாவது பூர்த்தி செய்து தரவேண்டிய சமுதாயக் கடமையையும் உணர்த்தியது.

1995-ல் துபாய் மற்றும் லெபனானிலுள்ள மனநலம் குன்றிய குழந்தைகளுக்காக லெபனானில் ஒரு சைக்கிள் சாதனை செய்து



• ராம்குமார்

நிதி திரட்டிய அனுபவம் கொண்ட ராம்குமார் இந்தியாவிலும் அதே உத்தியைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்தார்.



**55** வயதுக்காரர் ஒருவர் இந்த நால்வர் அணியில் இடம் பெற்றிருக்கிறார். மால்கம் கிரகரி என்ற இந்த பிரிட்டிஷ்காரருக்கு யோகா, இந்துமதம், தத்துவம் என்ற பலவித இந்திய ஐட்டங்களின் மீது ஏற்கெனவே மயக்கம் உண்டு. ஒரு நல்ல நோக்கத்திற்காக தனது கனவுநாடான இந்தியாவுக்கு வருவதில் த்ரில்லாகியிருக்கிறார் மனிதர்.

படர் பிக்ரீ என்ற துபாய்க்காரர் டீனேஜைத் தாண்டாத இளைஞர். கனடா பல்கலைக்கழகத்தில் கிராபிக்ஸில் மேற்படிப்பு படிக்க இருக்கிறார். நடுவே இந்த இந்திய விஜயம். வாழ்வில் தாம் சாதிக்க நினைப்பது எது என்பதைத் இந்த மனிதாபிமானத்தைத் தட்டியெழுப்பும் சைக்கிள் முயற்சி தெளிவுபடுத்தும் என்று நம்புகிறார்.

எதியோப்பியாவில் பிறந்தவர் அலெமயெஹோ கோஷிம் (நாக்கு சுளுக்கிக் கொள்ளாமலிருக்க அலெம் என்று பாதுகாப்பாக இவர் பெயரை சுருக்கித்தான் மற்றவர்கள் அழைக்கிறார்கள்) ஏற்கெனவே பல ஓவியங்களை வரைந்து அவற்றின் விற்பனை மூலம் கிடைக்கும் தொகையை தர்மகாரியங்களுக்கு செலவிட்ட நல்ல மனம் உண்டு இவருக்கு. சைக்கிள் பயணத்தின் போது தனது மனதைக் கவரும் இந்திய கிராமக் காட்சிகளை ஓவியங்களாக வரைந்து, அவற்றையும் விற்று இந்த நல்ல காரியத்துக்கு உதவ எண்ணம்.

இந்தப் பயணத்தின் போது இவர்கள் திரட்டும் நிதி பெங்களூர் ஆச்ரயாவுடன், பெங்களூரிலேயே உள்ள 'தாரா' என்ற கைவிடப்பட்ட பெண்களுக்கான நிலையத்துக்கும், துபாயிலுள்ள குழந்தை சிகிச்சை மையத்துக்கும் பயன்படப் போகிறதாம்.

விரக்தியையும், சோகத்தையும் மட்டுமே சொந்தம் கொண்டுள்ள கண்களில் நம்பிக்கை ஒளியும், ஆனந்தக் கீற்றும் தெரிவதற்காக இந்த நால்வரும் எடுத்துக் கொண்டுள்ள இந்த முயற்சிக்கு வாழ்த்துக்களும் ஆதரவும் தருவதுதானே நியாயம்?

**— மஞ்சுளா ராமகிருஷ்ணன்**



# ஈஸி, ரொம்ப ஈஸி!

'ஏழாவது மனிதன்' முதல் 'சொல்லாமலே' வரை, 35 திரைப்படங்களில் ஏதாவது ஒரு வேடத்தில் நடித்தாலும், இப்போது சத்தியேந்திராவின் உயிர்மூச்சு மொழிகள்தாம்.

''60 மணி நேரம் செலவழிக்கத் தயாராய் இருந்தால் போதும். அந்நிய மொழி ஒன்றைக் கற்றுக் கொண்டு விடலாம்'' என்கிறார் சத்தியேந்திரா. தாய்மொழி தெலுங்கு. படித்த மொழி கன்னடம். இரண்டு எம்.ஏ. பட்டங்கள். ஒன்று இலக்கியத்தில்; இன்னொன்று தத்துவத் துறையில்!

பெங்களூரில் அல்லியான்ஸ் பிராங்கைஸில் பிரெஞ்சு படித்துவிட்டு, 300 ரூபாயுடன் சென்னை வந்தவர்தான். சில திரைப்படங்களிலும், துண்டுப் படங்களிலும், டாக்குமென்டரிகளிலும் நடித்தாலும் அவற்றில் கிடைத்த பணம் போதவில்லை...

சென்னையில் மாக்ஸ் ம்யுல்லர் பவனில் சேர்ந்து ஜெர்மன் கற்றுக் கொள்ள ஆரம்பித்தவர், தீவிர திரைப்பட ஆசையை மறந்தார். ஜெர்மன் மொழிபெயர்ப்பாளராகவும், இன்டர்பிரட்டராகவும், ஜெர்மன் கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது பெரிய கௌரவமாக இருந்ததாம்.

''இப்போது எத்தனை மொழிகள் தெரியும், சத்தியேந்திரா?''

''தெலுங்கு, கன்னடம், ஹிந்தி, ஆங்கிலம் தவிர, பிரெஞ்ச், ஜெர்மன் ('ரொம்ப டிஃபிகல்ட் லாங்வேஜ்'); சைனீஸ்; ஜப்பானீஸ். ஓர் அர்ஜன்டைன் தோழி மூலம் ஸ்பானிஷ், இத்தாலியன்! பிரெஞ்சு தெரிந்தால் ஸ்பானிஷ் ஈஸி. இரண்டும் தெரிந்தால் இத்தாலிய மொழி ஈஸி. இவை எல்லாம் தெரிந்தால் போர்ச்சுகீசிய மொழி ஈஸி. ஸ்வீடிஷ் தெரிந்தால், நார்வேஜியன், டேனிஷ் மொழிகள் ஈஸி. அதேபோல, ஜெர்மன் தெரிந்தால் ஸ்வீடிஷ் ஈஸி'' என்று அடுக்குகிறார்.

இவர் மொழிகள் கற்கும் முறையே அலாதியானது. எல்லா மொழிகளையும் வீட்டிலிருந்தபடியே புத்தகங்களையும், காசட்டுகளையும் வாங்கி வைத்துக் கொண்டே படித்து விடுகிறார். கற்றுக் கொடுக்கவும் செய்கிறார்.

தெரியாத மொழியாக இருந்தால் கூட, என்ன எழுதப்பட்டிருக்கிறதோ, அதன் அர்த்தத்தைச் சுருக்கமாக எழுதிக் கொடுத்துவிட முடியும் என்கிறார். ஆனால் அந்த மொழி எழுத்துக்கள் ரோமன் ஸ்கிரிப்டில் இருக்க வேண்டும். அவ்வளவுதான். பிறகு அந்த மொழியின் இலக்கணப் புத்தகத்தையும், டிக்ஷனரியையும் வைத்துக் கொண்டு அதன் சாராம்சத்தை எழுதிக் கொடுத்து விடுகிறார்.

''இது நானே கண்டுபிடித்த டெக்னிக்!'' என்கிறார் சத்தியேந்திரா.

''டாக்டர் ராஜலட்சுமி என்பவருக்கு இத்தாலிய மொழி கற்றுக் கொடுக்க வேண்டியிருந்தது. தினமும் இரண்டு மணி நேரம் சொல்லிக் கொடுத்தேன். முதல் நாள் நான் காசட்டிலும், புத்தகத்திலும் படித்துவிட்டு மறுநாள் போய்ச் சொல்லிக் கொடுத்தேன்... ஒரே சமயத்தில் இரண்டு மூன்று மொழிகள் கூடக் கற்றுத் தர வேண்டியிருக்கும். அப்படியும் கூடச் சமாளித்திருக்கிறேன்!'' என்கிறார்.

பேஜரில் இவரைப் பிடித்து டிரான்ஸ்லேஷன் வேலை கொடுத்து விட்டால், சொல்கிற நேரத்தில் வேலையை முடித்துவிட்டு, கிடைக்கிற பணத்தை உடனே செலவழிக்கத் தொடங்கி விடுகிறார்.

''பணம் வரும். அதற்கு அடிமையாகி விடக் கூடாது. அதே போல, என்னுடைய நேரத்துக்கு நானே ராஜா. மாலை 6 முதல் 9 வரை மியூசிக்கும், டான்ஸும் ரசிப்பேன். அப்போது லட்ச ரூபாய் தருகிறேன் என்றாலும் ஒப்புக் கொள்ள மாட்டேன்!'' என்கிறார்.

தற்போது க்ரீக், ஹங்கேரியன், லத்தீன், ஹீப்ரு, கொரியன் மொழிகள் படித்து வருகிறார். ''இறப்பதற்குள் 25 மொழிகளாவது கற்றுக் கொண்டுவிட வேண்டும் என்பதுதான் என் ஆசை!'' என்கிறார் சத்யேந்திரா.

— எஸ்.வி.என்.

படம் : ஸ்ரீஹரி

# குமுதம் பக்தி



மார்ச் 2000 ஸ்பெஷல்

பிரம்மாவிற்கு ஒரு கோயில் ✓

மோகினியின் பிள்ளைகள் ✓

பாலகுமாரனின் 'ஏசாலம்' ✓

பெண்களின் சபரிமலை ✓



கண்ணதாசனின்
அர்த்தமுள்ள இந்துமதம் ✓

என்று ஏராளமான
பக்திப் புதையல்கள்



## இலவசம்

1, வாஸ்து யந்திரம்

2, அபிராமி அந்தாதி கையடக்கப் புத்தகம்

விலை ரூ 10 மட்டுமே

## தற்போது விற்பனையில்





• ஓரத்தில் தெரிவது சாக்கடைதான்; குப்பை மேடல்ல!

"எங்க உடையப்பா காலனிக்கு தார் ரோடு போடச் சொல்லியும், சாக்கடை வசதி செஞ்சு கொடுக்கும்படியும் அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம், நகர மேயர் டாக்டர் சூடாமணி, தொகுதி கவுன்சிலர் நடேசன், கலெக்டர், மாநகராட்சி கமிஷனர், டி.எஸ்.பி.ன்னு ஒருத்தர் பாக்கி இல்லாமல் பெட்டிஷன் கொடுத்தும் இதுவரை ஒண்ணும் நடக்கலேங்க!" என்றனர் காலனி தலைவி நல்பீலாவும் செயலர் ஆர். சந்திராவும். (முதலமைச்சர், பிரதமர், ஜனாதிபதி இவர்கள் மட்டும்தான் பாக்கி!) சென்னை போலவே உடையப்பா காலனிக்கும் எக்ஸ்நோரா அமைப்பு இருக்கிறது; அதனால் தெரு சுத்தமாகவே இருந்தது.

"ரோடு போடறதா முதல்ல பேப்பர்ல வந்துது. பிறகு கேட்டா பணம் இல்லேன்னுட்டாங்க. மினிஸ்டர்ஸ் வர ரோடுங்களை மட்டும், நல்லா இருந்தாக்கூட, மறுபடி மறுபடி செலவழிச்சு சீர் பண்ணறாங்க!" என்றார் நளினா சரவணன். இவர் குகைப் பகுதியில் உள்ள, புலிக்குத்தி தெரு எக்ஸ்நோரா செயலர்.

"எனக்குத் தெரிஞ்சு இங்க ரோடு போட்டு முப்பது வருஷம் ஆச்சு!" என்றார் சந்திரா. தயாராக மடித்து வைத்திருந்த 'தினத்தந்தி' 20.12.99 இதழை எடுத்து, சேலம் மாநகராட்சியின் ஒப்பந்த அறிக்கையைச் சுட்டிக்காட்டி, "பாருங்க, சீரியல் நம்பர் 122/131: மண் சாலையைத் தார் சாலையாக மாற்றுதல்னு போட்டிருக்காங்க. இதுவரை ஒண்ணும் நடக்கலே!" என்றார்.

"சொத்து வரியை முன்னே எல்லாம் பாங்குல கட்டலாம்னு வச்சிருந்தாங்க. இப்ப அதை எடுத்துட்டாங்க. மாநகராட்சியில பொட்டி ஒண்ணு வச்சிருக்காங்க. அதுல போடலாம். நேர்ல பில் கலெக்டர் வரபோது செக் கொடுத்தா, வாங்கிக்க மாட்டேங்கறார். வாங்கிட்டாலும் ரசீது தர மாட்டேங்கறார். பெரிய பிரச்னைங்க!" என்றனர் இருவரும்.

"மேயர் நல்லாத் தெரிஞ்சவர். நல்லவர். எங்களைப் பார்த்த உடனே, 'ரோடுதானே? போட்டுடறேம்'பார். நீங்க கேளுங்க!"

அங்கிருந்து புறப்பட்டு, அணை மேட்டில் இருந்து அப்ஸரா தியேட்டர் வரை, திருமணிமுத்தாறில் கூலித் தொழிலாளர் கட்டியிருந்த குடிசைகளை இடித்து, சாலையாக மாற்றி இருந்ததைப் பார்க்கப் போனால்–

ஒரு சில பெரிய கட்டடங்கள் தவிர, குடிசைகள் இருந்த இடம் சுத்தமாக மழிக்கப்

• ராமநாராயணன், ஆறுமுகசாமி



# "நட்டுவாக்களி வராதபோது செந்தேள் வரும்!"



• உடையப்பா காலனி: காலியான தோட்டமும் புலம்பும் விசுவநாதனும்

பட்டிருந்தது.

எதிரே பட்டறை வைத்திருந்த சரவணன் என்பவரை விசாரித்தோம். "இடிச்சிட்டாங்க. வேற எடமும் அவங்களுக்குக் கொடுத்திட்டாங்க, சித்தர்கோயில் போற ரூட்ல."



• பிரச்னைக்குரிய ஓடை

"சேலத்தாம்பட்டியில் இடம் கொடுத்தாங்க. யாருமே போகலே. எல்லாரும் வாடகைக்கு வீடு எடுத்து, உடையார் காட்டுக்கு வந்திட்டாங்க!" என்றார் பழனியம்மாவும், சரகவும்.

"கார்ப்பரேசன்ல கேப்பீங்களா?" என்றார் சரவணன்.

'செவ்வாய்ப்பேட்டைப் பகுதியில், வெங்கடப்பன் சாலை முடிகிற இடத்தில், பால் மார்க்கெட் அருகே, அதன் இடப்புறம் சாக்கடை ஓடிக்கொண்டிருக்கிறது. பல மாதங்களாகச் சுத்தப்படுத்தப்படாமல் இருக்கிறது. பக்கத்தில் உள்ள பள்ளிக்கூடம் பின்னால் உள்ள சந்தில், குப்பையைக் கொட்டுவதால் சாக்கடை இன்னும் அடைத்துக் கொள்ளுகிறது' என்று வாசகி ஒருவர் எழுதியிருந்த இடத்தைப் பார்த்தோம். சாக்கடை தடையில்லாமல் ஓட வழியின்றி, குப்பை கூளமாக இருந்தது. அதைவிடப் பயங்கரம், நடு வீதியிலேயே வாயைப் பிளந்து கொண்டு ஒரு பிரும்மாண்ட சாக்கடை! 'மேயர்ட்ட சொல்லுங்க' என்கிற மாதிரி இருந்தது அதன் சலசலப்பு!



• காசிநாதன்

புதிய பஸ் நிலையத்திலிருந்து சுமார் 300 அடி தூரத்தில் உள்ள ஆலமரக்காடு பகுதியில், ஏரிக்காடு, ஆல மரக்காடு, வி.எம்.ஆர். நகர், மெய்யனூர் ஆகிய இடங்களில் உள்ள சுமார் 1000 வீடுகளுக்கு குடிக்க நல்ல தண்ணீர் கிடைப்பதில்லை என்று எழுதியிருந்தார் வாசகர் ஆர். சுப்பிரமணியம்.

"உப்புத் தண்ணிதான்

• உடையப்பா காலனி பெண்கள்



**சே**லம் மேயர் டாக்டர் சூடாமணியிடம் பொதுமக்கள் குறைகளை எடுத்துச் சொன்ன போது, சூடாகாமல், பொறுமையாகப் பதில்கள் சொன்னார்:

**● வெங்கடப்பன் சாலை முடிகிற இடத்தில், பாலத்தருகே இடப்பக்கம் சாக்கடை பல மாதங்களாகச் சுத்தப்படுத்தப்படாமல் இருக்கிறது. ராஜாஜி சாலையிலும் ஓடையில் சாக்கடை நீர் கலந்து விஷப் பூச்சிகள் வீட்டுக்குள்ளே வந்து விடுகின்றன. இரண்டு இடங்களிலுமே, பக்கத்தில் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றனவே?**

வெங்கடப்பன் தெருவும் தம்மண்ணன் தெருவும் சந்திக்கிற இடம்தான் நீங்கள் சொல்லுவது. சரியா? அங்கே வட்ட வடிவத்தில் திறந்த சாக்கடை ஒன்றையும் பார்த்திருப்பீர்களே? அங்கே பெரிய டிரெய்னேஜ் போடப் போகிறோம். முதலில் நீங்கள் நகரின் அமைப்பைப் புரிந்து கொள்ளுங்கள். முன்பு சர்க்கிள் ஏரியாக இருந்தது இப்போது மகாத்மா காந்தி ஸ்டேடியமாக மாறிவிட்டது. இன்னொன்னு குண்டுசட்டி ஏரி. ஏற்காட்டிலிருந்து வருகிற தண்ணீர் இதில் வந்து சேர்ந்து கொண்டிருந்தது. தெரிந்தோ தெரியாமலோ இந்த இடத்தை லாரி ஸ்டாண்டாக மாற்றிவிட்டார்கள்! இருந்தாலும், பக்கத்துத் தெருவில் பெரிய டிரெயினேஜ் கட்டியிருக்கிறோம். இது சின்ன டிச். இரண்டையும் கனெக்ட் பண்ணணும். இந்த வேலையை எடுத்துச் செய்துகொண்டிருக்கிறோம். முடிந்த பிறகு இந்த பிரச்னை இனி இருக்காது.

**● ரெட்டியூர் எக்ஸ்சர்வீஸ்மன் காலனியில் ரோடுகள் சரியாக இல்லை. தெரு விளக்குகள் கூட இல்லையே?**

முன்பு 20 சதுர கிலோ மீட்டராக இருந்த நகரம், இப்போது 100 சதுர கிலோ மீட்டராக வளர்ந்துவிட்டது. ஆனால் 20 சதுர கி.மீ. பரப்பளவிலிருந்து என்ன இன்கம் வந்து கொண்டிருந்ததோ அதேதான் இப்போதும் வந்துகொண்டிருக்கிறது. காரணம், கூடுதலாகச் சேர்க்கப்பட்ட ஏரியாவிலிருந்து கிடைக்கிற வருமானம் சொற்பமானது. வரி செலுத்தும் மக்கள், 'எங்களிடம் டாக்ஸ் வாங்கி, அங்கே போய் ஏன் செலவழிக்கிறீர்கள்?' என்று கேட்கிறார்கள். என்ன செய்வது?

**● தெருக்களில் குப்பைகள் அள்ளப்படுவதில்லை. அசுத்தமாக இருக்கிறது?**

காலை ஆறு மணிக்கு ஒரு தடவை குப்பை எடுத்தால், எட்டு மணிக்கு வீட்டு வாசலில் அல்லது தெருவில் குப்பையைக் கொண்டு வந்து கொட்டுகிறார்கள்! மறுபடி அனுப்புவதுதானே என்று கேட்பீர்கள். இரண்டாம் தடவை அனுப்ப டீசல் செலவு ஆகிறது. சரி, ஆனால் ஆகட்டும் என்று ஒரு நாள் அனுப்பினோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். மறு நாள், இரண்டாம் ட்ரிப் போகாமலே டீசல் செலவை எழுதுவார்கள். நீங்கள் கண்ட்ரோல் பண்ண முடியாதா என்று கேட்பீர்கள். ஓபனாகவே சொல்லுகிறேன்: I am the toughest Mayor. என்னையும் மீறி சில காரியங்கள் நடந்துவிட வாய்ப்பு ஏன் கொடுக்க வேண்டும்? நான் ஒரு டாக்டர். மக்களுக்குப் பொதுவான சில சுகாதார நடவடிக்கைகளைச் சொல்லிக் கொடுக்க முயன்று வருகிறேன். செவ்வாய், வியாழன், சனி கிழமைகளில் நகரத்தை நாலு ஸோன்களாகப் பிரித்து, 400–500 பேர் ஒரு ஸோனுக்குப் போட்டு, மாஸ் க்ளீனிங் செய்கிறோம். கடைகளுக்கு நேரே போய், கையெடுத்துக் கும்பிட்டுக் கூட 'உங்கள் இடத்தைச் சுத்தமாக வைத்திருக்க உதவுங்கள்' என்று கேட்கிறோம். உங்களைப் போன்ற பத்திரிகையாளர்கள், சமூக முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்கள், எங்கள் பிரச்னையின் மறுபக்கத்தையும் எடுத்துச் சொல்ல வேண்டும் என்பது என் வேண்டுகோள்.

**● சொத்து வரி செலுத்துபவர்கள், செக் கொடுத்தால் ரசீது கொடுப்பதில்லையாம். முன்பு வங்கிகளில்**

# மேயர்

**சொத்துவரி செலுத்தும் வசதி இருந்தது. இப்போது ஏன் இல்லை?**

நான் முன்பு சேர்மனாக இருந்தபோதுதான் வங்கிகளில் சொத்துவரி கட்டும் ஏற்பாட்டை அறிமுகம் செய்தேன். செக் கொடுப்பவர்கள், சில வேளைகளில் அவை பவுன்ஸ் ஆகிவிடுகிற மாதிரி தவறாகக் கொடுப்பதால், பில் கலெக்டர்கள் செக் ஏற்கவே தயங்குகிறார்கள். என்றாலும், மறுபடி பழையபடியே வங்கிகளில் வரி செலுத்த ஏற்பாடு செய்கிறேன்., செக் கொடுத்தால் உடனே ரசீது தரவும் இனி

---

*கிடைக்குது. ஒரு குடத்துக்கு ஒரு ரூபா. தண்ணி வராத அன்னிக்கு ஒரு குடம் ரெண்டு ரூபா கொடுத்து வாங்கறோம்" என்கிறார் கடையும், வீடுமாக இருக்கும் வி.எம். கணேசன்.*

*"போர் தண்ணி ஒரு நா விட்டு ஒரு நா வரும். மேட்டூர் தண்ணி வேணும்னா பன்ளப்பட்டி, மூணுரோடு போய்ப் பிடிச்சுட்டு வருவோம். ஒரு குடம் 50 காசுதான்.*

ஆவன செய்கிறேன். சரிதானே?

● **மயானம் ஒரு தீராத பிரச்னையாகி இருக்கிறது. அரை கி.மீ. தூரத்தை, நாலு கி. மீ. சுற்றிப் போக வேண்டியிருக்கிறதே?**

மேயர் என்கிற முறையில் இந்த நகரின் ஒவ்வொரு தெருவும், மூலையும் எனக்கு மனப் பாடம்... நீங்கள் சொல்லுகிற இடத்தைப் பொறுத்தவரை, வி ஹேவ் டு அக்வயர் சம் லேண்ட். அப்படியும் பண்ணினோம். ஆனால் அது கோர்ட் கேஸ் ஆகிவிட்டது! என்னால் மேற்கொண்டு செயல்பட முடியவில்லை. அதனால்தான் சொல்லுகிறேன்: ஒரு மேயருக்கு ஜுடிஷியல் பவரும், போலீஸிங் பவரும் கூடவே வேண்டும். அப்போதுதான் தமது நகரத்துக்கு அவரால் நன்மை செய்ய முடியும்.

● **அணை மேட்டிலிருந்து அப்சரா தியேட்டர் வரை குடிசைகள் இடித்துப் போடப்பட்டிருக்கின்றன....**

அங்கே இருக்கிற கல்யாண மண்டபத்திலிருந்து அப்சரா தியேட்டர் வரை ரோடு போடுவதாக ஒரு ப்ளான் அரசாங்கத்துக்குக் கொடுத்திருக்கிறோம். அமைச்சரிடமும் சொல்லி இருக்கிறோம். 10 கோடி ரூபாய் அரசு தருவதாக இருந்தால் இந்தத் திட்டம் நிறைவேறும். டிராஃபிக் பிரச்னைகளும் தீரும். பட்ஜெட்டில் கூட முதல்வர் இதைக் குறிப்பிட்டிருக்கிறார். அங்கே இருந்தவர்களுக்கு மாற்று இடம் கொடுத்திருக்கிறோம்.

அழித்து வருகிறோம். பொதுமக்கள் தங்கள் வீடுகளில், திறந்த பாத்திரங்களில் வைக்கிற தண்ணீரை மூடுவதில்லை. டாங்கை மூடுவதில்லை. செப்டிக் டாங்க் உச்சியில், காற்று போகிற இடத்தில் வலை போடுங்கள் என்றால் போடுவதில்லை. நாங்கள் ஆட்களை அனுப்புகிறோம்– உதவி செய்ய. அனுமதிப்பதில்லை!



# விருப்பம்!

● **உடையப்பா காலனியில் தார் ரோடு?**

கட்டாயம் போடப் போகிறோம். டெண்டர் கோரியபடி எல்லாம் முடிவாகி விட்டன. விரைவில் பணி துவங்கிவிடும்.

● **நகரில் கொசுத் தொல்லை?**

இதற்கு இரண்டு முக்கிய காரணங்கள். ஒன்று, அண்டர் கிரவுண்ட் டிரெயினேஜ் இல்லாதது: இரண்டு, பதினாலு கி.மீ. தூரம் ஓடும் திருமணி முத்தாறு... நாங்களும் சிறிய, பெரிய மெஷின்கள் வைத்து கொசுக்களை

அவர்களுக்கே அக்கறை இல்லாதபோது நாங்கள் என்ன செய்ய முடியும்?

● **கடைசியாக, தண்ணீர்ப் பிரச்னை...**

புதிதாகச் சேர்ந்த ஏரியாக்களுக்கு லாரி மூலம் நீர் வழங்க ஆறேகால் கோடி ரூபாய் திட்டம் ஒன்றும், பெரிய அளவில் 24 கோடி ரூபாய் நீர்த் திட்டம் ஒன்றும் ஆரம்பித்திருக்கிறோம். இவை முடிந்ததும் தண்ணீர் ஒரு பிரச்னையாக இருக்காது. என்னுடைய பதவிக் காலத்திலேயே இதைச் செய்து முடித்து விடுவேன்!

---

*ஆஸ்தம்பட்டி டாங்குக்குப் போனா காக கொடுக்க வேணாம். பிடிச்சுட்டு வரலாம்''* என்கிறார் பி. மோகன்.

*"காவேரி தண்ணிக்கு லைன் போட்டுருக்காங்க. எந்த வருசம் கனெக்ஷன் கொடுக்கறாங்கன்னு தெரியலே. ஒவ்வொரு வீட்டுக்கும் பத்தாயிரம் ரூபா கட்டி இரண்டு வருசம் ஆயிருச்சு!"* என்கிறார் லட்சுமி. தொகையை



''இந்தியாவில் இருந்து தப்பிய தீவிரவாதி அசார் கல்யாணம் செய்து கொண்டாராம்!''

''அந்தத் தண்டனையிலிருந்து அவரால் தப்ப முடியலையாக்கும்!''

— எஸ். மோகன்

---

இரண்டு வருஷம் எஃப்.டி போட்டால் வட்டியாவது கிடைக்கும்!

ரெட்டியூர் எக்ஸ் சர்வீஸ்மன் காலனியில் குடியிருக்கும் இராம நாராயணன், இரண்டு நாளைக்கு ஒரு தடவையே தண்ணீர் தமக்கு வீட்டில் வருவதாகவும், தெருக் குழாய்களில் மட்டும் மணிக்கணக்கில் வருகிறது என்றும் குறைப்பட்டுக் கொண்டிருந்தார். ஊராட்சி நிர்வாகத்தில் ரெட்டியூர் இருந்தபோது சாலை நன்றாக இருந்தது என்றும் இப்போது நகராட்சியில் சேர்ந்த பிறகு கவனிப்பே இல்லை என்றும் வருத்தப் பட்டிருந்தார்.

நாம் ரெட்டியூர் எக்ஸ்சர்வீஸ்மன் காலனிக்குப் போனபோது, தெருக் குழாய்கள் வற்றித்தான் இருந்தன. 26 வருடங்களாக அங்கே குடியிருந்து வரும் ஆறுமுகசாமி சொன்னார்: ''பத்தாயிரம் ரூபா கொடுத்து வீட்டுக்கு வாட்டர் கனெக்ஷன் எடுத்தும் ரெகுலர் சப்ளை இல்லேங்க'' என்றார். ''மூணு நாள் நாலு நாளைக்கு ஒரு தடவை தான் நல்ல தண்ணி வருது!'' என்றார் இராம நாராயணன்.

அந்தப் பகுதியில் சாலை மிக மோசம். தெரு விளக்கும் இல்லை. ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் இருக்கிற வீட்டுக்கு முன்னால் மட்டும் ஒரு சோடியம் வேப்பர் விளக்கு மஞ்சளாக எரிந்து கொண்டிருந்தது!

குடிநீருக்காக, தங்கள் செலவிலேயே குழாய் போட்டிருப்பதாக டான்-மாக்மைன்ஸ் ரோடு ந. சுப்பராமன் நமக்கு எழுதியிருந்தார்.

குழாய் போட்டுக் கொண்டாலும், தண்ணீர் ஒழுங்காக வந்து கொண்டிருந்தால், செய்த செலவைப் பொருட்படுத்த மாட்டார்கள் என்று தோன்றியது.

ராஜாஜி தெருவில் உள்ள ஓடையில் சாக்கடை நீர் கலந்து, விஷ ஜந்துக்கள் பல வீட்டுக்குள்ளேயே விஜயம் செய்கின்றன என்று குறைப்பட்டுக் கொண்டிருந்தார் காசிநாதன்.

''ஒரு சாண் நீளத்துக்கு நட்டுவாக்களி வந்துருதுங்க. ஆறு மாசத்துல எட்டு நட்டுவாக்களி அடிச்சிட்டேன்!'' என்கின்றனர், அந்த வளாகத்தில் குடியிருக்கும் கிருஷ்ணன், சுமதி என்ற குடித்தனக்காரர்கள்.

''செந்தேள்கூட வருதுன்னாரே?''

''நட்டுவாக்களி வராதபோது செந்தேள் வரும்க!''

''பக்கத்திலே இருக்கும் இந்த ஓடை+ சாக்கடைத் தண்ணீர் உள்ளே காம்பவுண்டுக்குள்ள வந்துடுது. மேயர், வீரபாண்டியார் எல்லார்ட்டயும் சொன்னேன். கடைசில, நானே காம்பவுண்டுக்குள்ள மூணு அடி உசத்தி, தண்ணி போற மாதிரி செஞ்சிருக்கேன். ஓடை குறுகிப் போயிடிச்சு. சாக்கடைத் தண்ணீ எங்கே போகும்?'' என்று கேட்கிறார் காசிநாதன்.

ஏற்கெனவே குறுகிப் போயிருந்த ஓடையைக் கொஞ்சம் மறித்து, ஒரு புண்ணியவான் வீடே கட்டிக்கொண்டிருந்தார்!

எதிரே ஓடை வருகிற பாதையை, சில வீடுகள் ஆக்ரமித்துக் கொண்டிருந்தன. ''ஏற்காட்டு மலை அடிவாரத்திலிருந்து வர தண்ணி இந்த ஓடைலதான் வரும். தண்ணி வரது நின்னவுடன் வீடு கட்டிட்டாங்க!'' என்கிறார் காசிநாதன்.

பக்கத்துப் பள்ளிக்கூடத்தில் பிரின்சிபல் மிஸஸ் பிரபாவதி ''எங்களுக்கு செந்தேள், நட்டுவாக்களி பிரச்னை இல்லே. துர்நாற்றம்தான் வருது. அதனால எக்ஸாஸ்ட் ஃபேன் வச்சுட்டோம்'' என்றவர், ''நிறைய மாணவர்கள் அவங்கவங்க வண்டில வர்றாங்க. இங்க ஒரு ஸ்பீடு பிரேக்கர், ஒரு ஜீப்ரா கிராசிங் எதுனா போட்டா நல்லா இருக்கும்!'' என்றார்.

காச்சக்காரனூர் பொது மயானம், பல ஆண்டுகளாகத் தீர்க்கப்படாமல் இருக்கும் பிரச்னை. அரை கி.மீ. செல்ல வேண்டிய சாலையை நாலு கி.மீ. சுற்றி நடந்து சென்று கடக்க வேண்டியிருக்கிறது என்று எழுதியிருக்கிறார் வாசகர் இரா. அண்ணாமலை. தற்போதைய கலெக்டர் நசீமுதீன் அவர்களுக்குக் கூட ஒரு கடிதம் சமீபத்தில் அனுப்பியிருக்கிறார்!

ரோடு, குடிநீர், சாக்கடை, கொசு, மயானம், கொசு போன்ற அன்றாட மக்கள் பிரச்னைகளை மேயர் முன் கொண்டு வைத்தோம். அவர் சொன்ன பதில்கள்தான் முந்தைய பக்கப் பெட்டிச் செய்தி, 'மேயர் விருப்பம்'.

சேலம் கட்டுரைகள்: **சாருகேசி**

படங்கள்: **ஸ்ரீஹரி**







2000 மார்ச் 5
பிரமாதி மாசி 22
மலர் : 58
இதழ் : 32

# கல்கி


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வாக்காளர்களின் வெற்றி

இடைத்தேர்தலில் தி.மு.க. வென்றது என்று சொல்வதைக் காட்டிலும் வாக்காளர்கள் வென்றார்கள் என்று கூறுவதே பொருத்தமாயிருக்கும். திருச்சி-II வாக்குப்பதிவும் அறந்தாங்கி, நெல்லிக்குப்பம் வாக்குப்பதிவுகள் உணர்த்தியிருப்பதையே உறுதிசெய்யும் என்று எதிர்பார்க்கலாம்.

ஆளுங்கட்சியிடம் வாக்காளர்களுக்கு அதிருப்தி இல்லாமலில்லை. அத்தியாவசியப் பொருட்களின் விலைவாசி கடுமையாக உயர்ந்திருக்கிறது. மாநகராட்சி, நகராட்சி இதர உள்ளாட்சி அமைப்புகள் மக்களின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்யவில்லை. அன்றாட வாழ்க்கையே நாளுக்கு நாள் கஷ்டமானதாகி வருகிறது.

ஆனால் வாக்காளர்கள் தங்கள் ஏமாற்றத்தின் அடிப்படையில் வாக்களிக்காமல் ஆழமாகச் சிந்தித்து ஜனநாயகப் பொறுப்பை முதிர்ச்சியுடன் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

அ.தி.மு.க. தலைவியின் பேரிலுள்ள ஊழல் குற்றச்சாட்டுகள், நிலுவையில் உள்ள வழக்குகள், அவரது பகிரங்கமான ஆடம்பரம், அக்கட்சியினரிடையே காணப்படும் வன்முறைப் போக்கு போன்றவை ஆதரவுக்குரியவை அல்ல என்று முடிவெடுத்திருக்கிறார்கள்.

நம்ப முடியாத அளவுக்கு நகைகள் நீதிமன்றத்தில் பட்டியலிடப்பட்ட பிறகும், தாம்




எந்தக் குற்றமும் புரியாதவர் என்றும் அனைத்துமே தம் மீது சுமத்தப்பட்ட பொய் குற்றச் சாட்டுகள் என்றும் எல்லாமே ஆளுங்கட்சியின் சதி என்றும் கோயபல்ஸ் பிரசாரம் செய்து வந்த ஜெயலலிதா, வாக்காளர்களை அத்தனை சுலபத்தில் ஏமாற்ற முடியாது என்பதை இனியேனும் உணர வேண்டும். தேர்தல் பிரசாரத்தின்போது சேர்கின்ற கூட்டமெல்லாம் வோட்டாக மாறிவிடாது என்பதையும் உணர வேண்டும்.

மாறாக, தமது தோல்வியே கூட ஆளுங்கட்சியின் சதி என்று அவர் அறிக்கை விட முயன்றால் அது தோல்வியைக் காட்டிலும் கேவலமான, நகைப்புக்கிடமான நிலைமையாகி விடும்.

இடைத் தேர்தல் முடிவுகள் வெளியான தினத்திலேயே, டான்ஸி நிலபேர வழக்கைத் தனி நீதிமன்றம் தொடர்ந்து விசாரிக்கலாம், தீர்ப்பை மட்டும் நிலுவையில் வைத்தால் போதும் என்று உச்சநீதிமன்றம் ஆணை பிறப்பித்துள்ளது. வழக்குக்கே இடமில்லை என்று வாதாடிய ஜெயலலிதாவுக்கு இந்த ஆணை பின்னடைவு ஏற்படுத்தியிருக்கிறது. தோல்வியுற்ற அ.தி.மு.க.வின் நிலைமையை இது மேலும் பாதிக்கும் என்பது உறுதி.

ஆனால், இதையெல்லாம் காட்டிலும் மிக அதிகமான பாதிப்புக்குள்ளாகியிருப்பது த.மா.காவும் அதன் தலைவர் மூப்பனாரும்தான். 'தற்காலிகமான முடிவு' என்ற சமாதானத்துடன் அ.தி.மு.கவை ஆதரிக்க முடிவெடுத்த பின் அதன் தலைவர் பல்வேறுவிதமாக சப்பைக்கட்டு கட்ட நேர்ந்திருக்கிறது :

'ஜெயலலிதா திருந்தி விட்டார்', 'அவரை ஒருமுறை தண்டித்தது போதாதா? மீண்டும் தண்டிக்க அவசியமில்லை', 'சிறப்பு நீதிமன்ற வழக்குகள் ஜெவுக்கு எதிராகப் போனாலும் மேல்கோர்ட்டில் அவர் முறையிடலாமே...' என்றெல்லாம் மிகவும் கஷ்டப்பட்டு தமது முடிவை நியாயப்படுத்திய மூப்பனாருக்கு இரு மடங்கு அவப்பெயர் - கொள்கையைப் பறக்க




விட்டு ஊழல் கட்சியுடன் கூட்டு வைத்துக் கொண்டது முதல் அபகீர்த்தி; அப்படிச் செய்த பிறகும் அக்கட்சியை பலப்படுத்தி ஜெயிக்கச் செய்ய முடியவில்லை என்பது இரண்டாவது அபகீர்த்தி. மாசுகளற்ற அரசியல் சக்தி, மாசு நிறைந்த அரசியல் சக்தியுடன் இணையும்போது தானும் மாசுபட்டுப் போகிறது. கொள்கைரீதியாகவும் அரசியல்ரீதியாகவும் தோற்று நிற்கிற த.மா.கா., தன்னைச் சுதாரித்துக் கொண்டு, இழந்த மரியாதையையும் பலத்தையும் மீட்க அடியிலிருந்து உழைத்தாக வேண்டும்.

தி.மு.க. அடைந்துள்ள வெற்றி பாராட்டுக்குரியது எனினும் கொண்டாட்டத்துக்குரியதல்ல என்பதை அதன் தலைமை உணர வேண்டும். அமைதியாகவும் கண்ணியமாகவும் வெற்றியை ஏற்பதுடன் வரவிருக்கும் தேர்தலுக்குள் கட்சியையும் ஆட்சியையும் மிக கவனமாக மக்கள் நலன் நோக்கி திசைதிருப்ப வேண்டும். இந்த இடைத் தேர்தல் வெற்றி, வரவிருக்கும் மாநிலத் தேர்தல் முடிவுகளின் போக்கை நிர்ணயிக்கப் போவதாக மதிப்பிட்டு விடக் கூடாது. அத்தேர்தலுக்கென அரசியல்ரீதியாகத் திட்டமிட்டு உழைக்க வேண்டும். ஆதரவுக் கட்சியான பி.ஜே.பியுடன் உறவை பலப்படுத்தியாக வேண்டும்.

ஆட்சியிலும் அனைத்து நிலைகளிலும் தூய்மையும் சுறுசுறுப்பும் வளர்ச்சி நோக்கிய உழைப்பும் துலங்கும்படி செய்தாக வேண்டும். ஜெயலலிதாவுக்கு எதிராக அளிக்கப்பட்ட வாக்குகள் தி.மு.கவுக்கு ஆதரவாக அளிக்கப்பட்ட பாஸிடிவ் வோட்டுகளாக வரவிருக்கும் தேர்தலில் மாற வேண்டும். அவ்வாறு மாற்றுவதற்கான நல்ல தருணம், இடைத்தேர்தலுக்கும் மாநிலத் தேர்தலுக்குமிடையே கிடைத்துள்ள ஓராண்டு கால இடைவெளி. அதைத் திறம்பட பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றலும் அனுபவமும் தி.மு.க. தலைமையிடம் இருக்கிறது. தேவை, முனைப்பு மட்டுமே. ●

## சேலம் – ரவுண்ட் அப் :

சேலத்துச் சுவர்களில் சினிமா, சோப்பு விளம்பரங்கள் தவிர, வித்தியாசமான வேறு வாசகங்களைப் பார்த்தால், யார் இப்படி எழுதியிருப்பார்கள் என்று மண்டையைக் குடைந்து கொள்ள வேண்டாம். மருதமலை முருகன் ஆர்ட்ஸ் (செல்லமாக எம் எம் ஆர்ட்ஸ்) பசுபதிநாதன் வாரம் ஒருமுறை எழுதும் வாசகங்களில் சில :

- ஒருமுறை சேமித்த தொகை இருமுறை சம்பாதித்த தொகைக்குச் சமம்.
- குணமிருந்தால் விகாரமும் அழகாக இருக்கும். குணமில்லையேல் அழகும் விகாரமாகும்.
- வேலன்டைன் தினத்துக்காக எழுதிய வரிகள் :
இன்பத்தில் இனிமையானது காதல்
துன்பத்தில் துயரமானது காதல்.

நிறைய பொன்மொழிகள் படிக்கிறார் பசுபதி நாதன். தமக்காகத் தோன்றுவதையும் குறித்து வைத்துக் கொண்டு, சுவரில் எழுதுகிறார். வாரத்துக்கு ஒன்று என்று, பத்து இடங்களில் எழுதுகிறாராம். ஜனவரி 16 ஆம் தேதி, சேலம் அகரம் இலக்கிய மன்றம், 'சமூக சிந்தனையாளர்' என்ற விருதை க. ராசாராம், சிலம்பொலி செல்லப்பன் தலைமையில், இவருக்கு வழங்கியிருக்கிறார்கள்.

- 'சேலம் ட்ரீ கிளப்'பை சில வருடங்களாகத் தொடர்ந்து நடத்தி வருகிறார், பிரகாஷ். கொய்யா, நெல்லிக்காய், வேம்பு, புன்னை, புங்கன், கொன்னை என்று ஏராளமான மரங்கள். சேலம் டவுன் ரயில்வே ஸ்டேஷன் சாலையில் இருக்கிற 'ட்ரீ கிளப்'பில், காப்பாளர் கலியமூர்த்தி – ராகமணி தம்பதி ஆயிரக்கணக்கில் செடிகளும் கன்றுகளுமாக அடுக்கி வைத்திருக்கிறார்கள். "பத்தாயிரம் கன்னுக்கு மேல, வீடுகள்ள, பள்ளிக்கூடத்துல ரோட்டுல வைக்கிறதுக்கு வாங்கிட்டுப் போயிருக்காங்க. இதையெல்லாம் ஃப்ரீயா கொடுக்கறோம். சேலத்தில் இருக்கறவங்க மட்டும் இதை வாங்கிட்டுப் போறதில்லே. சின்ன சேலம், கள்ளக்குறிச்சி, ஆத்தூர்ல இருந்தெல்லாம் கூட ஆளுங்க வந்து வாங்கிட்டுப் போறாங்க!" என்கிறார் கலியமூர்த்தி. இந்தத் தம்பதிக்கு அரை டஜன் குழந்தைகள்.

"ஏங்க, குடும்பக் கட்டுப்பாடு பத்தி எல்லாம் தெரிஞ்சுக்கறதில்லையா?" என்று கேட்டால், "மரம் வச்சவன் தண்ணி உடாம போவானா?" என்கிறார்!

- லதா ரஜினிகாந்தின் 'அவர்கள் சின்னஞ்சிறு மனிதர்கள்' என்ற கட்டுரையால் ஈர்க்கப்பட்டு, வித்தியாசமாக ஏதேனும் சாதனை புரிய வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டு, 'டர்னிங் பாயின்ட் இந்தியா' என்ற கல்வி அமைப்பை நடத்தி வருகிறார் இளைஞர் ஜெயப்பிரகாஷ் காந்தி. எம்.டெக். பட்டதாரி. குஜராத்தை விட்டுக் குடிபெயர்ந்து தமிழ் நாட்டில் வளர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். எனவே தமிழ் சரளம். பிளஸ் டூ, மற்றும் கல்லூரி மாணவர்கள் தங்கள் எதிர்காலத்தை



• ஜெயப்ரகாஷ் காந்தியின் 'டர்னிங் பாயின்ட் இந்தியா'

# இளமையில் ~~கல்~~ கற்பி!

வெற்றிகரமாக அமைத்துக் கொள்ள எதைப் படித்தால் திருப்புமுனையாக அமையும் என்று இலவசமாக ஆலோசனைகள் வழங்குகிறார். உள்நாட்டிலிருந்தும் வெளிநாடுகளில் இருந்தும் வெளிவரும் அத்தனை வார மாத இதழ்கள், தினசரிகள் என்று எதில் எல்லாம் வேலை வாய்ப்புச் செய்திகள் வருகின்றனவோ, அவற்றை எல்லாம் தேதி வாரியாக, கண்ணாடித் தாள் ஃபோல்டர்களில் தொகுத்து வைத்திருக் கிறார்! உலகம் முழுவதி லிருந்தும் எந்தெந்த நாடு களில் எந்தெந்தக் கல்விக் கான படிப்பு கிடைக்கிறது, எப்படி அப்ளை செய்ய வேண்டும் என்ற விவரங் களை வைத்திருக்கிறார். யு.எஸ். எஜுகேஷனல் டிபார்ட்மென்ட்டில் இவர் பதிவுசெய்து கொண்டிருப்பதால், அவர்கள் நேரடியாக எல்லா கல்வித் தகவல்களையும் இவருக்கு அனுப்பி வைக்கிறார்கள். தவிர, இண்டர்நெட்டில் ஃபெலோஷிப் தகவல்களைச் சேர்த்து வைத்திருக்கிறார். அமெரிக்காவில் இருக்கும் 1400 கல்லூரிகளின் விவரங்கள், பாடங்கள், கல்வி துவங்கும் மாதம், பீஸ் என்று ஒரு தகவல் விடாமல் ஒரு CDயில் வைத்திருக்கிறார். ஜிஆர்இ, டோஃபல், ஐஏஎஸ் இவற்றுக்கான பயிற்சிகள் எங்கெங்கே கிடைக்கின்றன; நாம் அறியாத - ஆனால் வேலை வாய்ப்புக்கள் அதிகம் உள்ள, ஃபயர் இஞ்ஜினியரிங், எர்த் க்வாக் இன்ஜினியரிங் இவை எங்கே கற்பிக்கிறார்கள் என்றெல்லாம் ஏராளமான தகவல்கள் சேகரித்து வைத்திருக் கிறார். பாலிமர் டீவி சேனலில் இவர் ஒவ்வொரு செவ்வாய் அன்றும் 'கல்வி ஆலோசனை நேரம்' நிகழ்ச்சி வழங்குகிறார். சேலம் இளைஞர்களிடையே இவர் புகழ்பெற இதுவும் ஒரு காரணம். புதிய பஸ் நிலையத்தருகே முனியப்பன் கோயில் மெயின் ரோட்டில், ஸ்ரீஜி காம்ப்ளெக்ஸில் உள்ள இவரது அலுவலகத்துக்கு இளைஞர்களும் இளைஞிகளும் சாரி சாரியாக வருகிறார்கள். இவர்களில் சிலர் ஈரோடு, கோவை, சென்னையிலிருந்தும் கூட வருகிறார்கள்!

• பொன்மொழியும் பசுபதிநாதனும்

• 'மரம் வைத்த' குடும்பம்

# கிளாஸில் பாதி பேர்; கச்சேரியில் மீதி பேர்!



• பாட்டு கிளாஸ்...

மாணவ - மாணவிகள் சேலத்திலிருந்து மட்டு மல்ல; அரூர், மேட்டூர், பொம்மிடி, ஏன் - கிருஷ்ணகிரியிலிருந்து கூட வந்து சேர்ந்திருக் கிறார்கள்.

குடும்பத் தலைவிகள் சிலர் வாய்ப்பாட்டும், நடனமும் கற்றுக் கொள்கிறார்களாம்!

தேவாரம் மட்டுமே கற்கும் மாணவிகள் சுதா, லதாவைக் கேட்டோம் - "ஏன் தேவாரம் மட் டும்?"

"கத்துக்கறதுதான் முக்கியம். தேவா ரம் தெரிஞ்சுக்கிட்டு, பாடத்



• நாதஸ்வர கிளாஸ்: பாதிபேர் மட்டும்!

"மொத்தம் 95 பேர் இங்கே படிக்கிறார்கள்!'' என்று சேலம் இசைப் பள்ளி தலைமை யாசிரியர், கும்ப கோணம் சங்கர ராமன் சொன்ன போது, நமக்கு மாணவ - மாணவி களின் தலைகளை எண்ணிப் பார்க்கத் தோன்றவில்லைதான்.

"ஐம்பதுக்கு மேல தேறாது போல் இருக்கே?" என்று தயக்கத்துடன் வினவினோம்.

"நாதஸ்வரம் - தவில் கத்துக்கற வங்க இப்பவே கல்யாணக் கச்சேரி, விழா எல்லாத்துக்கும் வாசிக்கப் போயிடறாங்க. அதான்!" என்றார் சங் கரராமன்! (நாதஸ்வரம் - தவிலுக்கு மட்டும் 50 மாணவர்கள்.)

சங்கரராமன் சென்னை இசைக் கல் லூரியில் படித்துவிட்டு 1997ல் சேலத்தில் இசைப் பள்ளி ஆரம்பித்தபோது தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். "மூன்று வருட டிப்ளமா கோர்ஸ். அரசு பள்ளிக்கூடங் களிலும், தனியார் பள்ளிகளிலும் பாட்டுக்கும், டான்சுக்கும் ஆசிரியர்கள் தேவைப்படும்போது இந்த மாணவர்களுக்கு முன்னுரிமை கிடைக்கும். ஏப்ரல் 2000ல் முதல் செட் இந்த இசைப் பள்ளி யிலிருந்து டிப்ளமோ பெற்று வெளிவரும்போது, ஆசிரியப் பயிற்சி தேவைப்படுகிறவர்கள் மட்டும் கூடுதலாக ஆறு மாதம் அல்லது ஒரு வருடம் டீச்சர்ஸ் ட்ரெயினிங் பயிற்சி எடுத்துக் கொள்ளலாம். வருடம் முழுவதற்கும் 150 ரூபாய்தான் ஃபீஸ்!"

வண்ண வண்ணமாகக் காவடிகள் அறையில் வைக் கப்பட்டிருந்தன.

"காவடிச் சிந்து சொல்லிக் கொடுக்கறப்ப, காவடி எடுத்து ஆடணுமோ?"

சங்கரராமன் சிரித்தார். "இங்கே கரகம், காவடி, தையல், யோகா, தஞ்சாவூர் பெயிண்டிங் எல்லாமே சொல்லிக் கொடுக் கிறோம். பழங்கலைகள் அழிஞ்சுடாம பாதுகாக்கறதுக்காகத் தான்!"

மத்திய எரிசக்தித் துறை அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் அப்பா மோகன் குமாரமங்கலம், முன்பு சேலத்து எம்.பி.யாக இருந்தவர். நகருக்குப் பல வசதிகளைச் செய்து கொடுத்தவர் என்ற முறையில், அவர் பெயரை, சேலம் மாவட்ட தலைமை மருத் துவமனைக்குச் சூட்டியிருக்கிறார்கள். அவர் பெயரால் இயங்கும் மருத்துவமனையின் செயல்பாடுகள் திருப்திகரமாக இல்லை என்று, நமக்கு வந்த கடிதங்களில் குமுறி யிருந்தனர் சேலம்வாசிகள். குறைபாடு களைத் தொகுத்து, டீன், டாக்டர் சண்முக சுந்தரராஜ் அவர்களிடம் பேட்டி கண்டோம்.

• **மருத்துவர்கள், ஊழி யர்கள் - அக்கறையே இன்றி பணிபுரிகிறார்களாமே?**

இது உண்மையே அல்ல. அவர்கள் மகத்தான பணி செய் கிறார்கள். தினசரி ஓ.பி.யில் 4000 நோயாளிகள் வருகிறார் கள். டாக்டர் - பேஷன்ட் ரேஷியோ கூடுதல் ஆனால், சேவையும் அதன் தரமும் கூடும்.

• **ஸ்டாஃப் நர்சு கள் குறைவாக இருக் கிறார்கள்; அதனால் போதுமான உதவி**

தெரிஞ்சதுன்னா நல்லது இல்லியா?''

பார்வை இழந்த சிவகாமி, ''பாடக் கத்துக்கிட்டு டீச்சர் ஆகணும்'' என்றார்.

விடைபெறுகிற போது சங்கரராமன் சொன்னார் :

''பக்கத்தில் இருக்கிற ஜவஹர் பால பவன் குழந்தைகளுக்கு சனிக்கிழமையும், ஞாயிற்றுக் கிழமையும் பாட்டு, வீணை, பரதநாட்டியம், டிராயிங், ஜிம்னாஸ்டிக்ஸ், கராத்தே எல்லாம் இலவசமாகவே சொல்லித் தருகிறோம்!''

''பேஷ், பேஷ்! ஆனா பரதநாட்டியம் சொல்லித் தர கிளாஸ்ல இருந்து கொஞ்சம் வருப்பு தள்ளியே கராத்தேயும் ஜிம்மும் சொல்லிக் கொடுங்க!'' என்றோம் வினயமாக.


• மருத்துவ மனையில் ஒரு பிரிவு

**இடைப்ப இல்லையாமே?**

இது மாநிலம் முழுவதும் இருக்கிற பிரச்னை. பிப்ரவரி முதல் தேதி டைரக்டர் அஃப் மெடிகல் எஜுகேஷன் நடத்திய கூட்டத்தில் கலந்து கொண்டு, இந்தப் பிரச்னை பற்றி எடுத்துச் சொன்னோம். அவர் தான் இதுகுறித்து ஒரு முடிவு எடுக்க முடியும்.

● **குழந்தைகளுக்கான அறுவைச் சிகிச்சைக்காக (பீடியாட்ரிக் சர்ஜரி) இரண்டு மாதம் காத்திருக்க வேண்டியிருக்கிறதாமே?**

இது வளர்ந்து வரும் மருத்துவக் கல்லூரி - மருத்துவமனை. பத்து வருடங்கள்தான் ஆகிறது. இதுதான் கடைசியாக இந்திய மெடிகல் கவுன்சில் அங்கீகாரம் பெற்றது; இதற்குப் பிறகு எந்த மருத்துவக் கல்லூரியும் அங்கீகாரம் பெற முடியவில்லை என்று நினைக்கிறேன். ஹெட் அஃப் த டிபார்ட்மென்ட் எனப்படும் பீடியாட்ரிக் சர்ஜரி பேராசிரியர் பதவியை விரைவில் அரசு சாங்ஷன் செய்யும் என்று எதிர்பார்க்கிறேன். இப்போது இரண்டு ட்யூடி டாக்டர்கள் மட்டுமே இருக்கிறார்கள். அதனால் வாரம் ஒரு ஆபரேஷன்தான் முடிகிறது.

● **சர்ஜிகல் யூனிட்டில் கூட வாரம் ஒருமுறைதான் ஆபரேஷனாமே?**

இல்லை. சர்ஜிகல் யூனிட்டில் எந்த பிராப்ளமும் இல்லை. ஸ்பெஷாலிடி சர்ஜரி - பீடியாட்ரிக் சர்ஜரி போல - மட்டுமே வாரம் ஒருமுறை ஆபரேஷன் என்ற நிலை இருக்கிறது. அதற்கான காரணமும் நான் சொன்னேன். சர்ஜரிக்காகவே ஒரு தனி நான்கு மாடிக் கட்டடம் கட்டப் போகிறோம்.

● **மருந்துகள், உபகரணங்கள் போதுமான அளவுக்கு இல்லையாமே?**

நோ. இதை மறுக்கிறேன்.

அரசு சார்பில் வழங்கப்படும் மருந்துகள் தவிர, சேலம் டிரஸ்ட் என்ற தனியார் தொண்டு நிறுவனம், வருடத்துக்கு ஒரு கோடி ரூபாய்க்கு மருந்துகள் கொடுத்து வருகிறார்கள். மருந்துத் தட்டுப்பாடு நிச்சயம் இல்லை.


• சண்முக சுந்தரம்

● **செப்டிக் ஆபரேஷன் தியேட்டர் நிலைமை மிக மோசமாமே?**

நூறு வருடங்களான, ஓடு வேய்ந்த பழைய கட்டடத்தில் இருக்கிறது SOT. இதிலும் மாறுதல்கள் செய்து வருகிறோம்.

● **வார்டுகள் சுத்தமாக இல்லையாமே?**

க்ளீன் பண்ண டயம் ஆகலாம். ஆனால் வார்டுகளே சுத்தமாக இல்லை என்பது நியாயமற்ற குற்றச்சாட்டு. வார்டுகளில் இருக்கும் பொது மக்களும் ஒத்துழைத்தால் தானே, மருத்துவமனையைச் சுத்தமாக வைத்திருக்க முடியும்?

# கூடை நிறையக் குறைகள்; வாரி நிறைய பதில்கள்!

# பிக்காஸோவின் 60 பேத்திகள்!

அறுபது பெண்கள். அத்தனை பேரும் ஸ்டெல்லா மாரிஸ் கல்லூரியில் இறுதியாண்டு நுண்கலைப் படிப்பாளிகள். அறுபது பேரும் கலைஞர்கள்; ஓவியர்கள். சில புகைப்பட வித்தகர்களும் உண்டு.

நவீன ஓவி



• ஓவிய உற்சவம்!

யக் கலையின் சகல பரிமாணங்களையும் உள்ளடக்கிய இவர்களது கண்காட்சியொன்று லலித் கலா அகடமியில் நடக்கிறபடியால், வளாகம், பூங்காவனமாகியிருக்கிறது.

பரபரப்பும் சுறுசுறுப்புமாகக் கண்காட்சி தொடங்கிய முதல் நாள் (21.2.2000). அரங்கில் சிறு சுத்தியல், ஆணியுடன் தோளில் ஊஞ்சலாடிய பைகளைக் கழற்றி வைக்காமலே பறந்து பறந்து இறுதி ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தவர்களிடம், அவர்களது ஓட்டத்துக்கு ஈடுகொடுத்து பேச்சுக் கொடுத்தோம். உற்சாக மத்தாப்புகளாகப் பேசினார்கள், அந்த 'பிக்காஸோவின் பேத்திகள்':

'கானல் நீர்' என்ற தனது ஓவியத்தில் வண்ணங்களின் பல்வேறு கலவைகளால் ஒருவித மாயையை உருவாக்க முயற்சித்திருந்தார் மைத்ரேயி.

"ஜிங்க், பெவிகால், அக்ரிலிக் கண்ணாடி இவற்றைக் கொண்டு இதை உருவாக்கினேன். ப்ரஷ்களைப் பயன்படுத்தவில்லை. விரல்களும், இறகுகளும்தான். மீண்டும் மீண்டும் பார்க்க, பலவித யூகங்களைக் கொடுப்பதாக இந்த ஓவியம் இருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன். இன்னதென்று நிச்சயிக்க முடியாத தன்மையே கலைக்கு ஒருவித சிறப்பைக் கொடுக்கும் இல்லையா?" என்றார்.

மரத் துண்டுகள், சிறு மணிகள் என நாம் அன்றாடம் காணும் பொருள்களை வித்தியாசமான விதத்தில் பொருத்தி கலைத்தன்மையைக் கொண்டு வந்திருந்தார் மேதா சரண்யா. 'ஒன்றாதல்' என்ற பெயரைக் கொண்ட அவை 'தாந்த்ரிக்' அடிப்படையில் பார்வையைச் சுண்டியிழுக்கும் நோக்கில் உருவாக்கப்பட்டதாம். 'இந்த விஷயத்தில் மேதையான ரஸாக் என்பவரது பாதையில்தான் செல்ல முயற்சித்திருக்கிறேன்' என்றார்.

'விஸ்வாகாரம்' என்ற ஓவியத்தை வரைய மிருணாளினிக்கு நான்கு மணி நேரமாகியிருக்கிறது. சயனக் கோலத்தில் திருமால். என்றாலும் 'நவீன' திருமால்!



• 'பேத்தி'களில் சிலர்!

"மதம் தொடர்பானதாக இருக்க வேண்டும் என்பது நிபந்தனை. அப்படி உருவானது இந்த ஓவியம். எல்லாப் பொருள்களுமே இறைவனிடம்தானே அடக்கம். அதுதான் அவரைச் சுற்றிப் பலவித உலக விஷயங்களை வரைந்திருக்கிறேன்'' என்றார்.

ஹரிணிக்குப் பொதுவாகவே பறவைகளைப் பிடிக்கும். தனது ஓவியத்துக்குக் கருப்பொருளாக இவர் தேர்ந்தெடுத்தது நெருப்புக் கோழியை. "அப்படியே அந்தப் பறவையை வரையவில்லை. அதன் ஸ்டைலையும், வேகத்தையும் கொண்டு வருவதே என் நோக்கம். இதோ என்னுடைய இன்னொரு ஓவியம்!



'இன்னொரு உலகம்' எனும் இதில் கூரிய பார்வைகள் அங்கங்கே தென்படுகின்றன இல்லையா? மனிதனின் பின்புறம் குத்திக் கிழிப்பதாகத் தோன்றும் பல பார்வைகள் அவன் திரும்பிப் பார்க்கும்போது மாயமாக மறைந்து விடுகிறது இந்த உலகில்'' என்று விளக்கமளித்தார்.

'அடேங்கப்பா!' என்று வியப்பதற்குள் வைஷ்ணவி, தான் வரைந்திருந்த ஒரு திருமணக் காட்சியைக் காண்பித்தார்.

'நிரந்தரப் பதிவு' என்ற தலைப்பில் வரையச் சொன்னார்கள். உடனே எனக்கு திருமணக் காட்சிதான் தோன்றியது. யாருக்குமே தனது திருமண ஓவியம் அல்லது புகைப்படம் மறக்க முடியாதது அல்லவா? இது போன்ற நகாசில்லாத ஓவியங்களில் நேர்மையைக் காட்ட முடியுமே தவிர, அதிகப்படி உணர்வுகளைக் காட்ட முடியாது. இந்த ஓவியத்திற்கு எனக்கு உந்துதலாக இருந்தது ஜாமினிராயின் ஓவியங்கள்தான். இனி பல்வேறு தளங்களில் முயற்சித்துப் பார்ப்பேன்''

"புகழ் மனிதன்'' என்ற ஓவியத்தை உருவாக்கிய அபர்ணா, "பின்னணி எப்படியிருந்தாலும் ஒவ்வொரு வி.ஐ.பி.யுமே கவர்ச்சிகரமானவர் என்றே எனக்குத் தோன்றுகிறது. அதனால்தான் இந்த ஓவியத்தில் அந்த உருவத்தைச் சுற்றிப் பளபளவென்று மஞ்சள் நிறத்தைக் கொடுத்தேன். ஏதோ ஒருவிதத்தில் பணமும் வி.ஐ.பிக்களோடு தொடர்பு கொண்டதுதான். எனவேதான் அங்கங்கே பார்டராக கரன்ஸி நோட்டுக்கள்'' என்றவரிடம் உருவம் முழுதும் கருமை நிறத்தில் இருப்பதைப் பற்றிக் கேட்டோம். கருமை என்பது நெகடிவ் தன்மைகளைக் குறிப்பது அல்லவா?

''அதெல்லாமில்லை. கறுப்பு க்ளாஸிகல் வண்ணம். இந்தக் காலப் பெண்களுக்கு மிகவும் பிடித்த கலர் அது'' என்றார் பனிச்சென்று. (அரங்கிலேயே பலபெண்கள் கறுப்பு டிரெஸ்ஸில்தான் இருந்தார்கள்!)

'பனிக்காலம்' என்று சண்முகப்ரியா தீட்டியிருந்த படைப்பில் பிரம்மாண்டமான பனி பூசிய இலைகள் எடுப்பாக இருந்தன. ஐந்து மணி நேரத்தில் உருவானது இது. ''படைப்பவர் ஆணா பெண்ணா என்பதைப் பொறுத்து அமைவதில்லை ஓவிய உணர்வுகள். மென்மையோ வன்மையோ எவரிடமும் இருக்கலாம்''



என்றார் அழுத்தந்திருத்தமாக. (வன்மையுடன்?)

பெரும்பாலான மாணவிகள் வீட்டில் தங்களுக்குக் கிடைக்கும் ஆதரவைவிட, கல்லூரி ஆசிரியர்கள் அளிக்கும் உற்சாகம் மிகப் பெரிது என்றார்கள். எப்போதோ ஒரு முறைதான் இப்படிப்பட்ட வாய்ப்பு கல்லூரி மாணவிகளுக்குக் கிடைக்கிறது என்பதால், பொதுமக்களின் கருத்துக்கள் குறித்து எக்கச்சக்க எதிர்பார்ப்புடன் இருக்கிறார்கள்.

— **ஜி.எஸ்.எஸ்.**

அட்டை வண்ணப்படங்கள்,
பிற படங்கள்: **ஸ்ரீஹரி**




• கஜானா...

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

*? பீஹாரில் சட்டப் பேரவைத் தேர்தலின்போது நடந்த கலவரத்துக்கு வெளிநாட்டுச் சக்திகளின் நாச வேலையே காரணம் என்று பிரதமர் வாஜ்பாய் குற்றம்சாட்டியிருப்பது பற்றி...?*

! மத்திய பிரதேசில் நக்சல் வன்முறை, உ.பி.யில் ரயிலில் நிகழ்ந்த தீ விபத்து, எல்லாமே அயல்நாட்டுச் சதிதான் போங்க!

# 'ஜெ' திருந்தி விட்டதாகச் சொல்கிறாரே மூப்பனார்?



• எச்சரிக்கை!

● ஜி. ராமதாஸ், கணபதி அக்ரஹாரம். ❑

*? தி.மு.கவைத் தட்டி, குட்டிக் கேட்டதாகச் சொல்லும் த.மா.கா., இனி அ.தி.மு.கவை அவ்வாறு கேட்குமா?*

! அந்தப் பாச்சாவெல்லாம் இங்கே பலிக்காது. தட்டிக் கேட்கும் முன் குட்டிக் குனிய வைத்து விடுவார்கள்.

● ம. மாரிமுத்து, மதுரை – 3.

*? 'எனக்குக் கிடைத்த தண்டனையைப் பார்த்து இனிமேல் ஐ.ஏ.எஸ். பதவியில் இருக்கும் அதிகாரிகள் அனைவருமே பயப்படுவார்கள்' என்று இன்பசாகரன் கூறியிருப்பது பற்றி...?*

! ஆமாம், பயப்படுவார்கள் – மடியில் கனமுள்ளவர்கள் மட்டும்.

● கா. மு. ஜக்கரியா, எலந்தங்குடி.

*? தாய்மொழி வழி போதனா முறை மக்களின் நுண்மான் நுழைபுலத்தை மேம்படுத்தாது என்று நீங்கள் கருதுகிறீர்களா?*

! ஆரம்பக் கல்வி என்பது வேறு. உயர்நிலை, மேல்நிலைக் கல்வி என்பது வேறு. தற்போதைய பிரச்னை ஆரம்பக் கல்வி பற்றியதுதான். ஆரம்பக் கல்வி போதனை தாய்மொழியில் அமைய வேண்டும் என்பது உலகம் முழுதும் கல்வியாளர்கள் ஒப்புக்கொண்ட ஒன்று. கூடவே ஆங்கில மொழிப் பயிற்சியும் தொடங்குவதில் தவறில்லை. இன்றையச் சூழலில் அது அவசியமும் கூட.

● எம். அருள்மூர்த்தி, அன்னூர். ∗

*? தர்மபுரியில் மாணவிகள் பஸ்ஸை எரித்தது போல் இனிமேல் நடக்காமலிருக்க என்ன செய்ய வேண்டும்?*

! தலைவர்கள் பொதுச் சொத்தைத் தங்கள் சொத்துக்கு மேலாக மதித்தால் தொண்டர்களும் அவ்வாறே மதிப்பார்கள். ஆனால் தலைவர்களே பொதுச் சொத்தை கபளீகரம் பண்ணினால், தொண்டர்களுக்குப் பொதுச் சொத்தை எப்படி மதிக்கத் தோன்றும்!

● புளியரை. க. கணேசன், சென்னை – 30.

*? உள்ளூர் என்பதால் தென் ஆப்பிரிக்காவுடனான கிரிக்கெட் தொடரை இந்தியா வெல்லும் என்று எதிர்பார்க்கலாமாங்க?*

! 'பிட்ச்'சை வேண்டுமானால் நம் அணிக்குச் சாதகமாகத் தயாரித்துத் தரலாம். டீம் ஸ்பிரிட்டையும் விடாமுயற்சியையும் ஆட்ட ஆற்றலையும் வியூகம் வகுக்கும் திறனையும் தயாரித்துத் தர முடியாது. அவை உள்ளார்ந்த ஆர்வத்தினாலும் தீவிர பயிற்சியினாலும் வர வேண்டும்.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? மூப்பனாருக்கு நில வரி நோட்டீஸ் அனுப்பியது சரியா?*

! இலங்க அரசியலே ரொம்ப வேடிக்கையா இருக்குதுங்க. வரி பாக்கிக்கு நோட்டீஸ் அனுப்பினா தப்பு! ரேஷன் அரிசியைக் கடத்தறவனுங்களைக் கையும் களவுமாப் பிடிச்சா கூட 'ஐயோ ஊழல்!' கூக்குரல்! தன்னைத் தடுத்து நிறுத்திய

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜி. ராமதாஸ்,
5/44 விசித்திரராஜபுரம்,
கணபதி அக்ரஹாரம் அஞ்சல்,
அய்யம்பேட்டை வழி
614 202.

∗ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எம். அருள்மூர்த்தி,
C/o தீபம் பைனான்ஸ்,
பாபு காம்ப்ளெக்ஸ்,
மெயின் ரோடு,
அன்னூர் - 641 653.
கோவை மாவட்டம்.



• ...அரசியல்!

! அவர்தான் புத்தராக மாறி அன்றே "தாக்கியவரை மன்னித்து விட்டேன்" என்று கூறிவிட்டாரே. இனி ஏசுவாக மாறி மறு கன்னத்தையும் காட்ட வேண்டியதுதான் பாக்கி! திடீர் அவதாரங்கள் எடுக்க நமது' அரசியல்வாதிகளுக்குக் கற்றுத்தரவா வேண்டும்!

● மு. இரவிச்சந்திரன், சேலம் – 9.

*? கருணாநிதி ஆட்சியில் கஜானா காலியாகி விட்டது என்கிறாரே ஜெயலலிதா?*

! மாநிலத்தையே காலி செய்தவர்தான் பேசுகிறார்!

● கதி. அருணாசலம், ஈரோடு.

*? பாராளுமன்றக் கட்டடம் மனையடி சாஸ்திரப்படி மாற்றி அமைக்கப் படுமா?*



• பெருந்தன்மை

! கட்டடத்தை வேண்டுமானால் மாற்றலாம். அதற்கு வரிப்பணம் விரயமும் ஆகலாம். ஆனால் மனையடி சாஸ்திரம் மனங்களை மாற்றிவிடும் என்ற நம்பிக்கை எனக்கில்லை.

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்.

*? இந்திரா பார்த்தசாரதி தமக்குக் கிடைத்த சரஸ்வதி சம்மான் விருதை 'தமிழுக்குக் கிடைத்ததாகப் பெருமைப்படுகிறேன்' என்று சொல்லியிருக்கிறாரே?*

! அது அவரது பெருந்தன்மையைக் காட்டுகிறது. தமிழுக்குப் பெருமை சேர்க்கும் சமகால எழுத்தாளர்களுள் முக்கியமானவர் இ.பா. என்பதால், அனைத்துத் தமிழர்களுக்குமே இவ்விருது பெருமை சேர்ப்பதுதான்.

● க. இராமலிங்கம், புதுப்பேட்டை.



• புதிய அவதாரம்!

போலீஸ்காரரின் கடமை உணர்வைப் போற்றிய நேருஜி எங்கே, அவர் பேரைச் சொல்லிக்கிட்டு வோட்டு கேட்கிற இன்றைய காங்கிரஸ்காரங்க எங்கே!

● காவிரிமணாளன், கோனாபட்டு.

*? உலகப் புகழ்பெற்ற நமது முன்னாள் நிதியமைச்சர் ப. சிதம்பரம், தம்மை விமான நிலையத்தில் தாக்கியவர் யார் என்று தெரியாது என நீதிமன்ற வழக்கு விசாரணையில் கூறிவிட்டாரே. இப்போது த.மா.கா. யாரோடு கூட்டுச் சேர்ந்திருக்கிறது என்பதாவது தெரியுமா அவருக்கு?*



• மன்னிப்புக் கோரிக்கை!

*? ஜெயலலிதா தற்போது திருந்தி விட்டார். அவரை ஒரு முறை தண்டித்தது போதும். மீண்டும் தண்டிக்க வேண்டாம் என்கிறாரே மூப்பனார். தாம் திருந்தி விட்டதாக ஜெ மூப்பனாரிடம் ரகசியமாகச் சொல்லியிருப்பாரோ...?*

! மூப்பனார் சொல்வதை ஏற்று ஜெயலலிதாவை மன்னிக்கத் தயார் – அவர் அநியாயமாகச் சேர்த்த சொத்துக்களை அரசாங்க கஜானாவில் ஒப்படைத்தால்! அதற்கு மூப்பனார் ஏற்பாடு செய்வாரா? அல்லது மீண்டும் 'ஜெ' தவறுகள் செய்ய மாட்டார் என்பதற்காவது உத்தரவாதம் அளிப்பாரா...? ●



அரவிந்தன், திகைத்துப் போனான்.

வைதேகி, அரவிந்தனிடம் அவன் கவிதைகளைப் பற்றி இப்படிக் கேட்டாள்:

"காற்று, ஆற்று நீரை அசைக்கிறது. அதனால், ஆற்று நீர் அலை எழுப்புகிறது. சரி. இதை, 'நீரின் ஊஞ்சல்' என்று அழகாகவே வர்ணிக்கிறீர்கள். நீர் தொடாத மண் மேடை, அது கறுத்து இருப்பதால், பெண்களின் கண் மை என்கிறீர்கள். அதோடு, கண் மையை அழகு என்கிறீர்கள். ஒரு படி மேலே போய், பெண்களுக்கு அழகு தரும் கண் மை என்கிறீர்கள். என்ன சார், உங்கள் ரசனை? மை வைக்காத கண்களை நீங்கள் பார்த்தது இல்லையா? அது அழகாக இல்லையா? கண்ணுக்கு மை அழகா? பைத்தியக்காரத்தனம் சார். கண்ணுக்கு அழகு, கண்ணோட்டம் இல்லையா? அறிவும் ஞானமும் கல்வி அறிவும் அல்லவா அழகு? ஆரோக்யம் அல்லவா அழகு?"

என்ன பதில் சொல்வது என்று தோன்றாமல் திகைத்துப் போய் இருந்தான் அரவிந்தன். அவன் திண்டாடுவதைப் பார்த்து ரசித்துக் கொண்டு நின்றான், பாரதி.

"விடுடி, வைதேகி. அவருக்குக் கண்கள், மை இட்டு இருந்தால் பிடிக்கும் போலும்."

வைதேகி, பாராட்டவும் தயங்கவில்லை.

" 'அந்தக் கிழவர் உணவுக்கு முன் காக்கையை அழைத்துச் சோறு வைக்கும் வரை, உலகம் அழியாது' என்று சொல்லி இருக்கிறீர்களே, அது கவிதை. இது அல்லவா எழுத வேண்டும் நீங்கள்... சபாஷ்."

அரவிந்தன், பிரமித்துக் கொண்டு அமர்ந்திருந்தான். சாயங்கால நேரம். காக்கைகள் பள்ளிக்கூடம் நடத்தி முடித்து, கூடு நினைவுக்கு வர, எழுந்து மறைந்த நேரம். கிள்ளிய நகம் போலப் பிறை, வெளிறிப் போய்க் கிடந்தது. நீலம் போட்டு வெளுத்த வேட்டி வெளிச்சம். அரவிந்தன் வீட்டு மொட்டை மாடி. ஜமக்காளம் விரித்து, அதில் சம்மணம் போட்டு அமர்ந்திருந்தாள் வைதேகி. சுவரில் முதுகைச் சாய்த்துக் கொண்டு பாரதி. ஒரு பணிவான மாணவன் போல, வைதேகியின் முகம் பார்த்து, கை கட்டிய படி - பணிவு என்று அல்ல, பழக்கத்தால் நின்றான் அரவிந்தன்.

18

பிரபஞ்சன்

அவர்கள் ஆள் அரவம் அற்ற தெருக்களில் நடந்தார்கள். மனிதர்கள் நடந்து சென்ற நிழலும், ஆவியும் தெருக்களில் மரநிழல்களோடு படிந்து கிடந்தன.

''மனிதர்களைக் கழித்துப் பார்த்தால், எல்லாம் அழகாகத்தான் இருக்கு'' என்றாள், திடீரென்று வைதேகி. ''இந்தத் தெருவைப் போல'' என்று தொடர்ந்தாள்.

''ஆனால், அழகை ரசிக்க, அது அழகு என்று இனம் காண மனிதக் கண்கள் வேணுமே'' என்றான், அரவிந்தன்.

''அழகு, மனிதர்களின் அங்கீகாரத்தை வேண்டுகிறதா, என்ன?'' என்று பதிலுக்குக் கேட்டாள் வைதேகி.

இவர்கள் சம்பாஷணையை ரசித்துக் கொண்டு வந்த பாரதி, கேட்டாள்.

''அழகுன்னா, நிலவு, கடல், வானம் மட்டும்தானா? எனக்கு நிலவு நேரத்துல எச்சில் இலை மினுக்கு, நடுரோட்டுல படுத்திருக்கிற நாய், மேஞ்சுகிட்டு இருக்கிற மாடு, எல்லாமும் அழகுதானேடி?''

''நிச்சயமா? அழகு பற்றின ஆரோக்யமான பார்வையே இதுதான்கா''

அரவிந்தன் சொன்னான்.

''சில பேரை அழகுன்னு சொல்றோம். சில பேர், அழகில்லைன்னு நினைக்கிறோம். போகட்டும். சில முகங்களோடு பேசணும்னு தோணுது. சில முகங்களைப் பார்த்தா, விலகணும் போல இருக்குதே. இதுக்கு என்ன காரணம் இருக்க முடியும்?''

சற்று நேரம் யோசித்தபின், வைதேகி சொன்னாள்.

''இது முழுக்க முழுக்க மனரீதியான காரணம்தான். எந்த முகம் உன்னைத் தொந்தரவு பண்ணுதோ, விலகிப் போக வைக்குதோ, அந்த முகச் சாயல்லே சில பேர், உனக்கு எப்பவோ துன்பம், கெடுதல் செய்திருக்கலாம்...''

"இதை இன்னும் விருத்தி பண்ணலாமே" என்றாள் பாரதி.

"பண்ணேன்கா."

"தொல்லை கொடுத்தவங்களை வெறுக்கிறதுல, ஒரு நியாயம் இருக்கு. ஆனா, எந்த வகையிலும் யாருக்கும் தொல்லை இல்லாமே, சோற்றுக்கே கஷ்டப்படற கறுப்பு இன மக்களைப் பார்த்து வெள்ளைக்காரன் எதுக்கு வெறுக்கணும்? நம்ம நாட்டுல கூட, மேல் ஜாதிக்காரன்னு சொல்லி சில பேர், கீழ்ச்சாதிக்காரங்கன்னு சில பேரை ஒதுக்கி வச்சி, கேவலப்படுத்தறது என்ன விதி?"

"தாம் மேல் என்கிற எண்ணம்" என்றாள் பாரதி.

"அது எப்படி வருதுன்னுதான் ஆச்சரியமா இருக்கு. ரத்தம் ஒரு நிறம், எல்லா உறுப்புகளும் எல்லோருக்கும் சமம். இருந்தாலும், நான் மேல்னு புத்தி எதுக்கு வரணும்?"



''உங்கள் புதிய கட்சியின் கொள்கை என்னங்க?''

''ஜெயித்தால் 'வெடி': தோற்றால் ''அடி'ங்க!''

– நெல்லை எம். வெங்கடேஸ்வரன்

அவர்கள் அமைதியாக நடந்தார்கள். ஆயிரம் வருஷமாகப் பலரும் பல காலமாகக் கேட்கிற கேள்விதான். என்றாலும் தீர்க்க முடியாத பிரச்னைகள்.

அவர்கள், தெரு முனையில் ஒரு கோயிலைக் கடந்தார்கள். வெளியில் இருந்து பார்த்த மாத்திரத்தில், அது முருகன் கோயில் என்று தெரிந்தது.

"என்னத்துக்கு சாமி கையில இத்தனை ஆயுதங்கள். இதற்குப் பிறகும், அன்பே கடவுள்னு சொல்லணுமா?" என்று வைதேகியைக் கேட்டாள்.

''அந்தக் கடவுள்களுக்கு உருவம் கொடுத்த மனுஷன், தன் கையில் என்ன ஆயுதம் இருந்ததோ அதைக் கொடுத்திருக்கான். அவ்வளவுதான். இத்தனை ஆயுதங்களால கடவுள் பக்தர்களைக் காப்பாத்தறார்னு பிறகு நாம் சொல்லிக்கிட்டோம்...''

வைதேகிக்கு அக்கா கச்சேரி பண்ணிக் கேட்க வேண்டும் என்கிற ஆசை.

"நிறையப் பேர் கேட்கிறாங்கதான். எனக்கென்னமோ, பாடத் தோண மாட்டேங்குது."

"அது நல்லது அக்கா. எங்க ஜமக்காளம் விரிப்பாங்கன்னு காத்துக்கிட்டிருந்து ஓடிப்போய் உக்காந்துக்கிற கலைஞரா இல்லைன்னு நீ கர்வப்படணும்."

"அது மாத்திரம் இல்லை, வைதேகி. உங்க அக்கா, எதையும் யார்கிட்டேயும் கேட்கிறது இல்லை. அதுதான் அவங்களோட மைனஸ் பாய்ண்ட்டோன்னு எனக்கு அடிக்கடி தோணும்."

பாரதிக்குக் கூடக் கோபம் வரும் என்று அரவிந்தன் அப்போது கண்டான்.

''அரவிந்தன், தெரியாதவர்களிடம் உதவிக்குப் போகிறதில்லை. நண்பர்களிடம் கேட்டுத்தான் ஒன்றைப் பெற வேண்டும் என்றால், அது எனக்குத் தேவையில்லை. ஒரு சிநேகிதர்க்கு என்ன தேவை என்று நண்பர்க்குத் தெரியாதா? கேட்டுத்தான் கொடுப்பேன் என்றால், அது சிநேகம் அல்ல. துரோகம்."

சற்று நேரம் அமைதியாக இருந்தாள் பாரதி.

ஊருக்கு வெளியே, ஒரு மாந்தோப்பு இருந்தது. தரையில் படுத்துக் கொண்டு பழம் பறிக்கலாம் போல, குட்டை மரங்கள். குடைகளை விரித்துத் தலைகீழாக நட்டு வைத்தது போல, மரங்கள். நல்லவேளையாக, தோப்பை வெட்டிப் 'பிளாட்' போட்டு வியாபாரம் பண்ணலாம் என்று அந்த உரிமையாளருக்குத் தோன்றாதது, சூழ்நிலையின் அதிர்ஷ்டம். பூக்கள் உதிர்ந்து, பாய்விரித்தாற்போல இருந்தது.

வைதேகி அக்கறையாகத்தான் சொன்னாள்.

"என்னதான் சிநேகிதர்களாக இருந்தாலும், தெரியாத்தனம், அலட்சியம், சிந்திக்காமை காரணமாக, உதவ வேண்டும் என்று தோன்றாமலே இருக்கலாம் அல்லவா? ஞாபகம் ஊட்டினால் என்ன தப்பு?"

"ஞாபகப்படுத்தித்தான், கை ஏந்தித்தான் ஒன்றைப் பெறலாம் என்றால், அந்த இரண்டு பேர்களுக்குள் சிநேகம் இல்லை என்றுதான் அர்த்தம். தொழிலாளி முதலாளி. அதிகாரி அடிமை போன்ற உறவுகளில் அது சாத்தியம். பட்டினத்தார் கூட, ஒரு சாமியார். இப்படிப் பாடுகிறார். இருக்கும் இடம் தேடி என் பசிக்கே அன்னம் உருக்கமுடன் – கவனி – உருக்கமுடன்

கொண்டு வந்தால் உண்பேன்... நீ சொல்றே, வாய் விட்டு உதவி கேளுன்னு..."

"அக்கா... பட்டினத்தார் சந்நியாசி. குடும்பம், தேவை இல்லாதவர். குழந்தை குட்டி இல்லாதவர். வரப்பே தலையணை. திருவோடே கதி. மண்ணே திருநீருன்னு வாழ்ந்தவர். அவருக்குத் தேவை இல்லை, ஒருத்தரிடம் ஒன்று கேட்க. நீ அப்படியா? உனக்குக் குடும்பம், குழந்தை, மின்சார வரிகள்... எல்லாம் இருக்கு. புடைவை, இன்னும் அடிப்படைத் தேவைகள் இருக்கு. மாமா வேற, முறுக்கிட்டு போயிருக்கிற ஆசாமி. உன் சுய கௌரவம் அகங்காரம்னு கருதப்படும். கொச்சையா புரிந்து கொள்ளப்படும்."

அரவிந்தன் சொன்னான். அவன், கையிலிருந்த குட்டி மாங்காயைப் பிடுங்கிக் கடித்தாள் வைதேகி. குறுக்கிட்டாள்.

"திருட்டு மாங்காய் தித்திக்கிறது" என்றாள்.

"எவரிடமும் எதுவும், கொடுக்கக் கூடியவரிடம், கொடுக்க முடிந்தவரிடம் கூட ஒன்றைக் கேட்காமல் இருப்பது, ஒரு வகையான பிரபு மனப்பான்மையே என்று சொல்கிறது நவீன மனத்தத்துவம். அந்தக் காலத்து கற்பு கான்செப்ட் மாதிரி, இதுவும் ஒரு வகை செயற்கைதான்."

"அது என்ன அந்தக் காலத்துக் கற்பு கான்செப்ட்?"

"அடுத்தவன் ஏதாவது சில்மிஷம் செய்த உடனேயே, கற்பு போய்விட்டது என்று அலறுதல், புருஷன் ஊருக்குப் போனான் என்றால், தன் முகத்தை குரங்கு மூஞ்சாக்கிக் கொள்ளுதல், இதுமாதிரி அசட்டுத்தனங்கள். இன்னிக்குக் காலையிலே கூட ஒருத்தன், ஓடும் பஸ்ஸில் என்னை உரசினான். இடுப்பில் கை வைத்தான். திரும்பி, 'என்ன தம்பி' என்றேன். ஆள் அவுட். நான் கற்பிழந்தவளா, அரவிந்தன்?"

"சேச்சே" என்றான் அரவிந்தன்.

அவர்கள் வீடு திரும்பும் வழியில், வைதேகி அரவிந்தனிடம் சொன்னாள்.

"அக்காவுடைய கச்சேரியை ஏற்பாடு பண்ண வேண்டியது உங்கள் பொறுப்பு."

"கண்டிப்பா. பாரதி மேடம் சொன்னது போல், யாரிடமும் கெஞ்சாமல், அவங்க சுயகௌரவத்துக்கு இடையூறு நேராம இதைச் செய்வேன். பாரதிதான் சம்மதிக்கணும்."

"இதுல என் சம்மதம் என்ன, அரவிந்தன். சும்மா, வீட்டுக்குள்ளே முனகிக்கிட்டு



''தலைவர் ஏன் ரொம்பக் கவலையா இருக்கார்?''

''அடுத்த போராட்டத்திற்கு விஷயம் ஒண்ணும் அகப்படலையாம்!''

– நெல்லை எம். வெங்கடேஸ்வரன்

---

கிடந்தவள் நான். என் திறமை வீணாயிடக் கூடாதேன்னு ரொம்ப சிரமம் எடுத்துக்கிட்டு, வீதிக்கு, சபைக்குக் கொண்டு வந்தவர் நீங்க. எனக்கு எது சரி, எது தப்புன்னு பார்த்துச் செய்ய உங்களை விட வேறு யாருக்கு உரிமை இருக்கு? உங்களுக்கு எது சரின்னு படுதோ, அதைச் செய்யலாம், நீங்க.''

அரவிந்தனுக்குத் திருப்தியாக இருந்தது. இந்த நம்பிக்கைதான் சிநேகத்தின் ஆதாரம். இந்த நம்பிக்கைதான் நட்பு என்கிற மணி மண்டபத்தைத் தாங்கி நிற்கிற வைரத் தூண்.

"அடுத்த வாரமே ஏற்பாடு செய்றேன்" என்றான்.

செய்தான்.

சண்முகானந்த சபாவில், அன்று மாலை பாரதி பாட இருந்தாள். மிக நறுக்கான, தெளிவான ரசிகர்கள் முந்நூறு பேர் கூடியிருந்தார்கள். பத்திரிகைகள் மிக கௌரவமாக அவள் கச்சேரி செய்தியை வெளியிட்டன.

பத்திரிகை நிருபர்கள், தொலைக்காட்சி நிருபர்கள் என்று திரண்டு வந்திருந்தது கூட்டம். தஞ்சாவூர் வீராசாமி ம்ருதங்கம். பொன்னையா பிள்ளை பிடில். மேலும் கடம், கஞ்சிரா, மோர்சிங் என்று 'புல் பெஞ்ச்'சையே ஏற்பாடு செய்திருந்தான், அரவிந்தன். ஒரு ஆடியோ கேசட் கம்பெனி, முன்கூட்டிப் பேசிக் கொண்டு, தயார் நிலையில் இருந்தார்கள்.

முதல் பாடலாக, 'அருள் புரிவாயை' எடுத்தாள். தொடர்ந்து தேவகாந்தாரியை எடுத்துக் கொண்டு, ராக ஸ்வரூபம் தோன்றும்படி ஆலாபனை செய்து, கீர்த்தனத்தைப் பாடத் தொடங்கினாள். ராகத்தின் முகம், எடுத்த எடுப்பிலேயே தோன்ற வேண்டும். திரையை விலக்கியவுடனே தோன்றும் விக்ரகம் மாதிரி, கண்ணாமூச்சு ஆடுதல், வடநாட்டு விவகாரமா, கர்நாடகமா என்று தவிக்க விடுவது போன்ற அதிகப்பிரசங்கித்தனம் இல்லாமல், ராகத்தைக் குரலால் எழுதிக் காட்டிச் சட்டென்று பாட்டுக்குள் நுழைந்து, பாற்கடலில் பள்ளிகொண்ட பரந்தாமனை ஆராதிக்கத் தொடங்கினாள்.

அக்கா உருகுவதைக் கண் எதிரில் கண்டாள் வைதேகி. யானைக்கு மோட்சம் கொடுத்த பரந்தாமா, எனக்கும் கொடுக்க மாட்டாயா என்கிற மன்றாட்டு, அவள் ரத்தத்தில் சரிந்து, ஆத்மாவின் மேல் படிந்து, குரலில் வழிவதை நேருக்கு நேராகக் கண்டாள். இந்தச் சங்கீதத்தின் உள்ளத்தை ஸ்வரூபமாகக் கண்டாள், வைதேகி. தானும் உருகி, கேட்போரையும் உள்ளுருக்கும் இதன் மேன்மையை என்ன என்பது? மனிதக் கண்டுபிடிப்புகளிலே, உயர்ந்தது இசைதான் என்று அந்தக் கணம் தோன்றியது அவளுக்கு.

வைதேகிக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. எத்தனை அரிய ஞானத்தைப் புதைத்துக் கொண்டு, மறைத்துக் கொண்டு வாழ்கிறாள், இவள்? இந்த ஞான சௌந்தரியை அடிக்கக் கை ஓங்குகிறானே, புருஷன் என்ற பெயரில் வந்த பாமரம்?

பாரதியிடமும், யாரும் அதிகமாகப் பாடாத பாட்டை எடுத்துக் கொண்டாள் பாரதி.

'பாழும் தெய்வம் பதியும் தெய்வம்
பாலைவனமும் கடலும் தெய்வம்
ஏழு புவியும் தெய்வம் தெய்வம்
எங்கும் தெய்வம் எதுவும் தெய்வம்...'

அக்கா, பொன்மயமான படிக்கட்டுகளில் ஏறி, வானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள் என்று தெரிந்தது. கண்ணுக்கு நேராகக் காண முடிந்தது.

கச்சேரி முடிந்தது. கூட்டம் கலைய முடியாமல், பாரதியையே சுற்றிச் சுற்றி வந்தது. ஆட்டோகிராப் கேட்டது. அண்மையில், மாற்றலாகி வந்த நீதிபதி சாமிநாதன், ஆட்டோகிராப் கேட்டதுதான் ஆச்சர்யம்.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு வெளியே வந்தாள். வைதேகியைப் பார்த்து, 'எப்படி இருந்துச்சு, வைதேகி?' என்றாள், பாரதி.

அழுதுகொண்டே அக்காவின் கையைப் பிடித்துக் கொண்டாள் வைதேகி.

(தொடரும்)



# வெங்காய விசித்திரம்

நான் நாத்திகனில்லை — 8

பேராசிரியர் பெரியார்தாசன்

"அழகா பேசலின்னா எழவெடுத்துப் போவுது. ஆனா பயனில்லாத எதையும் பேசக் கூடாது!" என்று பெரியார் அடிக்கடி சொல்லுவார். அதற்காகவே *பேச்சாளர்களுக்கான முகாம்கள் நடக்கும். அதில் பெரியாரே வகுப்பெடுப்பார்.

"புத்தரை எல்லாரும் பெரிய மகான்னு சொல்றாங்க. அப்படி அவர் என்ன சொல்லிட்டாரு? 'பொய் சொல்லாதே, திருடாதே, விபச்சாரம் செய்யாதே'ன்னு சொன்னாரு. இதைத் தானே எல்லாரும் சொல்லியிருப்பாங்க. மத்தவங்க எல்லாம் திருடுங்க; பொய் சொல்லுங்கன்னா சொல்லியிருப்பாங்க? அப்புறம் என்ன இவரு மட்டும் மகான்? வெல்லம் போட்ட மகான்?" என்று நம்மையே கேள்வி கேட்டு, "சரி எல்லோரும் சாப்பிடப் போயிட்டு வாங்க!" என்று சஸ்பென்ஸில் விட்டு விடுவார் பெரியார்.

சஸ்பென்ஸைத், தெரிந்து கொள்ளும் ஆர்வத்தோடு, மதிய உணவை அவசரம் அவசரமாக முடித்துக்கொண்டு மதிய வகுப்புக்கு வருவோம்.

"புத்தர் வெல்லம் போட்ட மகான்தான். ஏன்னா, அந்தக் காலத்தில் பொய் சொல்றது, திருடறது, விபச்சாரம் பண்றதெல்லாம் இருந்தது. இதையெல்லாம் ஏதோ பக்கத்து வீட்டுக்காரன் பண்ணினான்; எதுத்த வீட்டுக்காரன் பண்ணினான்னு இல்லே. ஒரு கூட்டமே செஞ்சுது. எப்படி?

"ஒரு சிறு கூட்டம் மிகப் பெரும்பாலான ஜனங்களை அடிமையாக்கறதுக்காக இதையெல்லாம் செஞ்சுது. இப்படியெல்லாம் செய்ய முடியுமா? முடியும். ஒரு சிறு கூட்டம், ஒரு பெரிய கூட்டத்தை அடக்கியாள முடியும். அப்படி அடக்கி ஆள்றதுக்கு முதல்ல, அந்தப் பெரிய கூட்டத்தோட கல்வியைப் பறிக்கணும். வீரத்தைப் பறிக்கணும். அந்தப் பெரிய கூட்டம் உழைக்கலாமே தவிர, அப்படி



**"சே... வர வர நாடு போற போக்கே சரியில்லை!"**

**"ஏன் சார் இப்படிச் சலிச்சுக்கறீங்க?"**

**"பாருங்க, 'விமானக் கடத்தல் தொழிலுக்கு ஆட்கள் தேவை'ன்னு பேப்பர்ல விளம்பரம் வந்திருக்கு!"**

**— புளியரை கணேசன்**

---

உழைக்கறதால உற்பத்தியாகிற பொருளை அவங்க தங்களோட உடைமையாக்கிக் கொள்ளாம பார்த்துக்கணும். இப்படிச் செஞ்சா, அந்தப் பெரிய கூட்டம் தங்களோட சொந்தச் செலவுலயே சிறிய கூட்டத்தோட அடிமையாயிடும்!

"இதைத்தான் மனு தர்மம் செஞ்சது. அதுக்காகத்தான் இவன் மட்டும்தான் படிக்கலாம். ராஜா மட்டும்தான் வீரப் பயிற்சி எடுத்துக்கலாம். வைசியன் மட்டும்தான் வியாபாரம் செய்யலாம்னு சொல்லி பெரிய கூட்டத்தை அடக்கி வெச்சது. அதுக்காகத்தான் வர்ணாஸ்ரம தர்மத்தை ஏற்படுத்துச்சு. இதனால, உழைக்கிற மக்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளையெல்லாம் பறிச்சு, அவங்க முன்னேற்றத்தைத் திருடுனாங்க.

"சாதாரண ஜனங்க சொன்னா, அது பொய். ஆனா அதை ராஜாக்கள் சொன்னா அது ராஜ தந்திரம். ராஜாக்களெல்லாம் தங்களோட பதவியைக் காப்பாத்திக்கிறதுக்காக எப்படிப்பட்ட பொய் வேணும்னாலும் சொல்லலாம்னு அர்த்த சாஸ்திரம் சொல்லுது.

"அப்புறம் காம சாஸ்திரம். உலகம் பூரா எப்படின்னு எனக்குத் தெரியாது. ஆனா வாத்ஸ்யாயனரோட காம சாஸ்திரத்தை நான் படிச்சிருக்கேன். சாஸ்திரமா அது? விபச்சாரமய்யா.. விபச்சாரம்!

"இதையெல்லாம்தான் புத்தர் எதிர்த்துப் பேசினார். அதிகாரத்தில இருக்கறவங்களை எதிர்க்கறதுக்கு எவ்வளவு துணிச்சல் வேணும்? துணிச்சலோடு எதிர்த்தார் புத்தர். அதனாலதான் அவர் மகான்; பெரிய மகான்னு சொல்றோம்!" என்று நீண்ட விளக்கமளிப்பார் பெரியார்.

இத்தனை விளக்கமாகச் சொன்ன பிறகும், "நான் கொஞ்சம்தான் உங்களுக்குச் சொல்லியிருக்கேன். நீங்க இன்னும் நிறையப் படிக்கணும். படிச்சதைச் சிந்திக்கப் பார்க்கணும். அப்புறம்தான் நீங்க போய்ப் பேசணும். எதையும் ஆதாரமில்லாம பேசவே கூடாது!" என்பார்.

அது மட்டுமல்ல, "எங்க நல்ல விஷயங்கள் இருந்தாலும் நீங்க எடுத்துக்கணும். ஆழ்வார் பாசுரங்களைப் படிங்க. தேவாரம் படிங்க. திருமூலரைப் படிங்க. வள்ளலாரைப் படிங்க. படிச்சுட்டு சிந்திங்க. அப்பத்தானே விமர்சிக்க முடியும்?" என்று நிறையப் படிக்க வேண்டும் என்று அறிவுறுத்துவார்.

உண்மையிலேயே பெரியார் 'வெங்காயம்' என்கிற வார்த்தையைவிட, 'சிந்திங்க' என்கிற வார்த்தையைத்தான் அதிகம் பயன்படுத்தினார். ஆனால் 'வெங்காயம்' பிரபலமான மாதிரி 'சிந்திங்க' என்று அவர் வலியுறுத்திச் சொன்ன விஷயம் பிரபலமாகாதது விசித்திரம்!

'துன்பம் இருக்கிறது; அந்தத் துன்பத்துக்கான காரணம் இருக்கிறது; காரணத்தைக் களைவதற்கான வழிமுறையும் இருக்கிறது. அந்த வழிமுறையைக் கடைப்பிடித்தால் சந்தோஷமாக வாழலாம்!'

புத்தருடைய இந்தத் தத்துவத்தைப் பெரியார் முழுமையாக உள்வாங்கிக் கொண்டிருக்கிறார். அதனால்தான் எதையும் அவர், ஏன்? எதற்கு? எப்படி? என்று பகுத்து ஆராய்ந்தார். பிறரையும் அப்படிப் பார்க்கச் சொன்னார்.

அனைவரும் சமரசமாக வாழ வேண்டும் என்கிற சமரசப் போக்கான எண்ணத்தை அவர் வள்ளலாரிடமிருந்து பெற்றுக் கொண்டிருக்கலாம். உழைக்கும் மக்கள் இழிவுபடுத்தப் படுகிற அவல நிலையை, அது போக்கப் பட்டாக வேண்டும்; எல்லோரும் சக்திக்குத் தகுந்தபடி உழைக்க வேண்டும்; உழைப்புக்குத் தகுந்தபடி ஊதியம் பெற வேண்டும்; அனைவரும் சமூகத்தில் சம மரியாதையுடன் வாழ வேண்டும் என்கிற பொதுவுடைமைத் தத்துவத்தை, சிங்கார வேலர், ஜீவா போன்ற பொதுவுடைமைவாதிகளின் தொடர்பால், பெரியார் பெற்றதைவிட மனு தர்ம சாஸ்திரத்தால் பெற்றதுதான் அதிகம் என்பது என்து கணிப்பு.

ஆம்; மனு தர்ம சாஸ்திரத்தைப் பெரியார் படித்த அளவுக்கு வேறு எவரும் படித்திருக்க மாட்டார்கள் என்றே சொல்லலாம். மனுதர்ம சாஸ்திரத்தின் மொழி பெயர்ப்பு, வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு, அபிதான சிந்தாமணி என்கிற தமிழ்கலைக் களஞ்சியம்

ஆகிய மூன்று நூல்களையும் தாம் எப்போதும் வைத்திருக்கிற பையில் தவறாமல் வைத்திருப்பார் பெரியார்.

உழைக்கும் மக்கள் இழிவு படுத்தப் படுவதற்கும், சமுதாயத்தில் ஜாதிப் பிரிவினைகள் நிலைத்து நிற்பதற்கும் மனு தர்ம சாஸ்திரம்தான் மூல காரணம் என்று அவர் அறிந்திருந்ததால் அதை மூர்க்கமாக எதிர்த்தார் பெரியார். அவரது கோபத்தைக் கிளறி, எதிர்மறையான ஒரு சிந்தனையைத் தூண்டியது இந்த நூல்தான். இது அவரிடம் ஏற்படுத்திய எதிர்மறையான சிந்தனையை சன்மார்க்கப் போக்குக்கு அழைத்துச் சென்றது வள்ளலாரின் சமரச மார்க்கம்.

இன்றைக்கு நான், ஆதி சங்கரரின் 'த்வாச மஞ்சரிகா'வைத் தமிழில் மொழி பெயர்த்து, அச்சிட்டு இலவசமாகவே பிறருக்குக் கொடுக்கிறேன் என்றால், இந்தப் பரந்துபட்ட பார்வைக்கும் பெரியார்தாம் காரணம்.




"ஆம்; அவர் எதையுமே ஒருவித முன் அபிப்பிராயங்களோடு அணுகவோ, படிக்கவோ மாட்டார். அது அதை அப்படியப் படியே அணுகுவார் அல்லது படிப்பார். பிறகு சிந்திப்பார். அது இந்த சமூகத்துக்கு நல்லது செய்யுமா என்று பார்ப்பார். நல்லது என்றால் பாராட்டிப் பேசுவார். கெட்டது என்றால் எப்படியெப்படியெல்லாம் அது கெடுதல் செய்யும் என்று ஆதாரங்களைத் தேடிக் கண்டுபிடித்துப் பேசுவார். அவர் மட்டுமல்ல; சீர்திருத்தக் கருத்துக்களைப் பேசும் ஒவ்வொரு பேச்சாளரும் இப்படித்தான் பேச வேண்டும் என்பார்.

பெரியாரிடம் இப்படியொரு பாடம் கற்றதன் விளைவாக, ஆரம்பத்தில் நான் கூட்டங்களில் பேசுவதையே தவிர்த்தேன். முதன் முதலில், பெரியார் தமது சிந்தாதிரிப்பேட்டை பொதுக்கூட்டத்தில் என்னைப் பேசச் சொல்லி, மழை காரணமாகப் பேச முடியாமல் போனது குறித்து நான் மனம் நொந்து போனது எத்தனை சிறுபிள்ளைத்தனம் என்பதைப் பிறகுதான் உணர்ந்தேன். உணர்ந்ததால்தான், என்னைப் பலரும் பேச அழைத்த போது, நான் மறுத்தேன்!

ஒரு வண்ணத்துப் பூச்சி, தனது அழகான சிறகுகளை விரித்துப் பறப்பதற்கு முன்னால், கூட்டுப் புழுவாக இருந்து பறப்பதற்காகத் தன்னைத் தயார் செய்து கொள்வதுபோல, நானும் மேடைப் பேச்சுக்கு என்னைத் தயார் செய்து கொள்வதற்காகச் சுமார் பத்தாண்டு காலம் படித்தேன்; படித்தேன்; படித்துக் கொண்டே இருந்தேன்!

ஆனால், படிப்பு என்பது வெறும் பொழுதுபோக்குக்கான ஒரு விஷயம் அல்ல. பொழுது என்பது போக்குவதற்கான ஒரு விஷயமும் அல்ல. அது வாழ்வதற்கு; அனுபவிப்பதற்கான ஓர் அரிய விஷயம். எனவே, எதைப் படித்தாலும் அது நம்மை மேம்படுத்துவதற்கான ஒரு விஷயமாக இருக்க வேண்டும். உண்மையை நோக்கி நாம் பயணம் செய்வதற்காக நமது படிப்பும் இருக்க வேண்டும் என்பதிலும் உறுதியாக இருந்தேன்.

(தொடரும்)

ஆயுள் காப்பீட்டுக் கழகக் கட்டட வாசலில் நின்றிருந்தான் அவன். அண்ணா சாலையின் போக்குவரத்து வேகம், எந்நேரமும் தன் உயிருக்கு ஆபத்து விளைவிக்கக் கூடும் என்று தோன்றியது. ஆத்மார்த்தமாக இதை உணரச் செய்வதற்காகவே எல்.ஐ.சி. கட்டடத்தை அந்த இடத்தில் நிறுவியிருக்க வேண்டும். அப்படி இல்லாதபட்சத்தில் அமைதியும் நல்ல காற்றோட்டமும் உள்ள ஒரு பெரிய மைதானத்தின் நடுவே கட்டியிருந்தால் பொருத்தமாயிருந்திருக்கும். மைதானத்தின் மையமென்பது, தனிமை - முதுமை - பாதுகாப்பற்ற தன்மை போன்றவற்றின் குறியீடாக இருக்கப் பொருத்தமானது. அப்படியொரு இடத்தில் அமைந்திருக்குமானால் முகவர்களுக்கு அதிக சிரமம் தராமல், மக்கள் தாமாகவே முன்வந்து இதன் பதினான்கு மாடிகளையும் ஏறிக் கடந்து போய் பாலிஸி எடுத்துக் கொள்ளக்கூடும்.

காப்பீட்டுக் கழகங்களைத் தனியார்வசம் ஒப்படைப்பதன் மீதான அரசின் பரிசிலனையை எதிர்த்து வாசலில் பல நோட்டீஸ்கள் ஒட்டியிருந்தார்கள். வெள்ளைத் துணி பேனர் ஒன்றில் கடந்த ஆண்டுச் சாதனைகள், கோடி, கோடியாகச் சிரித்தன.

எத்தனை பேர் தம்மை எல்.ஐ.சி.யின் பொத்திய அகல்விளக்கோடு இணைத்துக் கொண்டிருப்பார்கள்!

அவன் வெகு நாட்களாக யோசித்துக் கொண்டிருந்தான். ஒரு பாலிஸி எடுப்பது பற்றிய சிந்தனை வரும்போதெல்லாம் ஏதாவது தடையும் வந்து விடுகிறது. தவிர அவனும் எல்ஐசியின் தேசமளாவிய குடும்பத்தில் ஓர் அங்கத்தினராக விரும்பக்கூடுமென்று எந்த ஏஜெண்டுக்கும் ஏனோ இதுவரை தோன்றி, அணுகியிருக்கவில்லை.

குழந்தைகளும் மனைவியும் வெகுவாக நச்சரித்தார்களேயென்று ஒரு ஞாயிற்றுக் கிழமை நல்ல வெயில் பொழுதில் கிளம்பி, தீவுத்திடல் சுற்றுலாப் பொருட்காட்சிக்குப் போனான். பின்தொடரும் நிழலின் குரலாக எல்லா கனவான்களின் பின்பும், அருகிலும் கட்டங்கள் போட்ட வண்ணக் காகித விண்ணப்பங்களுடன் பாலிஸி எடுப்பதன் முக்கியத்துவம் பற்றி உரையாற்றியபடி வேக வேகமாக நடந்து கொண்டிருந்தனர் சில இளைஞர்கள். அவர்களில் ஒருவர் கூட அவனை ஏனோ அணுகவில்லை.

மாதங்கள் இருபது தேதிகளுடன் முடிந்து போனால் எத்தனையோ சௌகர்யமாயிருக்கும். ஒவ்வொரு முறையும் அதன் இறுதி தினங்களில் கையேந்த வேண்டி வந்து விடுகிறது. முணுமுணுத்தபடியேனும் கடனுதவி செய்கின்ற நண்பர்களின் தோளில் அமர்ந்தே கடைசி வாரங்களைக் கடைத்தேற்ற வேண்டியிருக்கிறது.

நடிகைகள் கண், மூக்கு, கால்களையும் தவிர, மொத்தமாகவும் பல கோடிகளுக்கு இன்ஷுரன்ஸ் செய்து கொள்ளும் செய்திகள் எப்படியும் மாதம் ஒருமுறையேனும் பத்திரிகைகளில் வருகின்றன. அச் செய்திகளை எப்போதும் வியப்புடன் படிப்பது அவன் வழக்கம். பணம்தான் எத்தனை சௌந்தர்யமான விஷயம், ஒரு பெண்ணை விடவும்!

முதல் தேதி வாங்குகிற ஆயிரத்தி முந்நூறு ரூபாய் சம்பளத்தை, ஓரிரு தினங்கள் செலவழிக்காமல் அப்படியே வைத்திருந்து அடிக்கடி தொட்டுப் பார்ப்பான். செலவழிக்கலாம் என்று முடிவான மறுவிநாடி அது பறந்து விடும். அரிசியாகவும் மாத்திரைகளாகவும் குழந்தைகளின் நோட்டுப் புத்தகங்களாகவும் வாடகையாகவும் மின்சாரக் கட்டணமாகவும் உருமாறிக் கொள்கிற பணம், ஒரு மோகினிதான்; சந்தேகமில்லை. தனக்கான ஏஜ

# மோகினியாட்டம்



மானர்களைத் தேர்ந்தெடுத்துச் சென்று சேர்ந்து சேவகம் புரிகிற மோகினி. ஒய்யாரச் சிரிப்பும் ஒட்டிக் கொள்கிற செழுமையும் வாசனையும் கம்பீரமுமாகப் பணம் படைத்தவர்களைப் பார்க்கும்போதெல்லாம் எஸ்.எஸ்.எல்.ஸிக்கு மேல் தனக்குப் படிப்பு ஏறாத சோகத்தை விரும்பி அழைத்துச் சற்று அனுபவித்துத் தள்ளி வைப்பான்.

படித்தவர்களெல்லோரும் பணக்காரர்களாயிருக்கிறார்களா என்ன? – இது சமாதானக் கேந்திரம். அதுவல்ல விஷயம்; எனக்குப் பணம் வேண்டும். பணம் வேண்டும். பணம் வேண்டும் என்று பல நாள் இரவுகளில் மனத்துக்குள் குரலெடுத்து அலறியிருக்கிறான்.

ஒரு சௌகர்யம், அவன் மனைவி புடைவைகளென்றும் நகையென்றும் எப்போதும் கேட்பதில்லை. ஆனால் விளக்கேற்றாத வீடு போலல்லவா காட்சியளிக்கிறாள், எப்போதும்?

அவனுக்குத் தன் மனைவி வறுமையை வழித்தெடுத்து மேனி முழுக்கப் பூசிக் கொண்டிருப்பது போன்றதொரு படிமம் எப்போதும் தோன்றும்.

**பி**ளாட்பாரங்களில் வசிக்கிற

பா. ராகவன்

குடும்பங்களின் பெண்களை அவன் தினசரி தான் பணியாற்றும் லேத் பட்டறைக்குப் போகும் போது பார்ப்பான். ஓவர் டைம் செய்து விட்டுத் திரும்புகிற தினங்களில், ஊரடங்கிய இரவில் நட்சத்திரங்களினடியில் அவர்கள் தம் கணவன், குழந்தைகளுடன் சிரித்துச் சிரித்துப் பேசி, சீண்டி விளையாடும் காட்சி எப்போதுமே அவனுக்குப் பொறாமை தருவது. தன் மனைவியின் பற்களை அவன் பல் விளக்கும் போது மட்டுமே அவன் பார்த்திருந்தான். எதிர்பாராத வறுமை, புன்னகைகளைக் கொன்று விடும் போலும்.


''ஆபீசுக்குப் போகும்போது டார்க் கலர் சட்டை போட்டு 'டிரிம்'மா போங்க!''
''ஏன்?''
''லஞ்சம் வாங்கும் போது போட்டோ எடுக்கிறாங்களாமே!''
— எஸ். மோகன்

நல்லதொரு வேலை இனியேனும் அமையாமலே போய் விட்டால் தன் குடும்பத்தின் கதி என்ன என்று எண்ணிப் பார்த்தான். திடீர் திருப்பங்களும் எதிர்பாராத வெளிச்சக் கோளங்களும் பசுமை நிரம்பித் ததும்பும் சமவெளிகளும் தன் வாழ்வில் மட்டும் இல்லாமல், ஏன் எப்போதும் சாம்பல் பூசிய அழுக்குச் சந்துகளாகவே உள்ளன? கழுத்து வியர்வையைப் புறங்கையால் துடைத்தபடி எல்.ஐ.சி. கட்டடத்தின் முன் நின்று யோசித்துக் கொண்டிருந்தான்.

வார இதழ்களில் பலன் எழுதும் சோதிடர்கள் அவன் ராசியைக் குறிப்பிடும்போதெல்லாம் உலகம் பொறாமைப் படும் விதமாகவே அற்புதமான பலன்களைச் சொல்லி வருகிறார்கள். எதிர்பாராத அதிர்ஷ்டம். பயணத்தால் அனுகூலம். நண்பர்களால் உதவி. (அது எப்படியோ பொருந்தி விடுகிறது.) வெளிநாட்டு வேலை வாய்ப்பு. எந்த வெளிநாடும் கடைசல் இயந்திரக் கலைஞர்களை வேலைக்கு அழைத்து விளம்பரம் செய்து அவன் பார்த்ததில்லை...

இயந்திரம் கடைந்தது போக மிச்சமிருந்த உயிருக்குச் சற்று தாகமெடுக்கவே, அருகிலிருந்த பெட்டிக் கடைக்குப் போனான்.

ஒரு ரூபாய் கொடுத்துத் தண்ணீர் பாக்கெட் வாங்கி அருந்துவதில் அவனுக்கு இருப்பியல் சார்ந்த சில உறுத்தல்கள் இருந்தன. ஆயினும் வேறு வழியில்லை. முன்பெல்லாம் குடத்திலிருந்து மொண்டு தருவார்கள், கடைக்காரர்கள். அது வழக்கொழிந்து விட்டது. தன்னிடம் மட்டும் பணமிருந்தால் ஒரு பாலிஸி எடுத்த கையோடு எல்.ஐ.சி. வாசலில் ஒரு தண்ணீர்ப் பந்தல் அமைக்கலாம்.

பாலிஸி. ஆம், அது முக்கியமல்லவா? அவனுக்குச் சில நாட்களாகவே தற்கொலை செய்து கொள்வது பற்றியும் இமய மலைச் சாரல் பக்கமாக ஓடி விடுவது பற்றியும் சிந்தனைகள் வர ஆரம்பித்திருந்தன. இதைவிடக் கோழைத்தனமான, கேவலமான, முகத்தில் எச்சில் உமிழ்ந்தாற்போன்ற உணர்வேற்படுத்தக்கூடிய காரியம் வேறு இருக்க முடியாது என்றும் தோன்றியது. ஆயிரத்தி முன்னூறு ரூபாய்தான் பெறுமானமுள்ளவனென்றாலும் தன்னையொரு பாதுகாப்பு அரணாகக் கருதியிருக்கும் குடும்பத்துக்கு அது துரோகமல்லவா?

பிறவி ஏழைகளுக்கு இத்தகைய கோழைத்தனம் ஒரு போதும் வருவதில்லை என்று தோன்றியது. தினசரி பார்க்கும் பிளாட்பாரக் குடும்பங்களின் ஆண்கள் எப்போதும் கம்பீரமாகவும் உரத்த குரலில் பேசுபவர்களாகவும் தம் குழந்தைகளை உயரே தூக்கித் தூக்கிப் போட்டுப் பிடித்து விளையாடுபவர்களாகவுமே இருக்கிறார்கள்.

தன் குழந்தைகளைக் கொஞ்சியே பல மாதங்களாகி விட்டதை எண்ணிப் பார்த்தான். தன்னம்பிக்கை முற்றிலும் தொலைந்து விட்டதன் மீதான வெறுப்பில் மனம் கசந்தது.

மீளவே முடியாத படு குழியில் விழுந்து விட்டால், குடும்பத்துக்கு ஓர் அடிப்படைப் பிடிமானமாக ஒரு தொகை அவசியம் தேவைப்படக்கூடும். அதற்காகவேனும் ஒரு பாலிஸி எடுக்க முடிந்தால் தேவலை.

அண்ணா சாலையில் அவன் இன்டர்வியூவுக்காகச் சென்று வந்த நிறுவனம் பிரபலமானது. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் உள்ள நிறுவனம். ஆனால், நேர்முகம்

முடிந்து வெளியே வந்த பிறகுதான், தன் திறமையையும் அனுபவத்தையும் சரியான வார்த்தைகளில் வெளிப்படுத்தினோமா என்கிற சந்தேகம் வந்தது. திறமையைக் காட்டிலும் ஏழைமை வெளிப்பாடு சற்றுக் கூடுதலாக வெளிப்பட்டிருக்கக்கூடுமென்று தோன்றியது. ஒவ்வொரு முறையும் தோன்றுவதுதான். வேலை அமையாததையும் பிடுங்கும் வறுமையையும் கவலைகளையும் ஒருவேளை மானசீகமாக விரும்பி அனுபவித்து, சோகம் கொண்டாடுவதில் மனம் லயித்து விட்டதா என்ன?

மிகுந்த களைப்பும் சோர்வும் புதையுண்ட விழிகளுமாக வீடு திரும்பும்போது இரவாகி விட்டது. நல்ல மனைவிக்கு அடையாளம், போன காரியம் என்ன ஆயிற்றென்று திரும்பி வந்ததும் கேளாமலிருப்பது. சொல்லக்கூடிய பதிலென்றால், கண்டேன் சீதையை என்று வீதியிலிருந்தே கூவாமலா இருக்க முடியும்?

குழந்தைகள் படித்துக் கொண்டிருந்தன. அவன் முகம் கழுவி, சாப்பிட்டு முடிக்கிற வரை ஏதும் பேசாதிருந்த அவன் மனைவி, பிறகு விளக்கணைத்துப் படுத்த பிறகு சொன்னாள் : "நான் வேலைக்குப் போகலாம்னு இருக்கேன்."

இது அவன் எதிர்பாராதது. தான் வெறும் எஸ்.எஸ்.எல்.ஸி.தானே என்று தேடித் தேடி எட்டாம் வகுப்பு பெயிலான வளை மணந்து கொண்டபோது, ஒருவேளை இவளும் வேலைக்குப் போக வேண்டிய சூழ்நிலை உருவானால் அதற்குப் படிப்பு அவசியமல்லவா என்று விளையாட்டாகக் கூட எண்ணிப் பார்த்திருக்கவில்லை. தானறியாத் ஒரு கலையைக் கற்று வைத்திருக்கிறாளா என்ன?

எஸ்.டி.டி.-பி.ஸி.ஓ.-ஐ.எஸ்.டி.- ஜெராக்ஸ் கடை. அங்கே பகல் பொழுதில் கவனித்துக் கொள்ள என்ன பெரிய படிப்பு அவசியம் என்று அவள் கேட்டாள்.

"மாசம் ஐந்நூறு ரூபா. கசக்குதா?" என்றும் சொன்னாள். கூடுதல் வருமானத்துக்கான செலவுகளையும் முன்னதாக யோசித்து வைத்திருந்தாள். பாப்பாவைப் பள்ளியில் சேர்ப்பது. பெரியவனுக்கு ட்யூஷன்.

"அதுங்க தலையெடுத்தாத்தானே நமக்கு வெளிச்சம்?"

ஆயுள் காப்பீட்டுக் கழகம், அண்ணா சாலையிலேயே இருந்து விட்டுப் போகட்டும் என்று இப்போது தோன்றியது அவனுக்கு.

## "5 வருட இடுப்பு வலியிலிருந்து ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தேன்!!!"



Lakshmi Iyer

ஸ்ரீமதி. லக்ஷ்மிஐயர், மேட்டூர்டேம் R.S., சேலம் மாவட்டம், தமிழ்நாடு.

கடந்த ஐந்து வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் பொழுதும், சிறிது தூரம் நடக்கும் பொழுதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் பொழுதும், மாடிப்படி ஏறி இறங்கும்பொழுதும் , பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. ஆங்கில மருத்துவரிடம் சென்று **C.T. Scan** எடுத்துப் பார்த்த போது. இடுப்பில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாக கூறினார்கள் **(L4, L5, DISC PROLAPSE)** இதற்கு சில மருந்துகளையும், இடுப்பில் போட்டு கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள். இருப்பினும் வலி நிற்கவில்லை. பின்பு ஆப்ரேஷன் **(Operation)** செய்தால் குணமடையும் என்று கூறினார்கள் அப்பொழுது **"MARC HERBAL CARE(P)LTD."** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் கண்டு நானும் எனது கணவரும் அங்கு சென்றோம். டாக்டரின் ஆலோசனைபடி அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டிசை (Poultice) வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப் பிறகு தற்பொழுது எனது வலிகள் அனைத்தும் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன். நன்றி.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டிசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டீஸ், ஸ்பாண்டிலைட்டீஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க இப்போதே தொடர்பு கொள்க. தொலைபேசி **0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்**
32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**






# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு **(80G, Income Tax Excemption)** உண்டு

**S.V. HOME FOR AGED**
#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356. Pager : 9610 - 114668
Web Page : http/www.chennaibiz.com/svhome
Email: svhome@chennaibiz.com

# பொன்னியின் செல்வன்



### இருபத்து ஆறாம் அத்தியாயம்

## வீதியில் குழப்பம்

குந்தவை கண்ணீர் விடுவதைப் பார்த்துவிட்டு வானதியும் விம்மத் தொடங்கினாள். உலகத்தில் எத்தனையோ இன்ப துன்பங்களைப் பார்த்தவரான அநிருத்தப் பிரம்மராயரின் இரும்பு நெஞ்சமும் இளகியது.

"தாயே! சக்கரவர்த்தி இப்போது படும் கஷ்டங்களுக்கெல்லாம் காரணமானவன் இந்தப் பாவிதான். என்ன பிராயச்சித்தம் செய்து அந்தப் பாவத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேனோ, தெரியவில்லை!" என்றார்.

"ஐயா! தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆயினும் எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். அந்தக் கரையர் மகள் இறந்து விடவில்லை, உயிரோடிருக்கிறாள் என்பதைத் தந்தைக்குத் தெரிவித்துவிட்டால், அவருடைய துன்பம் தீர்ந்து மன அமைதி ஏற்பட்டு விடும். அதைச் சொல்லுவதற்காகவே தங்களிடம் வந்தேன். எப்படியாவது என் பெரியன்னையை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள் என்று கேட்டுக் கொள்ள வந்தேன். ஆனால் தாங்களே அதற்குப் பிரயத்தனம் செய்திருக்கிறீர்கள்!" என்றாள் இளையபிராட்டி.

"ஆம், அம்மா! நானும் அத்தகைய முடிவுக்குத்தான் வந்திருந்தேன். மந்தாகினிதேவி உயிரோடிருக்கும் விவரத்தைச் சக்கரவர்த்தியிடம் தெரி

**அமரர் கல்கி**

வித்து விடத் தீர்மானித்துவிட்டேன். ஆனால் வெறுமனே சொன்னால் அவர் நம்ப மாட்டார். முன்னே நான் கூறியது பொய், இப்போது சொல்லுவதுதான் உண்மை என்று எவ்விதம் அவரை நம்பச் செய்வது? அதற்காகவே அந்தத் தேவியை இங்கே அழைத்து வரச் செய்த பிறகு சொல்ல எண்ணினேன். நேரிலே பார்த்தால் நம்பியே தீர வேண்டும் அல்லவா? அதற்காகவே முக்கியமாக இலங்கைத் தீவுக்குச் சென்றிருந்தேன். ஆனால் தங்கள் தம்பியோடும் பெரிய வேளாரோடும் சதி செய்வதற்காக நான் ஈழ நாட்டுக்குப் போனேன் என்று பழுவேட்டரையர்கள் சக்கரவர்த்தியிடம் சொல்லியிருக்கிறார்கள். அது இல்லை என்று நிரூபிப்பதற்காகவேனும் மந்தாகினி தேவியைத் தங்கள் தந்தையின் முன்னால் கொண்டு போய் நிறுத்தப் போகிறேன்'' என்றார் அநிருத்தர்.

"ஐயா! அந்த மாதிரி திடீரென்று கொண்டு போய் நிறுத்தினால் தந்தைக்கு ஏதேனும் தீங்கு நேரிட்டாலும் நேரிடலாம். முன்னால் தெரிவித்துவிட்டுத்தான் அவர்களைப் பார்க்கச் செய்ய வேணும்!'' என்றாள் இளைய பிராட்டி.

''ஆம், ஆம்; அவ்வாறுதான் செய்ய உத்தேசித்திருக்கிறேன். இந்த வீட்டுக்கு மந்தாகினி தேவி வந்து சேர்ந்ததும் போய்ச் சொல்லலாம் என்று நினைத்தேன். இன்று காலை அரண்மனைக்கு வரவே எண்ணியிருந்தேன். அதற்குள் தியாகவிடங்கரின் மகள் நடுவில் தலையிட்டு எனக்கு ஏமாற்றத்தை அளித்து விட்டாள். அந்தப் பொல்லாத பெண்ணுக்கு ஒரு நாள் தகுந்த தண்டனை விதிப்பேன்!'' என்றார் முதன் மந்திரி.

''ஐயோ! அப்படி ஒன்றும் செய்யாதீர்கள். அவள் நல்ல பெண்ணோ, பொல்லாத பெண்ணோ, நான் அறியேன். ஆனால் அருள்மொழியைக் கடலில் முழுகிப் போகாமல் காப்பாற்றியவள் பூங்குழலி அல்லவா!''

''கடவுள் காப்பாற்றினார் என்று சொல்லுங்கள், தாயே! பாற்கடலில் பள்ளிகொண்ட பகவான் காப்பாற்றினார். அவருடைய அருள் இல்லாவிட்டால், இந்தச் சிறு பெண்ணால் என்ன செய்து விட முடியும்? ஜோதிட சாஸ்திரம் உண்மையானால், கிரகங்கள் - நட்சத்திரங்களின் சஞ்சார பலன்கள் மெய்யானால், இளவரசரைக் கடலும் தீயும் புயலும் பூகம்பமும்கூட ஒன்றும் செய்யமுடியாது...''

''இறைவன் அருளின்றி எதுவும் நடவாதுதான். ஆனால் இறைவனுடைய சக்தியும் மனிதர்கள் மூலமாகத்தானே இயங்க வேண்டும்? பூங்குழலியை மறுபடியும் நாகைப்பட்டினத்துக்கு அனுப்ப எண்ணியிருக்கிறேன், ஐயா! அல்லது, தாங்கள் வேறு விதமாக எண்ணினால், - பகிரங்கமாகவே அருள்மொழியை இங்கு வரச் செய்யலாம் என்று கருதினால்...''

''இல்லை, தாயே! இல்லை! சிம்மாதனம் யாருக்கு என்பது நிச்சயமாகும் வரைக்கும் அருள்மொழிவர்மனைப் பற்றி மக்கள் அறிந்து கொள்ளாமலிருப்பதே நல்லது. தங்கள் தந்தையை இன்று முடிவாகக் கேட்டுவிட எண்ணியிருக்கிறேன். மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதாயிருந்தால், தங்கள் தம்பியை மறுபடியும் ஈழ நாட்டுக்குத் திருப்பி அனுப்பி விடுவது நல்லது. அருள்மொழிவர்மர் இங்கு இருக்கும்போது மதுராந்தகருக்கு மகுடம் சூட்டச் சோழ நாட்டு மக்கள் ஒருநாளும் உடன்பட மாட்டார்கள். சோழ நாடு பெரும் ரணகளமாகும்; சோழ நாட்டின் நதிகளில் எல்லாம் இரத்த வெள்ளம் பெருகி ஓடும்...''

"ஐயா! அப்படியானால் பூங்குழலியையும் சேந்தன் அமுதனையும் மறுபடி நாகைப்பட்டினத்துக்கு அனுப்புவதே நல்லதல்லவா?''

''அதுதான் நல்லது. சக்கரவர்த்தி விரும்பினால் ஒருமுறை அருள்மொழிவர்மர் இரகசியமாகத் தஞ்சைக்கு வந்துவிட்டுத் திரும்பிப் போகலாம்!''

''ஆம், ஆம்! மந்தாகினி தேவியும் அருள்மொழியும் உயிரோடிருக்கிறார்கள் என்பதை ஒருமுறை (?)

ணால் பார்த்துத் தெரிந்து கொண் டால்தான் சக்கரவர்த்தியின் உள்ளம் அமைதி அடையும்.''

''பெரிய இளவரசரைப் பற்றித் தங்கள் தந்தைக்கு எவ்விதக் கவலையும் இல்லை அல்லவா?''

''இல்லவே இல்லை. ஆதித்த கரிகாலனுக்கு அபாயம் விளைவிக்கக் கூடியவர்கள் இந்த உலகத்திலேயே இல்லை என்று சக்கரவர்த்தி நம்பியிருக்கிறார். தாங்கள் என்ன நினைக்கிறீர்கள், ஐயா!''

''எனக்கு என்னமோ அவ்வளவு நம்பிக்கை இல்லை. போர்க்களத்தில் பெரிய இளவரசர் அஸகாய சூரர்தான். ஆனால் மற்ற இடங்களில் அவரை ஏமாற்றுவதும் வஞ்சிப்பதும் கஷ்டமல்ல. பழுவேட்டரையர்கள் அவரை விரோதிக்கிறார்கள். பழுவூர் இளைய ராணி அவருக்கு எதிராக ஏதோ பயங்கரமான இரகசியச் சூழ்ச்சி செய்து வருகிறாள். இந்த இரண்டு செய்திகளையும் கரிகாலருக்கு என் சிடன் மூலம் சொல்லி அனுப்பினேன். ஆயினும் பலன் இல்லை. தஞ்சாவூருக்கு எவ்வளவு சொல்லியும் வர மறுத்தவர் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குப் போயிருக்கிறார்.''

''ஐயா! பழுவூர் இளையராணி எங்கள் சகோதரியாயிருக்கக் கூடும் என்று நான் என் தமையனுக்குச் செய்தி அனுப்பியிருக்கிறேன். அருகிலிருந்து காப்பாற்றும்படியும் வாணர்குலத்து வீரருக்குச் சொல்லி அனுப்பினேன். ஆகா! வல்லவரையர் மட்டும் இப்போது இங்கே இருந்திருந்தால், நாகைப்பட்டினத்துக்கு அனுப்பியிருக்கலாம்.''

''அந்தப் பிள்ளை ஏதாவது சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்ளாமலிருப்பதற்கு நானும் என் சிடனை அனுப்பியிருப்பேன். இப்போது கூடத் தாங்கள் பூங்குழலியை அனுப்பினால், பின்னோடு திருமலையையும் அனுப்ப உத்தேசிக்கிறேன்.''

''போனவர்கள் இன்னும் வந்து சேரவில்லையே? என் பெரியன்னை வந்து விட்டால் என் நெஞ்சிலிருந்து முக்கால்வாசி பாரம் இறங்கி விடும், ஐயா! அவர் வந்தவுடனே, தாங்கள் என் தந்தையைச் சந்தித்துச் சொல்லி விடுவீர்கள் அல்லவா? நான் என் அன்னையிடம் அடியிலிருந்து எல்லாக் கதையும் சொல்லியாக வேண்டும்...''

''ஆகா! மலையமான் மகளுக்குத்தான் எத்தனை மனத் துன்பங்கள்! அதோடு, திருக்கோவலூர்க் கிழவனுக்கு இதெல்லாம் தெரியும்போது அவன் என்ன செய்யப் போகிறானோ? தன் பேரப் பிள்ளைக்குப் பட்டம் இல்லை என்று தெரிந்தால், இந்த நாட்டையே அழித்து விடுவேன் என்று ஒருவேளை மலையமான் கிளம்பக் கூடும்...''

''என் பாட்டனாரைச் சரிக்கட்டும் வேலையை என்னிடம் விட்டு விடுங்கள். இந்தப் பெண் வானதி இருக்கிறாளே, இவளுடைய பெரிய தகப்பனாரைப் பற்றித்தான் எனக்குக் கவலையாயிருக்கிறது. கொடும்பாளூர்ப் பெண் சோழ சிங்காதனத்தில் ஒருநாள் வீற்றிருக்கப் போகிறாள் என்று அவர் ஆசை கொண்டிருக்கிறாராம். இந்தப் பெண்ணின் மனத்திலேகூட அந்த ஆசை இருக்கிறது...''

வானதி இப்போது குறுக்கிட்டு, ஆத்திரம் நிறைந்த குரலில், ''அக்கா...!'' என்றாள்.

அந்தச் சமயத்தில், வானதி மேலே பேசுவதற்குள், பூங்குழலி உள்ளே பிரவேசித்தாள். அவள் தனியாக வந்தது கண்டு மூன்று பேரும் சிறிது துணுக்குற்றார்கள்.

''கரையர் மகளே! உன் அத்தை எங்கே? திருமலை எங்கே?'' என்று முதன்மந்திரி பரபரப்புடன் கேட்டார்.

''ஐயா! என் கர்வம் பங்கமுற்றது. நான் சொல்லிப் போனபடி அத்தையை இங்கு கொண்டு வந்து சேர்க்க முடியவில்லை.''

''நீங்கள் போவதற்குள்ளேயே காணோமா? அல்லது வருவதற்கு மறுத்து விட்டாளா? அப்படியானால்...''

''இல்லை, ஐயா! கோட்டைக்குள்ளே

அழைத்துக்கொண்டு வந்து விட்டோம். அதற்குப் பிறகுதான் ஜனக் கூட்டத்திலே அகப்பட்டு அத்தை காணாமற் போய் விட்டார்!" என்றாள் பூங்குழலி. பின்னர், அச்சம்பவம் பற்றிய பின்வரும் விவரங்களைக் கூறினாள்:-

மந்தாகினி தேவி நல்லவேளையாகச் சேந்தன் அமுதன் வீட்டிலேயேதான் இருந்தாள். அவள் அங்கேயே இருக்கும் படியான காரணங்கள் நேர்ந்திருந்தன. நேற்றிரவு அடித்த புயலில் அமுதனுடைய வீடு சின்னா பின்னமடைந்திருந்தது. தோட்டத்திலிருந்த மரம் ஒன்று வீட்டுக் கூரை மேலேயே விழுந்திருந்தது. சேந்தன் அமுதனோ முதல் நாளிரவு மழையில் நனைந்த காரணத்தினால் கடும் சுரம் வந்து படுத்துப் பிதற்றிக்கொண்டிருந்தான். இரண்டு சகோதரிகளும் விழுந்த மரங்களை அகற்றி வீட்டைச் சரிப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். பூங்குழலியைக் கண்டதும் மந்தாகினி மகிழ்ச்சி அடைந்தாள். திருமலையைக் கண்டு கொஞ்சம் தயங்கினாள். அவன் நம்மைச் சேர்ந்தவன் என்று பூங்குழலி கூறிய பிறகு தைரியம் அடைந்தாள். வழியில் பூங்குழலியும் திருமலையும் ஊமை ராணியிடம் என்ன சொல்லுவது, எவ்வாறு சொன்னால் அவள் தயங்காமல் தங்களுடன் வருவாள் என்று பேசி முடிவு செய்திருந்தார்கள். அந்தப்படியே பூங்குழலி அவள் அத்தையிடம் கூறினாள். சக்கரவர்த்தி நோய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருப்பதாகவும், எந்த நேரத்திலும் இந்த மண்ணுலகை விட்டுப் போய் விடலாமென்றும், அவருடைய மூச்சுப் பிரிவதற்கு முன்னால் ஊமை ராணியை ஒரு தடவை பார்க்க ஆசைப் படுகிறார் என்றும், ஊமை ராணியை அவர் இத்தனை காலமாகியும் மறக்கவில்லையென்றும், அவளைப் பார்த்தால் ஒரு வேளை அவர் புதிய பலம் பெற்று இன்னும் சில காலம் உயிர் வாழக் கூடும் என்றும் சமிக்ஞை பாஷையில் தெரியப் படுத்தினாள். அதற்காகவேதான் முதன்மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அவளை எப்படியாவது பிடித்து வர ஆட்களை அனுப்பியதாகவும், முதன் மந்திரியின் அரண்மனையிலேதான் முதல் நாளிரவு தான் தங்கியிருந்ததாகவும் கூறினாள். சக்கரவர்த்தியின் அருமைப் புதல்வி குந்தவை தேவி ஊமை ராணியைத் தன் தந்தையிடம் அழைத்துப் போவதற்காக முதன் மந்திரி வீட்டில் காத்திருப்பதாகவும் தெரியப் படுத்தினாள். இதையெல்லாம் ஒருவாறு தெரிந்துகொண்ட பிறகு மந்தாகினி பூங்குழலியுடனும் திருமலையுடனும் புறப்பட்டு வர இசைந்தாள். கோட்டை வாசலுக்கு அவர்கள் வந்து சேர்ந்த போது, சக்கரவர்த்தியின் வேளக்காரப் படையினர் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் போகட்டும் என்று மூன்று பேரும் ஒதுங்கி நின்றார்கள். வேளக்காரப் படையை மந்தாகினி கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். வேளக்காரப் படையைத் தொடர்ந்து ஒரு பெருங் கூட்டம் கோட்டைக்குள்ளே பிரவேசித்தது. அவர்களைத் தடுத்து நிறுத்தவும் கோட்டைக் கதவுகளைச் சாத்தவும் காவலர்கள் செய்த முயற்சி பலிக்கவில்லை. "இந்தக் கூட்டத்தோடு நாம் போக வேண்டாம்; முதன் மந்திரி அரண்மனைக்குப் போகப் பிரத்தியேகமான சுரங்க வழி இருக்கிறது. அதன் வழியாகப் போகலாம்" என்றான் திருமலை. இதைப் பற்றிப் பூங்குழலி அவளுடைய அத்தைக்குச் சொல்லப் பிரயத்தனப்பட்டாள். ஊமை ராணி அதைக் கவனியாமல் கோட்டைக்குள் போகும் கூட்டத்தோடு சேர்ந்து போகத் தொடங்கினாள். திருமலையும் பூங்குழலியும் பின்னோடு சென்றார்கள். கோட்டைக்குள் பிரவேசித்த பிறகும், திருமலை வேறு தனி வழியாகப் போகலாம் என்று சொன்னதைப் பூங்குழலியின் அத்தை பொருட்படுத்தவில்லை. கூட்டத்துடன் கலந்தே சென்றாள். கூட்டத்தைப் பார்த்துப் பயப்படும் சுபாவம் உடையவள் இம் மாதிரி செய்வதைக் கண்டு மற்ற இருவருக்கும்

வியப்பாயிருந்தது. கொஞ்ச தூரம் போன பிறகு கூட்டத்தில் சிலர் மந்தாகினியைக் குறிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தார்கள். "இந்த அம்மானைப் பார்த்தால் பழுவூர் இளையராணியின் ஜாடையாக இல்லையா?" என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ள ஆரம்பித்தார்கள். திருமலைக்கும் பூங்குழலிக்கும் இது கவலையை அளித்தது. அவர்கள் மந்தாகினிக்கு முன்னால் போய் நின்று தடுத்து நிறுத்த முயன்றார்கள். இதற்குள் ஆழ்வார்க்கடியானைப் பார்த்தவர்கள் சிலர் "இவன் யாரடா வைஷ்ணவன்? பெண் பிள்ளையைத் தொந்தரவு படுத்துகிறான்?" என்றார்கள். இந்த வார்த்தைகள் காதில் விழுந்து வேளக்காரப்படையில் பின்னால் போனவர்கள் திரும்பி வந்தார்கள். ஊமை ராணியைச் சூழ்ந்துகொண்டு மற்றவர்களை அப்புறப்படுத்தினார்கள். அந்த நெருக்கடியில் திருமலையும் பூங்குழலியும்கூட அப்பால் தள்ளப்பட்டு விலகிப் போக நேர்ந்தது. வேளக்காரப் படையில் ஒருவன் மந்தாகினி தேவியிடம் "அம்மா! நீ யார்? உன்னை யார் தொந்தரவு செய்தார்கள், சொல்! அவனை இங்கேயே தூக்கிலே போட்டு விடுகிறோம்!" என்று கேட்டான். ஊமை ராணி மறுமொழி சொல்லாமல் நின்றாள். இன்னும்



சிலர் கேட்டதற்கும் அவன் பதில் சொல்லவில்லை. இதற்குள் ஒருவன் "இவளைப் பார்த்தால் பழுவூர் ராணி ஜாடையாக இல்லையா?" என்றான். இன்னொருவன், "அப்படித்தான் இருக்க வேண்டும். அதனாலேதான் இவ்வளவு கர்வமாயிருக்கிறாள்!" என்றான், "பழுவூர்க் கூட்டமே கர்வம் பிடித்த கூட்டம்!" என்றான் மற்றொருவன். இந்த நிகழ்ச்சிகள் சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனைக்குச் சமீபத்தில் நிகழ்ந்தன. ஆகையால் என்ன சச்சரவு என்று தெரிந்து கொள்வதற்காகப் பழுவூர் வீரர்கள் சிலர் அங்கே வந்தார்கள். "பழுவூர்க் கூட்டமே கர்வம் பிடித்த கூட்டம்" என்று வேளக்கார வீரன் ஒருவன் கூறியது அவர்கள் காதில் விழுந்தது. "யாரடா பழுவூர்க் கூட்டத்தைப் பற்றி நிந்தனை செய்கிறவன்? இங்கே முன்னால் வரட்டும்" என்றான் பழுவூர் வீரன் ஒருவன். "நான்தானடா சொன்னேன்! என்னடா செய்வாய்?" என்று வேளக்கார வீரன் முன் வந்தான். "நீங்கள்தானடா கர்வம் பிடித்தவர்கள். உங்கள் கர்வம் பங்கமடையும் காலம் நெருங்கி விட்டது!" என்றான் பழுவூர் வீரன். "ஆகா! எங்கள் இளவரசரைக் கடலில் மூழ்கடித்து விட்டதனால் இப்படிப் பேசுகிறாயா? உங்களைப் போன்ற பாதகர்கள் இருப்பதாலேதான் புயல் அடித்து ஊரெல்லாம் பாழாகிவிட்டது!" என்றான் கூட்டத்தில் ஒருவன். பழுவூர் வீரன், "என்னடா சொன்னாய்?" என்று அவனைத் தாக்கப் போனான். வேளக்கார வீரன் அவனைத் தடுத்தான். பின்னர் கூட்டத்தில் கை கலப்பும் குழப்பமும் கூச்சலும் எழுந்தன. "பழுவூர் வள்ளல்கள் வாழ்க!" என்று சிலரும், "மூன்று உலகம் உடைய சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க!" என்று சிலரும் கோஷமிட்டார்கள். "கொடும்பாளூர் வேளார் வாழ்க!" "திருக்கோவலூர் மலையமான் வாழ்க!" என்ற குரல்களும் எழுந்தன. அச்சமயத்தில் சின்னப் பழுவேட்டரையரே குதிரை மீது ஆரோகணித்து அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் சண்டை நின்றது. ஜனங்களும் கலைந்து நாலாபுறமும் சிதறி ஓடினார்கள். வேளக்காரப் படையினர் முன்னால் சென்றார்கள். பழுவூர் வீரர்கள் காலாந்தக கண்டரைச் சூழ்ந்து கொண்டு நடந்ததைத் தெரிவித்தார்கள். பூங்குழலியும் ஆழ்வார்க்கடியானும் வீதி ஓரத்தில் ஒதுங்கினார்கள். சுற்றுமுற்றும் கூர்ந்து கவனித்தார்கள். மந்தாகினியைக் காணவில்லை.

"ஐயோ! இது என்ன? இப்படி நேர்ந்துவிட்டதே! தலைநகரில் அரசாட்சி அழகாக நடக்கிறது! அத்தையை எப்படிக் கண்டுபிடிப்பது? ஏதாவது கெடுதல் நேர்ந்திருக்குமோ? யாரேனும் பிடித்துக்கொண்டு போயிருப்பார்களோ?" என்று பூங்குழலி கவலைப்பட்டாள். காலாந்தக கண்டரும் பழுவூர் வீரர்களும் போன பிறகு நாலாபுறமும் தேடிப் பார்த்தார்கள். மந்தாகினியைக் காணவில்லை. திருமலை "நான் இன்னும் சிறிது நேரம் தேடிப் பார்க்கிறேன். நீ சீக்கிரம் சென்று முதன் மந்திரியிடமும் இளையபிராட்டியிடமும் சொல்லு! நாம் இரண்டு பேர் மட்டும் தேடினால் போதாது. முதன் மந்திரியும் இளையபிராட்டியும் ஏதேனும் ஏற்பாடு செய்வார்கள்" என்றான். பூங்குழலி போவதற்குத் தயங்கினாள். மறுபடியும் ஆழ்வார்க்கடியான், "நான் சொல்வதைக் கேள். உன் அத்தைக்கு ஒன்றும் நேர்ந்திருக்க முடியாது. ஜனக்கூட்டத்தில் யாரோ தெரிந்த மனிதன் ஒருவனை உன் அத்தை பார்த்திருக்கிறாள். அவள் ஒரு திக்கையே கவனமாக நோக்கியதிலிருந்து ஊகிக்கிறேன். அதனாலேதான் கூட்டத்தோடு சேர்ந்து வந்தாள். இப்போதும் அவனைத் தொடர்ந்துதான் போயிருக்கிறாள் என்று தோன்றுகிறது. எப்படியும் கண்டுபிடித்து விடலாம். நீ போய் முதன் மந்திரியிடம் சொல்லு!" என்றான். பூங்குழலி முதன் மந்திரியின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள்.

இதையெல்லாம் கேட்ட குந்தவை

பெரிதும் கவலை அடைந்தாள். அநிருத்தர் அவ்வளவு கவலை கொண்டதாகத் தெரியவில்லை. "பார்த்தீர்களா, இளவரசி! கலகப் பிசாசு எப்போது சந்தர்ப்பம் கிட்டும் என்று காத்துக் கொண்டிருப்பதை அறிந்துகொண்டிருக்கிறீர்களா? அருள்மொழி வர்மர் உயிரோடிருக்கிறார் என்று தெரிய வேண்டியதுதான். ராஜ்யமெங்கும் தீ மூண்டு விடும்!'' என்றார்.

''தாங்கள் முதன் மந்திரியாயிருக்கும்வரையில் அப்படி ஒன்றும் நேராது. இப்போது, என் பெரியன்னையைப் பற்றிச் சொல்லுங்கள், நான் பயந்தது போலவே ஆகி விடும் போலிருக்கிறதே! அவரை எப்படிக் கண்டுபிடிப்பது?'' என்று கேட்டாள்.

"அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். கோட்டைக்குள் வந்துவிட்டபடியால் இனி நான் அறியாமல் வெளியில் போக முடியாது. அதற்குத் தக்க ஏற்பாடு செய்து விடுகிறேன். தேடவும் ஏற்பாடு செய்கிறேன். இனி, சக்கரவர்த்தியைப் பார்க்காமல் மந்தாகினி தேவி இவ்விடம் விட்டுப் போகவும் மாட்டாள்!'' என்றார்.

## இருபத்து ஏழாம் அத்தியாயம்

# பொக்கிஷ நிலவறையில்

பூங்குழலி மந்தாகினி தேவியை விட்டுப் பிரிந்த இடத்தில் நாம் இப்போது அந்த மாதரசியைத் தொடர்வது அவசியமாகிறது. அவள் கூட்டத்திலும் குழப்பத்திலும் மறைந்து விட்ட காரணம் பற்றி ஆழ்வார்க்கடியான் கூறியது உண்மையேயாகும். வேளக்காரப் படையுடன் தொடர்ந்து கோட்டைக்குள் பிரவேசித்த கூட்டத்தில் மந்தாகினி ரவிதாஸன் என்னும் சதிகாரனைப் பார்த்துவிட்டாள். ஏதேனும் ஒரு புலன் குறைவாயுள்ளவர்களுக்கு மற்றப் புலன் நன்கு இயங்குவது இயல்பல்லவா? மந்தாகினிக்கோ காது கேளாது; வாய் பேசாது. அவ்வளவுக்கு, அவளுடைய கண் பார்வை கூர்மையாயிருந்தது. ஆழ்வார்க்கடியானும், பூங்குழலியும் மந்தாகினி தேவியையே கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஆகையால் அவர்கள் கண்ணிற்குப் படாத ரவிதாஸன் மந்தாகினியின் பார்வைக்கு இலக்கானான்.

வரப் போகும் நன்மை தீமைகளை முன்னாலேயே அறிந்து கொள்ளக் கூடிய இயற்கையான உணர்ச்சி அறிவும் மந்தாகினிக்கு இருந்தது. ஆதலின் ரவிதாஸன் ஏதோ தீய காரியத்துக்காகவே இங்கே வந்திருக்கிறான் என்பதை அவள் உணர்ந்துகொண்டாள். ஏற்கனவே ஈழ நாட்டில் அருள்மொழி வர்மனை ரவிதாஸன் கொல்ல முயன்றதையும் அவள் அறிந்திருந்தாள் அல்லவா? ஆதலின் கூட்டத்தோடு கூட்டமாகத் தஞ்சையின் வீதிகளில் சென்ற போது அவள் பார்வை ரவிதாஸனை விட்டு அகலவில்லை.

குழப்பத்தின் உச்சமான நிலையில் சின்னப் பழுவேட்டரையர் குதிரை மேலேறி வந்த சமயத்தில் ஜனக்கூட்டம் சடசடவென்று கலைந்ததல்லவா? அச்சமயம் ரவிதாஸனும் இன்னொரு மனிதனும் ஒரு சந்து வழியில் அவசரமாகப் புகுந்து செல்வதை மந்தாகினி பார்த்தாள். உடனே அந்தத் திசையைக் குறி வைத்து அவளும் வேகமாகச் சென்று அதே சந்து வழியில் பிரவேசித்தாள்.

இது நிகழ்ந்த ஒரு நிமிட நேரத்தில், ஜனக் கூட்டத்தினால் மோதித் தள்ளப்பட்ட திருமலையும் பூங்குழலியும்

மந்தாகினியைக் கவனிக்க முடியவில்லை. மந்தாகினி சந்து வழியில் புகுந்த பிறகு இரண்டொரு தடவை திரும்பிப்பார்த்தாள். திருமலையும், பூங்குழலியும் வருகிறார்களோ என்று. அவர்களைக் காணவில்லை. ஆனாலும் ரவிதாஸனைத் தொடர்வதே முக்கியமான காரியம் என்று எண்ணிச் சென்றாள். இந்த வரலாற்றின் ஆரம்பத்தில் வந்தியத்தேவன் காலாந்தக கண்டரின் ஆட்களிடமிருந்து தப்பிச் சென்ற வழியிலேயே ரவிதாஸனும் அவனுடைய தோழனையும் முன்னம் நாம் சந்தித்திருக்கிறோம். திருப்புறம்பயம் பள்ளிப்படையிலே நள்ளிரவு சதி கூட்டத்திலே நாம் பார்த்த சோமன் சாம்பவன் என்பவன்தான் அவன்.

அவ்விருவரும் அதிவேகமாகச் சந்து பொந்துகளில் புகுந்து சென்றார்கள். ஆங்




ஆங்கு விழுந்து கிடந்த மரங்களைப்
பொருட்படுத்தாமல் தாண்டிக்

குதித்துச் சென்றார்கள். மழைத் தண்ணீர் தேங்கியதால் ஏற்பட்டிருந்த சேற்றுக் குட்டைகளையும் கவனியாமல் சென்றார்கள். இன்னமும் இலேசாகக் காற்று அடித்துக் கொண்டிருந்த படியால் மரக் கிளைகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. கிளைகளிலிருந்து அவ்வப்போது தண்ணீர்த் துளிகள் சலசலவென்று விழுந்தன. தங்களை யாரும் பின் தொடர்வார்கள் என்ற எண்ணமோ அவர்களுக்கு லவலேசமும் இல்லை. ஆகையால் அவர்கள் திரும்பிப் பாராமலே விரைந்து சென்றார்கள். திரும்பிப் பார்த்திருந்தாலும் மந்தாகினி தேவியை அவர்கள் பார்த்திருக்க முடியாது.

கடைசியில், அவர்களுடைய துரிதப் பிரயாணம் பெரிய பழுவேட்டரையருடைய அரண்மனைத் தோட்டத்தின் பின் மதில் ஓரத்தில் வந்து நின்றது. புயலினால் வேருடன் பறிக்கப்பட்ட மரம் ஒன்று அந்த மதில் மேலே விழுந்து முறிந்து கிடந்தது. ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் அந்த மரத்தின் மீது எளிதில் ஏறி மதிலைக் கடந்து அப்பால் தோட்டத்தில் குதித்தார்கள். அவர்கள் குதிப்பதைப் பார்த்த மந்தாகினி தேவியும் சிறிது நேரத்துக்கெல்லாம் அதே மரங்களின் மீது ஏறி அப்பாலிருந்த தோட்டத்தில் இறங்கினாள்.

ரவிதாஸன் சோமன் சாம்பவனைச் சற்றுத் தூரத்திலேயே நிறுத்தி விட்டுப் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையை அணுகினான். பெரிய பழுவேட்டரையரும் பழுவூர் இளையராணியும் இல்லாதபடியால் அரண்மனை சூனியமாகக் காணப்பட்டது. எனினும் பெண்களின் பேச்சுக்குரல் மட்டும் கேட்டது.

ஒருமுறை இரண்டு தாதிப் பெண்கள் அந்த மாளிகையின் பின் முகப்புக்கு வந்தார்கள். தோட்டத்து மரங்கள் பல முறிந்து விழுந்து கிடந்ததைப் பார்த்தார்கள். "ஆகா! அனுமார் அழித்த அசோக வனம் மாதிரியல்லவா இருக்கிறது?" என்றாள் ஒருத்தி. "நம்முடைய சீதாதேவி இங்கே இச் சமயம் இருந்திருந்தால், ரொம்ப மனவேதனைப் பட்டிருப்பாள்!" என்றாள் இன்னொருத்தி. சற்று நேரம் இவ்விதம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவர்கள் திரும்ப உள்ளே செல்லும் சமயத்தில் ரவிதாஸன் வாயைக் குவித்துக்கொண்டு ஆந்தைக் குரல் போன்ற ஒலி உண்டாக்கினான். தாதிப் பெண்கள் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். ரவிதாஸன் நன்றாக மறைந்து கொண்டிருந்தான். தாதிகளில் ஒருத்தி "பாரடி! பட்டப் பகலில் கோட்டான் கத்துகிறது! நேற்று அடித்த புயலில் ஆந்தைக்கும் புத்தி சிதறிவிட்டது!" என்றாள். இன்னொருத்தி ஒன்றும் சொல்லவில்லை.

சற்று நேரத்துக்கெல்லாம் மறுமொழி சொல்லாமல் சென்றவள் திரும்பி வந்தாள். பழுவூர் அரண்மனைக்கும் பொக்கிஷ நிலவறைக்கும் நடுவில் இருந்த வஸந்த மண்டபத்துக்கு வந்து சேர்ந்தாள். இந்த மண்டபத்திலேதான் வந்தியத்தேவன் பழுவூர் ராணியைச் சந்தித்தான் என்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். அங்கே வந்து நின்ற அந்தத் தோழிப் பெண் தோட்டத்தை உற்றுப் பார்த்தாள். மறுபடியும் ஆந்தையின் குரல் கேட்டது. குரல் வந்த இடத்தை நோக்கி அந்தப் பெண் நடந்து வந்தாள். மரத்தின் மறைவிலிருந்து ரவிதாஸனும் முன்னால் வந்தான். காந்த சக்தி கொண்ட கண்களால் அவளை விழித்துப் பார்த்தான்.

"மந்திரவாதி! வந்து விட்டாயா? இளையராணி கூட இங்கே இல்லையே? எதற்காக வந்தாய்?" என்று கேட்டாள்.

"பெண்ணே! இளையராணி அனுப்பித்தான் வந்திருக்கிறேன்!" என்றான் ரவிதாஸன்.

"போன இடத்திலும் ராணியை நீ விடவில்லையா? இங்கே எதற்காக வந்தாய்? யாருக்காவது தெரிந்தால்...

"தெரிந்தால் என்ன முழுகி விடும்?"

"அப்படிச் சொல்லாதே! சின்னப் பழுவேட்டரையர் எங்கள் பேரில் சந்தேகம் கொண்டிருக்கிறார். என்னை அழைத்து ஒருநாள் கடுமையாக எச்சரித்தார். மறுபடியும் மந்திரவாதி வந்தால் தம்மிடம்



வந்து சொல்ல வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார்..."

"அவன் கெட்டான், போ! அவர்களுடைய காலமெல்லாம் நெருங்கிவிட்டது. நீ ஒன்றும் கவலைப்படாதே! நிலவறையின் சாவி வேண்டும். சீக்

கிரம் கொண்டு வந்து கொடு!'' என்றான் ரவிதாஸன்.

"ஐயையோ! நான் மாட்டேன்!''

"இதோ பார், உன் எஜமானியின் மோதிரம்!'' என்று ரவிதாஸன் இளைய ராணியின் முத்திரை மோதிரத்தைக் காட்டினான்.

"இதை நீ எங்கே திருடினாயோ, என்னவோ, யார் கண்டது?''

"அடி பாவி! என்னையா திருடன் என்கிறாய்? இளையராணியே என்னைக் கண்டு நடுநடுங்குவதைப் பார்த்து விட்டுமா இப்படிச் சொல்கிறாய்? பார்! இன்றிரவே ஒன்பது பிசாசுகள் வந்து உன்னை உயிரோடு மயானத்துக்குத் தூக்கிச் சென்று...''

"வேண்டாம், வேண்டாம்! உன் பிசாசுகள் எல்லாம் உன்னிடமே இருக்கட்டும். எனக்கென்ன வந்தது? இளையராணியின் மோதிரத்தைக் காட்டினால் நீ கேட்டதைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன். ஆனால் அவசரப்படாதே! தோட்டம் அழிந்து கிடப்பதைப் பார்க்க அடிக்கடி பெண்கள் இங்கே வருகிறார்கள். எல்லாரும் சாப்பிடும் சமயத்தில் நான் உன்னிடம் சாவியைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். அதுவரை பொறுத்திரு...!''

"ஆகட்டும்; எனக்கும் கொஞ்சம் சாப்பாடு கொண்டு வா! சாப்பிட்டு இரண்டு நாட்கள் ஆகிறது. நிறையக் கொண்டு வா!'' என்றான் ரவிதாஸன்.

தாதிப் பெண் போன பிறகு ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் விழுந்து கிடந்த மரம் ஒன்றின் மேல் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் அறியாத வண்ணம் மந்தாகினியும் சற்றுத் தூரத்தில் மறைவான இடத்தில் உட்கார்ந்துகொண்டாள்.

ரவிதாஸனும் தாதிப் பெண்ணும் பேசியது ஒன்றும் அவளுக்குப் புரியாவிட்டாலும் ஏதோ நடக்கப் போகிறதென்று ஊகித்துக்கொண்டாள்.

வெகு நேரம் கழித்து அத் தாதிப் பெண் திரும்ப வந்தாள். ரவிதாஸன் எழுந்து முன்னால் போனான். அவள் கொண்டு வந்திருந்த சோற்று மூட்டையையும் சாவிக்கொத்தையும் வாங்கிக் கொண்டான். பிறகு, வஸந்த மண்டபத்தை அடைந்து அங்கிருந்து பொக்கிஷ நிலவறைக்குச் சென்ற நடைபாதையில் இருவரும் சென்றார்கள். ஒரு சாவி, இரண்டு சாவி, மூன்றாவது சாவியையும் போட்டுத் திருப்பிய பிறகு, பூட்டுத் திறந்தது. நிலவறையின் உள்ளே ஒரே கும்மிருட்டாக இருந்தது.

ரவிதாஸனும் தாதிப் பெண்ணைப் பார்த்து, "அடடா! ஒன்று மறந்து விட்டேனே! இந்த இருட்டறையில் விளக்கு இல்லாமல் எப்படிப் போவது? ஒரு விளக்காவது தீவர்த்தியாவது கொண்டு வா!'' என்றான்.

"பட்டப் பகலில் தீவர்த்தியும், விளக்கும் எப்படிக் கொண்டு வருவேன்? யாராவது பார்த்துச் சந்தேகப்பட்டால்?''

"அது எனக்குத் தெரியாது! உனக்கு அவ்வளவு சாமர்த்தியம் இல்லை என்றா சொல்கிறாய்? நான் நம்ப மாட்டேன். தீவர்த்தியாவது தீபமாவது கொண்டு வா! இல்லாவிடில் இராத்திரி பன்னிரண்டு கொள்ளிவாய்ப் பிசாசுகளை அனுப்பி...''

"ஐயையோ! சும்மா இரு! எப்படியாவது கொண்டு வந்து தொலைக்கிறேன்'' என்று கூறினாள் அந்தத் தாதிப் பெண்.

"அதற்குள் நானும் சாப்பிட்டு முடிக்கிறேன்'' என்றான் ரவிதாஸன்.

தோழிப் பெண் அரண்மனையை நோக்கிச் சென்ற பிறகு ரவிதாஸனும் சோற்று மூட்டையுடன் தோட்டத்துக்குள் பிரவேசித்தான். சோமன் சாம்பவனும் வந்தான். அவனிடம் சோற்று மூட்டையைக் கொடுத்து, "ஒருவேளை இரண்டு மூன்று நாட்கள் நிலவறையிலேயே நீ இருக்கும்படி நேரலாம். சரியான சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் அல்லவா? ஆகையால் இந்தச் சோற்று மூட்டையை வைத்துக் கொள். வேலை எடுத்துக் கொண்டு, என்னோடு சப்தமிடாமல் வா! அந்தப் பெண் தீவர்த்தி கொண்டு வரப் போயிருக்கிறாள். அதற்குள் நீ நிலவறைக்குள் புகுந்து விட வேண்டும்!'' என்று சொன்னான்.

இருவரும் துரிதமாகச் சென்றார்கள். மந்தாகினியும் அவர்கள் அறியாமல் பின் தொடர்ந்தாள்.

(தொடரும்)



# இராம மந்திரம்



**'ராமா'** என்ற மந்திரத்தின் பொருள் மகிழ்விப்பவன் என்பதாகும். ராம மந்திரத்தை உச்சரிக்கும் பொழுது உள்ளிருக்கும் ஆனந்தத்தை மறைத்துக் கொண்டிருக்கும் திரை விலகுகிறது. உள்ளிருக்கும் ஆனந்தம் அப்பொழுது தங்குதடையின்றி வெளிப்படுகின்றது. சதா மகிழ்வுற்றிருப்பது யோகத்தின் பாங்கு ஆகும். ராம மந்திரத்தை உச்சரித்தால் ஒருவன் **யோகி** ஆகலாம். அப்படி ராம மந்திரத்தை உச்சரித்து வால்மீகி என்னும் மஹரிஷி யோகியானார்.

**தாரக மந்திரம்** என்று சொல்லப்படும் ராம மந்திரத்தைச் சிவனார் இடைவிடாது உச்சரித்து வருகிறார்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** காசிக்கு சென்றிருந்தார். அங்கு அவர் ஞானக் காட்சியில் இவ்வுண்மையைக் கண்டார். காசியில் உடலை உருக்கின்றவர்களுக்கு முக்திக்கு இடைஞ்சலாக இருக்கும் கர்மத்தை மாதா அன்னபூரணி ஒதுக்கி வைக்கின்றனர். காசியில் உடலை உருக்கும் ஜீவனுடைய காதில் சிவனார் ராம மந்திரத்தை ஜீவன் வாங்கிக் கொண்டு கிரம முக்திக்கு போகின்றான்.

**கந்த புராணத்தில்** காசி காண்டத்தில் சொல்லப்பட்டுள்ள இந்நிகழ்ச்சி ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு ஞானக் காட்சியாக தென்பட்டது.

**சிவனார்** ஓதும் மந்திரம் ராம என்னும் தாரகப் பிரம்மமாகும். அது எத்தகையது. அது சிவனாருடைய சொரூபமேயாகும். சிவனாருடைய சொரூபத்திற்கு அது புரம்பானதன்று. ஹரா என்பது சிவன் அம்சம். உமா என்பது அம்பிகையின் அம்சம். சிவ சக்தியாகப் பிரிக்க முடியா அர்த்த நாரீசுவரராகச் சிவன் இருக்கின்றார். மராமரா என்று சொன்னது எப்படி ராம என்று ஆனதோ அப்படி **ஹரா உமா, ஹரா உமா, ஹரா உமா** என்று சதா சொல்லிக் கொண்டே இருந்தால் அது ராம என்னும் மந்திரம் அமைந்திருக்கின்றது.

**எனவே, ராம என்னும் மந்திரம் தசரதனுடைய காலத்தில் வந்ததன்று. அது அனாதி. சதா இயற்கையில் பிரணவத்தினுடைய அம்சமாக பிரம்மமாக இந்த ஓசை இருந்து கொண்டிருக்கிறது.**

ஆதாரம் : **தர்மச்சக்கரம்**

---

**அத்துடன் கிராண்ட் ஸ்வீட்டுகளை வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.**

---

**திருமண வைபவங்களுக்கு :** சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன்குழல், தேன்குழல், சீர் அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்து தரப்படும்.

# நடக்குமென்பார், நடக்கும்!

வாங்கன்னே சொல்லலாம். குடும்பத்தில் காத்திருக்கறவங்களுக்கு சுபமுகூர்த்த தேதிகள் குறிக்கற வாரம்கிறதால சந்தோஷச் சூழ்நிலை உருவாகும். சிலருக்கு வாகனம் வாங்கற யோகமோ, சிலருக்கு வாகனத்தை விக்கறது மூலம் லாபமோ கிடைக்கும். சமயத்தில் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரும். விளையாட்டுத் துறை வீரர்களுக்குப் பரிசுக் கோப்பைகள் உறுதி. பொதுவா பயணத்தைத் தவிர்ப்பதும் பேச்சில் நிதானம் காட்டுவதும் அவசியம்.



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)* இந்த வாரம் நீங்க முதல்ல கவனிக்க வேண்டியது தேக ஆரோக்கியம். மத்தவங்களால சங்கடங்கள் வரும்; அதையும் சமாளிக்க வேண்டியிருக்கும். பாடுபட்டாத்தான் கொஞ்சமாவது பணம் கிடைக்கும்கிறதில்லை; சமயத்தில் கைப்பொருளையும் இழக்க வேண்டியிருக்கும். உஷாரா இருங்க. புது முயற்சியேதும் இப்ப வேண்டாம். மனசுல ஒருவித குழப்பம் இருந்துக்கிட்டே இருக்கும். அந்தக் குழப்பத்துல மத்தவங்கிட்ட வார்த்தைகளை அனாவசியமா விட்டுடாதீங்க. அது வீண் வம்புல கொண்டு போய் விட்டுடும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)* இந்த வாரம் ரொம்பவும் ஜரூரான வாரம்தான் உங்களுக்கு. உங்க திறமையும் திறனும் வெளிப்படும். ராஜாங்க விஷயத்தில் அனுகூலம் தெரியும். வீடு, ஃப்ளாட்டுனு வாங்கற யோகமும் இருக்கு. சிலருக்கு வாகனம் வாங்கற வாய்ப்பும் இருக்கு. புதுப் பதவிகள், பொறுப்புகளும் சிலருக்கு வந்து சேரும். வியாபாரிகளுக்கும் நல்ல வளர்ச்சி தெரியும். நண்பர்கள் தொடர்பு உபயோகமானதா இருக்கும். சிலர் துணிச்சலான காரியங்களில் இறங்கி ஜெயிச்சும் காட்டுவீங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)* நல்ல நல்ல சந்தர்ப்பங்கள் கனிந்து வரும் வாரம் இது. எதிரிகள் விலகிப் போவாங்கங்கறதை விட விலகி ஓடு



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)* சின்னச் சின்ன குறுக்கீடுகள் வந்துகிட்டே இருக்கும்கிறதால, எந்த விஷயத்தையும் பக்குவமா சமாளிக்க வேண்டியது அவசியம். இல்லேன்னா கணவன் – மனைவி உறவுல கூட சலசலப்புகளைத் தவிர்க்க முடியாம போயிடும். வெளிநாட்டுத் தொடர்பால ஓரளவுக்குப் பயனுண்டுன்னாலும் புது முயற்சிகள் ஏதும் இப்ப வேணாம். செய்யற தொழிலில் முழு கவனம் செலுத்தலேன்னா அநாவசியச் சிக்கல் வர சான்ஸ் இருக்கு. பயணத்தின்போது ரொம்பவும் எச்சரிக்கையா இருக்கணும்கிறதோட, பங்குதாரர்கள்கிட்டயும் உஷாரா இருக்க வேண்டியது அவசியம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)* வழக்கமான விஷயங்களெல்லாம் நூல் பிடிச்ச மாதிரி கச்சிதமா நடந்து வரும். நல்ல மனிதர்களின் ஆதரவு உங்களுக்குப் பக்கபலமா இருக்கும். வெளிநாட்டுத் தொடர்பு லாபம் தரும். பண விஷயத்திலும் நல்ல அபிவிருத்தி தெரியும். திடீர் அதிர்ஷ்டங்களுக்கும் வாய்ப்புகள் இருக்கு. வீட்டுல உள்ள பெரியவங்க பஞ்சாங்கமும் கையுமா அலைவாங்க. முகூர்த்த நாள் குறிக்கணுமே! விளையாட்டு வீரர்கள் எச்சரிக்கையா இல்லேன்னா விபத்துகளுக்கு வாய்ப்பாயிடும்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)* புதிய பதவிகளும் பொறுப்புகளும் வந்து சேரக்கூடிய வாரம் இது. வியாபாரம், தொழில் எதுவானாலும் சீரான வளர்ச்சியை எதிர்பார்க்கலாம். வெளியூர் வெளிநாட்டுத் தொடர்பால அளவோடு பலன் கிடைக்கும். பயணத்தாலும் பலனுண்டுன்னாலும் பாதுகாப்

பாகப் பயணம் செய்ய வேண்டியது அவசியம். சிலர் கிட்ட மாத்திரம் அதிக அன்பு காட்டினா, மத்தவங்களோட அதிருப்திக்கு உள்ளாவீங்க. குடும்பத்தாரின் உடல்நலனிலும் அக்கறை காட்டுவது அவசியம்.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கிரகங்களெல்லாம் அனுகூலப் பிரதேசத்தில் சஞ்சாரம் பண்றப்போ, உங்களுக்கென்னங்க குறைச்சல்? நினைச்சதெல்லாம் நினைச்சபடி நிறைவேறும். சிலர் செயற்கரிய காரியங்களைச் செய்து சாதனை படைப்பீங்க. வி.ஐ.பிகள் தொடர்பு நல்ல பலனைத் தரும். பண நடமாட்டம் சீரா இருக்கும். திடீர் அதிர்ஷ்டங்களுக்கும் சான்ஸ் இருக்கு. உத்தியோகஸ்தர்களுக்கு பிரமோஷன் கிடைக்கும். காளையர்களுக்கும் கன்னியர்களுக்கும் கைத்தலம் பற்றும் நாள் வரும். பொதுவா சிறப்பான வாரம் மட்டுமில்லை; மத்தவங்க பாராட்டும் படியான வாரமும் கூட!



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எடுத்த காரியங்களை எப்படியாவது செய்து முடிப்பீங்க. வீடு, வாகன வகைகளில் நல்ல லாபம் கிடைக்கும். குறிப்பா எண்ணெய் வகை, இரும்பு, எஃகு, தோல் சம்பந்தப்பட்ட இனங்களில் கொழுத்த லாபத்துக்கே சான்ஸ் இருக்கு. உங்கள் உடல்நலனோடு குடும்பத்தாரின் உடல் நலனிலும் அக்கறை காட்ட வேண்டியது அவசியம். கூடவே கொடுக்கல், வாங்கலிலும் அதிக உஷாராயிருக்கணும். பயணத்தின் போது எச்சரிக்கையா இல்லேன்னா வீண் விரயத்துக்கும் எதிர்பாராத செலவுகளுக்கும் ஆளாக நேரிடும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க புத்திசாலித்தனமும் சாமர்த்தியமும் கூடுற வாரம் இது. செய்கிற காரியங்களிலும் வெற்றி உறுதி. பண வரவும் கூடும். பண நடமாட்டம் உள்ள இனங்களில் வேலை செய்பவர்களுக்கு நல்ல முன்னேற்றம் தெரியும். சிலருக்கு வேண்டிய இடத்துக்கு டிரான்ஸ்ஃபர் கிடைக்கும். வேலையிலிருப்பவர்களுக்குப் பதவியுயர்வு, இன்கிரிமெண்ட் கிடைக்க சான்ஸ் இருக்கு. பிரம்மச்சாரிகளுக்கும் குடும்பஸ்தன்கிற புரமோஷன் கிடைக்கும். கலைத் துறையினருக்குப் புகழ்கூடும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமை, ஆற்றல், நிர்வாகத் திறனையெல்லாம் வெளிப்படுத்தறதுக்காகவே இந்த வாரம் செவ்வாய் சஞ்சாரம் செய்கிறார். மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் இருக்கறதால எந்தக் காரியமானாலும் ஜெயிச்சுக் காட்டுவீங்க. வழக்கு விவகாரங்களிலும் விளையாட்டுக்களிலும் உங்க பக்கமே ஜெயலக்ஷ்மி குடியிருப்பாள். குடும்பத்தில் நல்லது நடக்கும்கிறது மட்டுமில்லை; புதிய சொத்துக்கள் சேரும் வாய்ப்பும் உண்டு. வாரக் கடைசில புதுமுயற்சிகள் வேணாம். பயணத்திலும் எச்சரிக்கை அவசியம்.

●●

**மகர ராசிக்காரரான சுரேஷ் சக்கரவர்த்திக்கு புதுசா சொத்து சேரப் போவுதாம்!**

●●





**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

தைரியலக்ஷ்மி பக்கத்திலிருக்கிற வாரம் இது. தொழிலாளர்களுக்கும் விவசாயிகளுக்கும் நல்ல முன்னேற்றம் தெரியும். தகவல் - தொடர்பு சாதனங்களில் வேலை பார்க்கிறவர்களுக்கு புரமோஷன் உறுதி. வெளியூர் - வெளிநாட்டுத் தொடர்புகளால் பயனும் ஆதாயமும் கிடைக்கும். வார்த்தைகளில் இனிமை காட்டினாலே சிறு சிறு சங்கடங்களைச் சுலபமா சமாளிக்கலாம். ஷேர் மாதிரியான வேலை செய்பவர்கள் பண விஷயங்களில் உஷாராயிருக்கணும். சில உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டாத டிரான்ஸ்ஃபர் கிடைக்கலாம்.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

மதிப்பும் செல்வாக்கும் உயரும் வாரம். பணப் புழக்கம் நிறையவே இருக்கும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளையும் எதிர்பார்க்கலாம். இளைஞர் இளைஞிகளுக்கு சுபயோக சுபதினம் குறிக்கப்படும். வெளிநாட்டுத் தொடர்பும் கடல் வாணிபமும் நல்ல ஆதாயம் தரும். வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். கூட்டுத் தொழில் பண்றவங்களுக்கு நல்ல வளர்ச்சி தெரியும். உஷ்ணாதிக்கத்தால் உடல்நலக் குறைவு ஏற்படலாம். தந்தை அல்லது தாய்வழிச் சொத்துக்களாலும் செலவுகள் ஏற்படலாம். பயணம் வேண்டாம். ○

உள்ளே, டாக்டர் பறந்து கொண்டிருந்தார். ''நர்ஸ், இன்ஜெக்ஷன்! கால் கார்டியாலஜிஸ்ட் மூர்த்தி! நீ ச.பி.ஜி. பாரு; க்விக்; வெரி மெனி காம்ப்ளிகேஷன்ஸ்; எம்போலஸ் அண்ட் டயாபடீஸ்; இரத்தம் இரத்தக் குழாயிலேயே உறைஞ்சு கட்டியாகி, கட்டி கொஞ்சமாய் உடைந்து, மெது மெதுவாய் நகர்ந்து, வலது காலுக்குப் போற பிரதான இரத்தக் குழாயை அடைச்சுட்டுது; காலுக்குச் சரியான இரத்த ஓட்டம் இல்லை; சுவாதீனமும் கொஞ்சம் கம்மியாத்தான் இருக்கு; விட்டால் கால் அழுகிப் போகலாம்; இன் ஸச் கேஸ், வீ கான்ட் ஹெல்ப் ஆம்புடேஷன்'' என்று தன் சக டாக்டரிடம் சொல்லிக் கொண்டே வெளியே வந்தவர், கண்ணாடிக் கதவு வழியாய் அதுவரை அங்கு காத்துக் கொண்டிருந்த ரகுராமனைப் பார்த்ததும், நிதானித்தார்; ''வீ வில் ட்ரை அவர் லெவல் பெஸ்ட்; டோன்ட் வொர்ரி'' என்று தனக்கு மிகவும் பழக்கப்பட்ட வார்த்தைகளை உதிர்த்து விட்டு அடுத்த ஐ.சி.யு.வின் மூளைக்கட்டி நோயாளியைப் பார்க்க ஓடினார்.

# கால்

சன்னக் குரலில், கண்ணாடிக் கதவு தாண்டி அவர்கள் பேசிக் கொண்ட எதையும் விளங்கிக் கொள்ள இயலவில்லை என்றபோதிலும் – ரகுராமனால் ஒரே ஒரு செய்தியை மட்டும் உள்வாங்க முடிந்தது. இனி – ஆறடி உயரமும், அதற்கேற்ற உடலும், வெளுத்த நிறத்தில் தூக்கி வாரிய தலையும் தும்பைப் பூ வேட்டியுமாய் வளைய வரும் அப்பா முன்பு போல தன்னிச்சையாய் இயங்க முடியாது. அசத்தலாய் ட்ராக் சூட் போட்டுக் கொண்டு பள்ளிக் குழந்தைகளுக்கு கேம்ஸ் சொல்லித் தர முடியாது; முன்னெப் போதும் போல ஆசையாசையாய் ஓடி வந்து கால்களைக் கட்டிக் கொள்ளும் ப்ரீத்தாக் குட்டியைத் தூக்கித் தோளில் உட்கார வைத்துக் கொண்டே தோட்டத்தில் பழம் பறிக்க முடியாது; காலை வாக்கிங், ஜாகிங், தனியாளாய் குளிக்க, வெளி வாசலுக்குப் போய் வர....

நடைமுறையில் இன்னும் எத்தனையோ முடியாதுகள்!

சட்டென்று, ''அம்மா தாங்குவாளா?'' என்ற எண்ணம் மின்னலாய்... கடவுளே! ''என்னடாம்பி? உயிருக்கொண்ணும் ஆபத்தில்லையே? காலுக்கு என்ன சொன்னா? பகவானே! அவர் இருந்து நான் போகணும்; காப்பாத்துப்பா!'' என்று பெருங்குரலில் அரற்றியபடியே ஓடி வந்தாள்.

எல்லாப் பெண்களையும் போன்றே அம்மாவுக்கும் தன் சுமங்கலிப் பட்டம் தேவையாய் இருந்தது. சாயப் புடைவையும் சாந்துப் பொட்டுமே சம்பத்துகள் என்ற தலைமுறையிலிருந்து வந்தவள். சட்டென்று இந்த முப்பத்தியாறு வருட பந்தம் நூலறுந்து போகுமோ என்ற பயம்; அது கொடுத்த பதற்றம்; கவலை. ஓட்டமும் நடையுமாய் வந்தவள், ''ஸ்பெஷல் வார்ட்! அனுமதி இல்லை'' என்று நர்ஸ் அறிவித்தவுடன் வாசலிலேயே தொப்பென்று உட்கார்ந்தாள்.

''ஒண்ணுமில்லை; பதற்றப்படாதேம்மா! அப்பா கண் முழிச்சதும், ஜெனரல் வார்டுக்கே மாத்திடுவாங்க. நான் போய் பெரிய டாக்டரைப் பார்த்துட்டு வரேன்'' என்று அப்போதைக்கு எதுவோ சொல்லி வைத்தான்.

''எதனால இப்படி?''

''தெரியலை; ஆனா நாலு மாசமாவே கால் வலின்னு புலம்பல். சரி வயோதிகம் படுத்துதுன்னு அயோடெக்ஸும், அமிர்தாஞ்சனும் தேய்ச்சுப் பார்த்துட்டு, கடைசியாய் நேத்து, காலை தரையில ஊனவே வரல்லே; கட்டையைக் கட்டின்டா மாதிரி பாரம் இருக்கு; நடக்க வரலேன்னுட்டார்; கொண்டு வந்து காமிச்சா, இங்கே உடனே அட்மிட் பண்ணுங்கன்னு சொல்லி, சேர்த்தாச்சு!''

– அவன் திரும்பி வந்த பொழுது அம்மா, மற்றொரு பெண்ணிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். சற்றே சுதாரித்தாற் போன்றிருந்தது அவள் பேச்சு! இவனைக் கண்டதும், ''நீ வீட்டுக்குப் போ! முதல்ல ப்ரீத்தாவைக் கூட்டிட்டு வந்துடு; சித்ரா தனியாய்க் குழந்

தையை வெச்சுட்டு சங்கடப்படுவா; நானே இங்க பார்த்துக்கிறேன்; சாயங்காலம் கூட வர வேண்டாம்! காலைல வரும் போது மறக்காம எனக்கு ஒரு மாத்துப் புடைவையும், குங்கும மும் கொண்டு வந்துடு."

ஏனோ, கடைசி வார்த்தைகளைச் சொல் லும் போது, குரல் கம்மிப் போயிற்று. அவன் சரியென்பது போல் தலையாட்டி விட்டு வந் தான். அம்மா, யதார்த்தவாதி. சூழ்நிலை புரிந்து துரிதமாய்ச் செயல்பட அவளால் முடியும்.

மனம் முழுக்க விஸ்வ ரூபமாய் அப்பா. அதிலும் முக்கியமாய் அவருடைய அந்தக் கால்கள்.... நல்ல நீளமான கால்கள் அவருக்கு. தேக்கு மரத்தில் கடைந்து எடுத்தாற் போல ஒரு அலாதியான பளபளப்புடன் சற்றே கருத்த கால்கள்; உடம்பில் இவருக்குப் பாதி கால்கள்தானோ? என்று எண்ணும்படி...

அப்பாவின் கால்களைப் பார்க்கும் போதெல்லாம் அவனுக்கென்னவோ விநோ தமாய் யானையின் துதிக்கைதான் ஞாபகம் வரும்; அத்தனை sharp and sensitive. சின்னக் குண்டூசி; பிட் பேப்பர் அது எது வாயிருந்தாலும் அப்பாவின் கால் களுக்குப் புலப்படும்.

சாதாரணமாய் மற்றவர்கள் தாக்கவோ, தடுக்கவோ, எடுக் கவோ கைகளை உபயோகிப்பார் கள். அப்பா கால்களுக்குத்தான் அதிக வேலை கொடுப்பார்.

இவனுக்கு இன்னமும் நன் றாய் நினைவில் இருக்கிறது. அப்போது அப்பா குவாஹாடி யில் ஆர்மி ஆபீஸர். அங் கேயே ஜாகை. ரகுராமன் அப் போது எட்டாம் வகுப்போ என்னவோ படித்துக் கொண் டிருந்தான். கால் பரீட்சை யில் முதல் ரேங்க் வாங்கிய சந்தோஷம்; கண்ணை மூடிக் கொண்டவனாய் அவரை நோக்கி ஓடி வந் தான். அவன் சந்தோஷம் எல்லாம் கீழே இரையை விழுங்கி விட்டு, மெது மெதுவாய் நகர முடி யாமல் நகர்ந்து கொண் டிருந்த அந்தக் கரு நாகத்திற்குத் தெரிய வில்லை. அவன் கால் பட்டவுடன் சட் டென்று காட்டுச் சீறலாய் விசுக் விசுக் கென்று தலையைத் திருப்பி, நொடிக் கொரு தரம் நாக்கை வெளியே நீட்டி தன் ஐந்தடி நீளத்தை அவனை நோக் கித் திருப்பியது.



ரோஷிணி

ஆாண்டு போனான் ரகுராமன்.

ஆனால், சட்டென்று ஓடி வந்து, இவனைக் கையால் பற்றி இழுத்து, விலக்கி விட்டு, நடப்பது நடக்கட்டும் என்று ஆர்மி ஷூவாலேயே ஓங்கி ஒரு மிதி மிதித்தார். கருநாகம் துடித்துப் போய் ஹோவென்று வாயைப் பிளந்தது. புஸ் புஸ்ஸென்று திணறலாய் மூச்சு விட்டது. இதற்குள் மற்றொரு மிதி; கடைசியாய் ஒரு தோட்டா! – அதுவும் அவன் திருப்திக்காக! அவர் பலம் – அவர் கால்களின் வேகம் அப்படிப்பட்டவை!

மறுநாள் கட்டி மேலும் ஒரு இன்ச் நகர்ந்திருந்தது; கரையவில்லை. டாப்ளர் ஸ்கேன், எம்.ஆர்.ஐ., எக்ஸ்-ரே எல்லாம் பரிசோதித்த டாக்டர், "சரி, சர்ஜரிதான் முடிவு!" என்ற நினைவோடு அப்பாவின் காலருகே வந்தார். கையிலிருந்த கத்தியல் போன்ற ஒன்றால் லேசாய் உள்ளங்காலைத் தட்ட, சதை உள்வாங்கி அழுந்தியது. அழுகிப் போய்! கூடவே இரத்தமும் தண்ணியுமான நிறத்தில் ஒரு திரவம் வழிந்தது.

"மை காட்! அதான் வேற வழியே இல்லை; சர்ஜரி எல்லாம் டூ லேட் மிஸ்டர் ரகுராமன்" என்றபடியே வெளியே அழைத்துக் கொண்டு போய் விளக்கினார்.

அன்று மதியமே கத்தையாய் பேப்பர் நீட்டி கையெழுத்துக் கேட்டார்கள். மறுக்காமல் போட மனசு ஒத்துக் கொண்டாலும், கைகளில் நடுக்கம்; கண்களில் பொங்கிப் பெருகும் நீரோட்டம்! பெரிய டாக்டராகப்பட்டவர், "நானே இதை எதிர்பார்க்கலை மிஸ்டர் ரகு. "Sometimes, the best gain is to loose" அப்படின்னு சொல்லுவாங்க; உங்கப்பாவோட நிலை இன்றைக்கு அதுதான். எனிவே, accept it," என்றபடி கைகளைப் பிடித்துக் கொண்டார்.

மூன்று மணி நேர ஆபரேஷன்; மூன்று வார ஆஸ்பத்திரி வாசம் – மேலும், மேலும் விசாரிப்புகள்; அங்கலாய்ப்புகள். எல்லாம் முடிந்து அப்பாவை இன்று வீட்டிற்கும் அழைத்து வந்தாகி விட்டது. ஆனால் அப்பா, மூச்! ஒரு வார்த்தை பேசவில்லை; காலைப் பார்த்துக் கொண்டே மேலே கையை உயர்த்தி ஆட்டி, ஒருதரம் 'ப்ச்' என்றார். பின்னர் நெடியதாய் ஒரு பெருமூச்சு! அவ்வளவுதான்!

அப்பா வேலை பார்த்த பள்ளி நிர்வாகம் UNFIT என்ற ஒற்றை வார்த்தையைக் கொட்டை எழுத்தில் போட்டு, கட்டாயமாய் ஒரு ராஜினாமாவைப் பெற்றுக் கொண்டது. கேட்ட இடத்திலெல்லாம் மறுக்காமல் கையெழுத்து போட்டு, நீட்டிய மாலைகளை அதே புன்சிரிப்போடு ஏற்றுக் கொண்டு, சம்பிரதாய



மாய் போட்டோவுக்குப் போஸ் கொடுத்து, ஓ!... எல்லாரும் வெளியேறிய பின்னர், அப்பா தன் கட்டைகளுடன் போய், அவர் அதுவரை பொத்திப் பாதுகாத்த விசில், பிரம்பு, மற்றுமுள்ள சாமான்களை வெறித்தபடியே நெடு நேரம் நின்றிருந்தார்.

''விடற மூச்சும், பேசற பேச்சும் நின்னா எவனாவது வாலண்டரி ரிடையர்மென்ட்னு வியாக்கியானம் பண்ணுவானா? 'பொணம்'ன்னுடுவான்; மனுஷ மூளையும், இயக்கமும் அப்படித் தான்டா! வாழற வரைக்கும் உபயோகப்படணும், உத்யோகம் பண்ணணும்; வாய்ப்பு தருவதற்காக ஆபீஸை விட்டு வெளியே வரலாமே தவிர, வாழ்க்கையே சலிச்சுப் போய் வரக்கூடாது!''

''விட்டது போதும்னு வீட்ல சிவனேன்னு கிடங்களேன்; அவனும் சம்பாதிக்கிறான்ல?'' என்ற ஒரு உறவுக்காரருக்கு அப்பா கொடுத்த பதிலடி - ஏனோ அன்று பரவசப்படுத்திய அதே பதில் இன்று இம்சைப்படுத்துகிறது; தாங்க முடியவில்லை - யாராலுமே!

அப்பா பழைய இயல்புக்கு இன்னமும் வரவில்லை. ஆனால் 'அந்த ஜெய்ப்பூர்' வலது காலை அவர் ஏற்றுக் கொண்டு விட்டார். ப்ரீத்தாக்குட்டி இப்போதெல்லாம் "மாத்திரை டயம்!" என்று ஒரு கிளாஸ் தண்ணீரோடு மருந்துப் பையையும் நீட்டுகிறது; வீட்டில் அது இருந்தால் மட்டுமே பேச்சு. காலோடு கலகலப்பும் போய் விட்டது. மௌனம். மௌனம். மௌனமே பாஷை போல விதவிதமாய் ரகரகமாய் மௌனம்...

**அ**ன்றும் அப்படித்தான். ஞாயிற்றுக் கிழமை குடும்பமே டி.வி.யில் ஆழ்ந்து போய்க் கிடக்கையில் ஒருவன் ஊதினால் ஒடிந்து போவான் என்று சொல்லும்படி நெடுநெடுவென்று வளர்த்தியாய்... "நான் சந்தான கோபாலன் சாரைப் பார்க்கணும். ப்ளீஸ்!" என்றவாறு வெளியே நின்றான். அப்பாவுக்கு இப்படி ஆகிப் போனதிலிருந்து இது சகஜம்தான். ஆனால் அப்பாவே இவனை அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் முழித்தார்.

"நீங்க யாருன்னு?"

''என் பெயர் நரசிம்மன். நான் சார் வேலை பார்த்த ஸ்கூல்லயே கேம்ஸ் டீச்சராய்...''

ஓ... புரிந்து போயிற்று! அப்பாவின் இடத்தில் இன்று இவன். அப்பா ஒரு நிமிடம் போல அவனைக் கூர்ந்து பார்த்தார். பின் சடாரென அவர் முகத்தில் கண்டுபிடிக்க முடியாத ஓர் வினோத உணர்வு வெளிப்பட்டு மறைந்தது. ரகுராமனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.

ஒருவித நெகிழ்ச்சியோடு அவன் அவர்களைப் பொதுவாய்ப் பார்த்துச் சொன்னான், "தெரிஞ்சோ தெரியாமலோ உங்கப்பா என் உயிரை, எட்டுப் பேர் உள்ள - ஆனா ஒரான் சம்பாத்தியம் மட்டுமே உள்ள ஒரு குடும்பத்தையே காப்பாத்தியிருக்கார் சார்! இந்த இன்டர்வியூவும் இல்லேன்னா, செத்துடலாம்ங்கிற முடிவோடதான் போனேன். வேலை கிடைச்சது; ஆனா 'இப்படிக்' கிடைச்சதுன்னு கேள்விப்பட்டதும் மனசு கேட்கலை. ஒரு நடை பார்த்துட்டுப் போகலாம்னு வந்துட்டேன்!"

என்று கூறியபடியே நெடுஞ்சாண்கிடையாக அப்பாவின் கால்களில் விழுந்தான். அந்தக் கட்டைக் காலையும் தொட்டு வணங்கினான்; விடுவிடுவென்று படியிறங்கி தெருவில் கலந்தான்.

எல்லோருக்கும் ஒருவித ஆச்சர்யம், அதிர்ச்சி, பிரமிப்பு. அப்பா உறைந்து போய் இருந்தார்.

ஆனால் ரகுராமனுக்குள் வேறோர் எண்ணம் - அப்பாவின் அந்த நீண்ட நெடிய கால்கள், நகர்ந்து, வளர்ந்து, பெரிதாகி, பிரம்மாண்டமான ஒரு தூணைப் போல - பசியும், வறுமையும் நிறைந்த ஒரு முகம் தெரியாத குடும்பத்தை - அதன் வீழ்ச்சியைத் தடுத்து வாழ்க்கையைத் தூக்கி நிறுத்தி, தாங்கிப் பிடித்திருப்பது போல் ஓர் உணர்வு மனசு முழுக்க நிரம்பிக் கிடந்தது. ●

''டார்லிங் அடுத்த ஜென்மத்திலும் நீயே என் காதலியாக வேண்டும்!''

''அது மட்டும் முடியாது சங்கர்... அடுத்த ஜென்மத்தில் சுரேஷின் காதலியாவதாக உறுதி அளித்து விட்டேன்!''

—எம். அசோக்ராஜா

## கிடந்த கோலம்

# துயில் கலைந்த தூயவன்!

பிருகு முனிவர் வைகுண்டவாசனைக் காண வந்தார். எம்பெருமான் அறிதுயிலில் ஆழ்ந்திருந்தார். எழுந்திருந்து முனிவரை வரவேற்கவில்லை. ஏற்கெனவே ஏதோ மனவருத்தத்துடன் வந்த பிருகு முனிவர் பகவான் தன்னை வேண்டுமென்றே அவமதிப்பதாக நினைத்தார். கோபம் தலைக்கேறியது அவருக்கு. என்ன செய்கிறோமென்று தெரியாமல் காலைத் தூக்கி பகவான் மார்பில் உதைத்து விட்டார்! பகவானோ, சாந்த வடிவமாக எழுந்து வந்து முனிவரை வணங்கி உபசாரம் செய்து, "நான் செய்தது தவறு" என்று சொன்னார்.

மதுசூதனன் மார்பில் வாசம் செய்கின்ற மகாலக்ஷ்மிக்குத் தாங்க முடியாத மனவருத்தம். இப்படி அவமதித்த முனிவரை பகவான் சாந்தப்படுத்துவது கண்டு பொங்கினாள். பேசாமல் இறங்கிப் போய் விட்டாள்!

இப்படித் தாயாருக்கு அபசாரம் செய்த பிருகு முனிவர் தமிழ்நாட்டில் குடந்தையில் ஹேமரிஷியாகப் பிறந்து தவம் செய்தார். மகாலக்ஷ்மியும் ஹேமரிஷி அமைத்த புஷ்கரிணியில் தங்கத் தாமரையில் தோன்றினாள். ஹேமரிஷி கோமளவல்லி என்று பெயர் சூட்டித் தன் மகளாகவே பாவித்துக் குழந்தையை வளர்த்து வந்தார். தன்னால் பகவானும் தாயாரும் பிரிந்தது அவருக்குத் தெரியாதா? தானே அவர்களைச் சேர்த்து வைக்க ஆசைப்பட்டார். ஸ்ரீமந்நாராயணன் கோமளவல்லியைத் திருமணம் செய்து கொண்டு ஹேமரிஷியின் தவப் பயனாகக் காவிரிக் கரையிலேயே தங்கி திருமால் பக்தர்களுக்கெல்லாம் அருள் புரிந்து வருகிறார்.

ருக்மிணியைக் கவர்ந்து செல்லக் கண்ணன் வந்தது போல கோமளவல்லியைப் பெண் கேட்க பகவான் தேரில் வந்தாரோ என்று தோன்றும்படி, திருக்குடந்தை மாநகர் அருள்மிகு சாரங்கபாணியின் கோயில், தேர் வடிவமாகவே இருக்கிறது. திருச்சுற்றை வலம் வரும்போது சக்கரங்களையும், தேரிழுக்கும்



• சாரங்கபாணி பெருமாள்-கோமளவல்லி தாயார்

தெய்வ தரிசனம்

18

பரிகளையும் காணலாம்.

இந்தக் கோவில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று கோவிலில் வெளியிடப்பட்டுள்ள தல வரலாறு புத்தகம் கூறுகிறது. இந்தத் தலவரலாறு புத்தகம் மற்ற கோவில்களுக்கும் முன்மாதிரியாக அமைந்தால் நன்றாக இருக்கும். மேலட்டையில் தரிசனம் தருகின்ற உத்ஸவர் சாரங்கபாணியின் திருக்கோலத்தைக் காணும்போது ப்ரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் ஞாபகம் வருகிறது. பாதாதி கேசம் அவர் பகவானை கண் முன்னால் தான் பார்த்துக் கொண்டே வர்ணிப்பது போல நிறுத்தி நிறுத்திச் சொல்வார். அத்தனை வர்ணனையையும் இந்தப் படத்தில் காண்கிறோம். பின் பக்கத்தில் தாயார் கோமளவல்லி இரண்டு கரங்களிலும் நவரத்தினக் கிளிகளைத் தாங்கிக் கொண்டு வீற்றிருக்கிறாள். கரங்களே தாமரை. கரங்களில் தாமரை, தாமரை மீது கிளி! பொற்றாமரையில் தோன்றிய கோமளவல்லியாயிற்றே. பட்டாடையும் அணிகலன்களும் அழகுக்கு அழகு செய்வது என்பார்களே, அப்படி இருக்கிறது. இந்தப் படங்களுக்காகவே இந்தச் சிறிய புத்தகத்தை வாங்கிப் பூஜை மாடத்தில் வைத்துக் கொள்ளலாம்.



* சமீபத்தில் குடமுழுக்குச் செய்யப்பட்ட பிரதான கோபுரம்

பூதத்தாழ்வார் முதல் ஆண்டாள் வரை ஏழு ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்துள்ள மூர்த்தி மூலவரான ஆராஅமுதன். இவருடைய திருக்கோவிலுக்கு தை மாத அமாவாசையன்று போகவும் தரிசனம் செய்யவும் வாய்ப்புக் கிடைத்து விட்டது. குடந்தை வந்து சேர்ந்தபோது இறைவனும் இறைவியும் உலாப் போந்துள்ளார்கள். காரியாலய அறையில் கணக்கு வழக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஓர் அன்பர் தெரிவித்தார்!

இந்தத் திருக்கோவிலில் முக்கியமாக நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் முதலில் கோமளவல்லித் தாயாரைத் தரிசித்து விட்டுப் பிறகுதான் ஆராஅமுதனைத் தரிசிக்க வேண்டும் என்பது.

இன்னொன்று, இவரே ஸ்ரீநிவாஸனாய் திருமலை மேல் நின்ற கோலத்தில் தரிசனம் தரும் திருவேங்கட நாதன் என்பது!

கோபத்துடன் பகவானைப் பிரிந்து சென்றாளல்லவா திருமகள்? நாராயணன் தன் இதய கமலத்தில் வீற்றிருந்த கமலாவைத் தேடிக் கொண்டு போனபோது, ஆகாச ராஜன் புதல்வியான பத்மாவதியை மணந்து கொண்டு விட்டார். பின்னர் மனைவியிடம் பயந்தவர் போல ஓடி வந்து கும்பகோணத்தில் குடியேறினார். ஹேம புஷ்கரிணிக் கரையில் ஒரு பாதாள நிலவறையில்

## ஆனந்தி

ஒளிந்து கொண்டிருந்தார். இதையறியாத திருமகள் பொற்றாமரையில் தவம் செய்தாள். ஹேம முனிவரின் மகளாய் வளர்ந்து பகவானைத் திருமணம் செய்து கொண்டாள்.

ஸ்ரீநிவாஸனாக நமக்குத் தரிசனம் தரும் பெருமானை இந்தக் கோவிலின் பெரிய திருமஞ்சன மண்டபத்துக்கருகில பத்துப் படிகள் இறங்கித் தரிசிக்க வேண்டும். இவருக்குப் பாதாள ஸ்ரீநிவாஸன் என்ற பெயர் வழங்குகிறது. இவர் கேட்கும் வரங்களையெல்லாம தருவார் என்று நம்புகிறார்கள். சற்று தூரத்தில விட்டு ஸ்ரீநிவாஸனும ஸ்ரீதேவி



• அலுவலக அறையில் கணக்கு சமர்ப்பிக்கும் சிப்பந்திகள்...

பூதேவியுடன் நின்று பக்தர்களுக்குக் காட்சி தருகிறார்!

இந்தக் கோவில்களெல்லாம் எப்போது கட்டப்பட்டதோ தெரியவில்லை. ஆனால் பூதத்தாழ்வார் ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று வரலாறு கூறுகிறபடியால் இந்தக் கோவிலின் நடுநாயகரான உத்தான சயனர் கோவில் ஐந்தாம் நூற்றாண்டில் இருந்திருக்க வேண்டும் என்று ஆகிறது.

முதலில் தாயாரை தரிசிக்கிறோம். கோமள ஸ்வர்ணவல்லி என்று திருமகளைப் புகழ்கிறார்கள். மென்மை பொருந்திய தங்கக் கொடி! தாயார் வைர வைடூரியங்களும், பலச்சவைரம், கெம்பு முதலிய சிறந்த மணிகள் பதித்த ஆபரணங்களும் அணிந்து தங்கக் கொடியாயத்தான் வீற்றிருக்கிறாள். விளக்கின் சுடரில் புல்லாக்கும் நெற்றித் திலகமும் ஜொலிக்கின்றன. இவள் படி தாண்டா பத்தினியாம். எந்த விசேஷத்திலும் கருவறையிலிருந்து வெளியே வருகின்ற வழக்கம் கிடையாதாம். உலாவரும் நாச்சியார், மூலவர் சந்நிதியில் உற்சவரான சாரங்கபாணிக்கு அருகில் இணைபிரியாமல் அமர்ந்திருக்கிறாள். வைஷ்ணவப் பெரியார்கள் தாயாருக்குக் கொடுக்கும் மதிப்பே தனிதான். லக்ஷ்மி தேவியை அவர்கள் நிற்க வைக்க மாட்டார்கள். அமர்ந்து கொண்டு ஆர அமர செல்வங்களை வாரி வழங்க வேண்டும் என்று அலாதியான கௌரவம் அளிக்கிறார்கள். வைணவத் தலங்களில் தாயார் அலங்கார வல்லிதான். அழகு வடிவம்தான். திருமகளைக் கொண்டாடக் கொண்டாட அவள் நம்மைக் கொண்டாடுவாள் என்ற நம்பிக்கை.

மனத்தைத் தொடும் சில நிகழ்ச்சிகளை இந்தக் கோவிலில் காணலாம். மெய்க்காவல் இடையர் என்பவர் ஒரு சமயம் கோவிலுக்கு ஆபத்து வந்தபோது வைக்கோல் போர்களைக் குவித்துக் கோவிலை மறைத்து வைத்தாராம். இரவு பகல் காவலிருந்தாராம். இன்றும் பெருமாளும் தாயாரும் தேர்த் திருவிழா முடிந்த பிறகு இந்த அன்பர் எதிரில் வந்து நின்று தரிசனம் தருவது வழக்கமாக இருக்கிறது.

பெருமாள் கருவறைக்கு முன்னால் உள்ள திருமாமணி மண்டபத்தின் வழியாக வரும்போது கருட பகவானைத் தரிசிக்கிறோம். பகவான் ஸேவை சாதிக்கும் மண்டபத்தை வைதிக விமானம் என்று சொல்கிறார்கள். வைகுண்டத்தில் பகவான் வீற்றிருக்கும் அதே விமானம் தான் இங்கேயும் இருக்கிறதாம்.

சன்னதியில் நிற்கும்போது மனத்தில் கேள்வி எழுகிறது: ஆராவமுதே என்று நம்மாழ்வார் பாடியதாலேயே பெருமாளுக்கு இந்தப் பெயர் வந்ததா அல்லது அவருடைய பெயரால் விளித்து ஆழ்வார் பாடினாரா? "நலத்தால் மிக்கார் குடந்தைக் கிடந்தாய்!" என்று குடந்தையில் வாழ்பவர்களையே உயரத் தூக்கி வைக்கிறார் நம்மாழ்வார். இப்படி நலத்தால் மிக்கார் தொழும் ஆராவமுதனைக் "கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று தான் மனது உருகுகிறது.

முழங்கையைப் பாம்பணையின் மீது ஊன்றிக் கொண்டு தலையைத் தூக்கிப் பார்ப்பது போலக் காட்சியளிக்கிறார் ஆராவமுதன். யோகநித்திரையில் ஆழ்ந்திருக்கின்ற மகாவிஷ்ணு ஏன் எழுந்திருக்க முயல வேண்டும்? இதற்கும் ஒரு ஆழ்வார்தான் பொறுப்பு. உறங்கிக் கிடந்த பெருமானை, "என்ன தூக்கம் வேண்டியிருக்கிறது! எழுந்து பேசு" என்று கட்டளையிடுகிறார்!

"உமக்கென்ன நடந்து நடந்து கால் வலிக்கிறதா? ராமனாய் அலைந்து களைத்து விட்டீரா? வராகமாய்ப் பூமியைக் கடலிடி

யிலிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்ததில் உடல் குலுங்கி மேனி வலிக்கிறதா? காவிரிக் கரையில் படுத்துத் தூங்குகிறீரே. அப்படியே கிடந்தவாறே கண் விழித்து எழுந்து என்னுடன் பேசக் கூடாதா?" என்று திருமழிசை ஆழ்வார் கேட்டதும் கண்களைத் திறந்து ஆழ்வார் சொன்னபடி எழுகிறார்.

ஆழ்வார் சொன்னதைச் சமர்த்தாகக் கேட்ட கேசவனைச் "சொன்னவண்ணம் செய்த பெருமான்" என்றும் அழைப்பதுண்டு. பாம்பணையில் பள்ளிகொண்டு ஸப்த ரிஷிகளுக்கும், முப்பத்து முக்கோடி தேவர்க்கும், ஏழு புண்ய நதி தேவதைகளுக்கும், நாபிக் கமலத்தில் உதித்திருக்கும் பிரும்மனுக்கும் கிடந்தவாறு எழுந்த கோலத்தில் ஸேவை சாதிக்கிறார் ஆராவமுதப் பெருமான். இத்தனை தேவர்களையும், ஸப்த நதிகளையும் ஸ்ரீதேவி பூதேவி நாச்சியார்களையும் ஒருங்கே தரிசனம் செய்து வியந்து நிற்கிறோம்.

திருமழிசை ஆழ்வாருக்குப் பிரான் என்ற பட்டத்தைத் தந்த பெருமான்; அடியார்களுக்கு அடியனாய் அன்பர்களுக்கு அன்பனாய் விளங்கும் எம்பெருமான் இவர். இல்லாவிட்டால் தன்னிடம் பக்தி பூண்டு வாழ்நாள் முழுதும் கோவில் பணியிலேயே காலம் கழித்த அன்பரைத் தந்தையாக நினைத்து சிராத்தம் செய்வாரா?

லக்ஷ்மி நாராயணன் என்ற மெய்யன்பர் பெருமாள் கோவிலில் கைங்கரியம் செய்து வந்தார். கோவில் திருப்பணியில் காலம் போனதே தெரியவில்லை. குழந்தைகள் இல்லை அவருக்கு. வயதாகி விட்டது. "ஒரு பிள்ளையைத் தத்து எடுத்துக் கொள்ளக் கூடாதா? பித்ரு கடன் யார் செய்வார்கள்?" என்று யாரோ கேட்டார். "எல்லாம் அமுதன் பார்த்துக் கொள்வான்" என்று பதில் சொல்லி விட்டார் பெரியவர். பக்தருடைய வாக்குப் பொய்க்கலாமா? அவர் இறந்தபோது பகவானே ஒரு இளைஞனாக வந்து ஈமக் கடன்கள் செய்தாராம்! அது மட்டுமா? தை அமாவாசையன்று வைகுண்ட பதவியடைந்த லக்ஷ்மிநாராயணனுக்கு ஆண்டுதோறும் சிராத்தம் செய்கிறார் இந்தப் பெருமாள். இப்படிப்பட்ட கருணையை என்ன சொல்லிப் போற்ற முடியும்?

இந்தப் பெருமாள் சந்நிதியில்தான் நாதமுனிகள் 'ஆராவமுதே' என்று தொடங்கும் நம்மாழ்வார் பிரபந்தம் ஓதப்படுவதைக் கேட்டாராம். அதன்பின் தேடி அலைந்து நாலாயிரம் பாடல்களையும் கண்டுபிடித்தாராம்.

கருவறையில் வைதிக விமானத்தின் கீழ் உத்தான சயனம் செய்து கொண்டு நம் மீது அருட்கண் பார்வை செலுத்தும் ஆராவ



''இந்தக் காட்சியில் கதாநாயகியோட கன்னத்தில் நீங்க முத்தம் தரீங்க!''
''அதை என் ரசிகர்கள் ஏத்துக்க மாட்டாங்க. பேசாமல் உதட்டிலேயே முத்தம் கொடுத்துடறேன் சார்!''

— ஞா. ஞானமுத்து

முதனின் சந்நிதியில் முப்பத்து முக்கோடி தேவர்களோடு நாமும் சிலையாகி நின்று விடக் கூடாதா என்ற ஆதங்கத்துடன்.

*வாரா வருவாய் வரும் என் மாயா மாயாமூர்த்தியாய்*
*ஆரா அமுதா அடியேன் ஆவி அகமே தித்திப்பாய்*
*தீரா வினைகள் தீர என்னை ஆண்டாய் திருக்குடந்தை*
*ஊரா உனக்காட்பட்டும் அடியேன் இன்னம் உழல்வேனோ!*

என்று ஆழ்வார் அருளிச் செயலை நினைத்து அனுபவித்துக் கொண்டே கிளம்புகிறோம். இன்னும் காரியாலய அறையில் சாத்துபடி கேட்டுக் கொண்டிருக்கும் சாரங்கபாணியையும் தாயாரையும் தரிசிக்க வேண்டுமே!

திருச்சுற்றில் வலம் வந்து ஆண்டாளைத் தரிசித்துக் கொண்டு தூநிலா முற்றத்துக்கு வருகிறோம்.

அங்கே காரியாலயத்தில் அருள் வடிவமான சாரங்கபாணியையும் அழகு வடிவமான கோமளவல்லியையும் ஏளப் பண்ணியிருக்கிறார்கள். வைணவப் பெரியோர்கள் ஆழ்வார்கள் அருளிச் செயலை சாத்துபடி செய்து கொண்டிருக்கிறார்கள். வேதம் ஓதுவது போல ஏற்ற இறக்கங்களுடன் பாசுரங்களை அவர்கள் ஓதுவது ஒரு தெய்வீகச் சூழலை ஏற்படுத்தியிருக்கிறது. காரியாலய அறை தமிழ் ஒலியால் நிரம்பியிருக்கிறது. கடைசியில் தீபாராதனை செய்கிறார் பட்டர்.

பகவானை இன்னும் கொஞ்சம் அழகாக எழுந்தருளச் செய்யலாம் என்று தோன்றுகிறது. எத்தனையோ பொன்னாடைகளும் பட்டுச் சேலைகளும் இருக்குமே. பின்புலத்தில் ஒரு திரை கட்டி, ஒரு பட்டுக் குடையின் கீழ் சாரங்கபாணியை எழுந்தருளச் செய்யலாமே. நாட்டை ஆள்கிற ஒரு மந்திரி வந்தால் எவ்வளவு அலங்காரங்கள் செய்கிறோம்! அகில புவனத்தையும் ஆளுகின்ற சக்கரவர்த்திக்கும், பதினாறுவித செல்வங்களையும் அளித்தருளும் மகாலக்ஷ்மிக்கும் இன்னும் கொஞ்சம் அழகாக அலங்காரம் செய்யலாம். மாவிலையும் தென்னங்குருத்தும் வாழைக்கன்றும் கிடைக்குமே.

அருகில் சென்று சாரங்கபாணியையும், தாயாரையும் கண்குளிரப் பார்க்கும்போது மற்றதெல்லாம் மறந்து விடுகிறது. தாமரை மொட்டுப் போல உச்சியில் அமைக்கப்பட்ட ரத்ன கிரீடம் அணிந்து நெற்றியில் வைரமிழைத்த பச்சைத் திலகம் மிளிர சுதர்சனம் (சக்கரம்), பாஞ்சஜன்யம் (சங்கு), கௌமோதகி (கதை) இவற்றைத் தாங்கி தங்கமயமாக மின்னும் சார்ங்க வில்லைக் கையேந்தி வலது கையால் அபயமளித்துக் கொண்டு புன்னகை தவழ நமக்கு அருள் மழை பொழிகிறார் சாரங்கபாணி. நாந்தகம் என்னும் கத்தியைக் காணவில்லை.

இத்தனை செம்பு கற்களை இழைத்து இழைத்துச் செய்திருக்கிறார்களே! இவை ஆயுதங்களாக இருக்க முடியுமா? வீரனுக்கு ஆயுதங்களே அலங்காரப் பொருள்கள் அல்லவா? ஆயுதங்களின் அழகைப் பார்த்து வியந்து கொண்டே நிற்கிறோம்.

திருவாபரணங்கள்தான் என்ன அழகு? என்ன வேலைப்பாடு? மாங்காய் மாலை என்ன? மகரிப் பதக்கம் என்ன? வைர அட்டிகை என்ன? முத்துக்கள் தொங்குகின்ற மகாலக்ஷ்மி பதக்கம் என்ன? ரத்ன கிரீடம் என்ன? சண்பக மொட்டுக்களைக் கோத்தாற் போல் மாலை என்ன? தாடங்கம் என்ன? கங்கணம் என்ன? ஜொலிக்கிறார் சாரங்கபாணி. செல்வத் திருமகள் நாயகன் அல்லவா? செல்வத்துக்கு என்ன குறை?

உயரத் தூக்கிக் கட்டிய மகுடம் போன்ற கொண்டையும் அதில் அணிவித்த சந்திர பிரபை சூரியப்ரபை நெற்றிச்சுட்டியும், கழுத்தில் காரையும் விதவிதமான மாலைகளும் அணிந்து நீலப் பட்டுடுத்தி சிறு பெண்ணைப் போல ஒன்றுமறியாத குழந்தைத் தனமான புன்சிரிப்புடன் வீற்றிருக்கிறாள் கோமளவல்லித் தாயார். அருகில் நின்று நன்றாகத் தரிசனம் செய்ய வாய்ப்புக் கிடைத்ததே என்று மகிழ்ச்சி உண்டாகிறது.

'அவனருளால் அவன் தாள் வணங்கி' என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கூறுவது எவ்வளவு உண்மை!

படங்கள் : ஸ்ரீஹரி

# எங்கு வாங்குவீர்?



~~83-90~~
77



~~82/-~~
75.25



~~12/-~~
10.45




~~84/-~~
76.95




~~86/-~~
82.50



~~55/-~~
51.95




~~73-60~~
67.95




~~32-40~~
29.95




~~9.50/-~~
8.75

மேலே உள்ள பொருள்கள் மட்டுமில்லாமல் எல்லா வீட்டு உபயோக பொருட்களுமே சென்னையிலேயே குறைந்த விலையில் சுபிக்ஷாவில் மட்டும்தான் கிடைக்கிறது. சுபிக்ஷா இன்று எல்லா வீட்டு உபயோக பொருட்களின் விற்பனையிலும் சென்னையில் No.1.




## Subhiksha

Pay Less ... Always

மருந்துகளுக்கு **10%** தள்ளுபடி

### புதிய சுபிக்ஷாக்கள்

● ராயபுரம் ● அம்பத்தூர் ● பல்லாவரம்
● வளசரவாக்கம் ● மூலக்கடை ● கே.கே.நகர்

- அடையார் 68/5, டீச்சர்ஸ் காலனி
- அடையார் 13, 2வது குறுக்குத்தெரு, கஸ்தூரிபா நகர்.
- அம்பத்தூர் 390, எம்.டி.எச். ரோடு.
- அனகாபுத்தூர் 255, கொன்னூர் ஹை ரோடு (108 அருகில்)
- அண்ணாநகர் W-125, 3வது அவென்யூ
- அண்ணாநகர் (மே) 1944, 18வது மெயின்
- அசோக் நகர் 32, முதல் அவென்யூ
- அரும்பாக்கம் D-103, MMDA காலனி
- ஆதம்பாக்கம் 1/C, கருணீகர் தெரு
- ஆதம்பாக்கம் 15, பழண்டியம்மன் கோவில் தெரு
- ஆழ்வார்பேட் 101, டி.டி.கே. சாலை
- எழும்பூர் 22, எழும்பூர் நெடுஞ்சாலை
- கிழக்கு தாம்பரம் 2, IIவது மெயின் ரோடு, சிட்லபாக்கம்
- குரோம்பேட்டை 81, ராதாநகர் மெயின் ரோடு
- கீழ்பாக்கம் 20A/3, டெய்லர்ஸ் சாலை
- கே.கே.நகர் 47/2, ராணி சாலை (சிவன் கோவில் பின்புறம்).
- கோடம்பாக்கம் 332, ஆற்காடு சாலை
- செலையூர் 11, கேம்ப் ரோடு
- சாலிக்கிராமம் 7/4, அருணாச்சலம் சாலை
- தி.நகர் 12, தணிகாச்சலம் சாலை
- திருவான்மியூர் 2வது கிழக்குத் தெரு, காமராஜ் நகர்
- திருவல்லிக்கேணி 73, டி.பி. கோவில் தெரு.
- வளசரவாக்கம் (ஆற்காடு ரோடு, ஆழ்வார்திருநகர் அருகில்)
- விருகம்பாக்கம் 50/1, காளியம்மன் கோவில் தெரு
- வேளச்சேரி 137, வேளச்சேரி தாம்பரம் ரோடு
- நங்கநல்லூர் 140, காலேஜ் ரோடு
- நுங்கம்பாக்கம் 114, வில்லேஜ் ரோடு
- பல்லாவரம் 7/1பி, இந்திரா காந்தி ரோடு.
- பாடி 30, எம்.டி.எச். ரோடு
- பெரம்பூர் 13 & 14, குருமூர்த்தி கார்டன் தெரு
- பொரூர் 33/1, S.R.P கோவில் தெரு, ஐயப்பா நகர்
- பொன்ட் நகர் 2, எல்லையம்மன் கோவில் தெரு
- பொன்ட் நகர் 3/1A, முதலாவது அவென்யு
- மடிப்பாக்கம் 1/A4, மடிப்பாக்கம் மெயின் ரோடு
- மந்தவெளி 113, ஆர்.கே.மடம் சாலை
- மயிலாப்பூர் 4/1, பீமசேனா கார்டன் தெரு
- முகப்பேர் 147, முகப்பேர் (கி) (பிருந்தாவன் அருகில்)
- மூலக்கடை 42G, மாதவரம் ஹை ரோடு.
- ராயபுரம் 23, M.S. கோவில் தெரு
- போரூர் 220&221, மவுண்ட் பூந்தமல்லி ரோடு
- மேற்கு மாம்பலம் 15/1, தம்பையா ரோடு
- மேற்கு மாம்பலம் 15, பிருந்தாவன் தெரு

**சென்னையில் 42 சுபிக்ஷாக்கள்**

**☎ 4910392**



Alakananda/C/267/99

# கல்கி சதாசிவம் நினைவு விருது வழங்கும் விழா



நாள்: **4.3.2000**

நேரம்: **மாலை 6 மணி**

இடம்: **ராகசுதா அரங்கம்,**

85/2 லஸ் சர்ச் சாலை, (நாகேஸ்வரராவ் பூங்கா அருகில்)

மயிலாப்பூர், சென்னை – 600 004.

**ச**மூக நோக்குடன், சிறந்த கற்பனை வளத்துடன், கவர்ச்சிகரமான சொற்களில், காண்பதற்கு உவப்பான விதத்தில் படைக்கப்பட்ட பத்திரிகை விளம்பரத்துக்கு, விளம்பரத்துறை வித்தகரான **கல்கி சதாசிவம் நினைவாக விருது** வழங்கப்படுகிறது.

பாராட்டுப் பத்திரமும் ரூ. **10,000** பரிசுத் தொகையும் கொண்ட இவ்விருது 1999ம் ஆண்டு தமிழ் செய்தித்தாள் அல்லது பத்திரிகையில் வெளியான விளம்பரங்களில் மிகச் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்படும் ஒன்றுக்கு அளிக்கப்படும்.

**கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளையின்**

அறங்காவலர்கள் குழுவுடன் **திரு. கோபுலு, திரு. திருப்பூர் கிருஷ்ணன்** ஆகியோர் நடுவர்களாகச் செயல்பட்டு விருதுக்குரிய விளம்பரத்தைத் தேர்வு செய்துள்ளார்கள்.

இதற்கான விழா, வரும் மார்ச் மாதம் 4ஆம் தேதி மேற்கண்ட முகவரியில் நடைபெறுகிறது.

*தலைமை:* **திரு. டி.டி. வாசு**

*சிறப்புரை:* **திரு. சோ**

நிகழ்ச்சியின் இறுதியில் **கல்கி சதாசிவம்** அவர்களுக்கு அஞ்சலியாக மகாகவி பாரதியின் பாடல்களைப் பாடுபவர்:

**திரு. விஜய் சிவா**

**திரு. எஸ். வரதராஜன்–வயலின், திரு. ஜே. வைத்தியநாதன்–ம்ருதங்கம்.**

கல்கி வாசகர்களை அன்புடன் அழைக்கிறோம்!

**கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை**

அதி நவீன முறையில் மாநகரக் குப்பைகளை அப்புறப்படுத்தும் பணிக்கு ஃபிரான்ஸ் நாட்டின் ஓனிக்ஸ் (onyx) என்ற நிறுவனத்தை சென்னை மாநகராட்சி நியமித்துள்ளது!

''இவங்க வந்து புதுசா என்ன கிழிச்சுடப் போறாங்க? நாறும் குப்பையில் சென்ட் ஊற்றி அள்ளப் போறாங்களா?''ன்னு கேட்காதீங்க. ரஜினி மாதிரி, இவங்க வழியும் தனி வழியாம்.

"சுற்றுச்சூழல் எந்தவிதத்திலும் பாதிக்காதபடி, நவீன தொழில் நுட்பத்தின் மூலம் குப்பை சேகரிக்கிறதுல, ஓனிக்ஸ்காரங்க பலே கில்லாடிங்க சார். அதோ நிக்கறாங்களே, ஒரு அம்மா.. அவங்க பேரு நோயல். அவங்ககிட்ட கேட்டா எல்லா விவரமும் சொல்லுவாங்க' என்று கை காட்டினார் ஐஸ் அவுஸ் குப்பை மற்றும் கழிவுநீரேற்று மண்டல அலுவலகத்தின் ஊழியரான செல்வம்.

நோயல், ஓனிக்ஸ் நிறுவனத்தின் உயர்மட்டப் பிரதிநிதியாம்.

"பல நாடுகளுக்கு, குப்பை சேகரிக்கும் பணியை ஒப்பந்த அடிப்படையில் செய்து தருகிறோம். இப்போ இந்தியால முதன்முறையா சென்னை மாநகராட்சிக்குப் பணியாற்ற வந்திருக்கோம்" என்றார்.

"தானியங்கி லாரிகள் மூலமா குப்பை அள்ளப் போறதா கேள்விப்பட்டோம். இங்க இருக்கிற துப்புரவுத் தொழிலாளிகளுக்கு பதிலா, இனிமே லாரியே ஆட்டோமெட்டிக்கா குப்பை அள்ளிடுமா?'' என்றதும், 'இல்லை இல்லை' என்று மறுத்தார் நோயல்.

"இனிமேதான் நிறைய ஆட்கள் தேவைப்படுவாங்க" என்றவர், தொடர்ந்தார்:

"இந்த நவீன தொழில் நுட்பத்தோட ஹைலைட் இரண்டு. ஒன்று, குப்பைகளைத் திறந்தபடி எடுத்துச் செல்ல முடியாது. இதனால் உங்களைக் கடந்துபோகிற குப்பை வண்டிக்காக நீங்கள் முகம் சுளிக்க மாட்டீர்கள். இது சென்னைதானா என்று வியக்கும்படி சுற்றுச் சூழல் மாறும். மற்றொன்று, திட்டமிட்டு பணிகள் பகிர்ந்து அளிக்கப்படுவதால் வேலை எளிதாக முடியும். உங்களுக்கு ஈஸியா புரியணும்னா, நாங்க இறக்குமதி செய்துள்ள எந்திரங்களைப் பார்க்கலாம் வாங்க'' என்று அழைத்துப் போனார்.

எல்லாம் குப்பை சேகரிக்கும் பிளாஸ்டிக் பெட்டிகள். 500


• செய்முறை விளக்கக் கூட்டத்தில் நோயல்

• குப்பை அள்ளும் லாரி!

# குப்பை அள்ளும் குட்டிச் சாத்தான்கள்!

லிட்டர், 300 லிட்டர், 100 லிட்டர் என கொள்ளளவு மாறுபடும் சின்னதும் பெரிதுமான பெட்டிகள்... குறிப்பா எல்லா பெட்டிகளுக்கும் மேல் மூடி உண்டு. அப்புறம் சைக்கிள்கள், லோடு ஆட்டோக்கள், கண்டெய்னர் மாதிரி உடம்பு முழுக்கப் போர்த்திக்கொண்டு வினோதமாகக் காட்சி தரும் மெகா லாரிகள்! வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த நமக்கு, நோயல் விளக்கினார்.

ஒரு கிலோ மீட்டர் சுற்றளவுக்கு ஒரு துப்புரவுத் தொழிலாளிங்கற கணக்குல, ஆட்களை நியமிக்கப் போறோம். ஒதுக்கப்பட்ட ஏரியாவைப் பொறுத்து பெட்டியும் வாகனமும் கொடுக்கிறோம். சிறிய சந்துகள், சின்னச் சின்னத் தெருக்களில் வீடு வீடாகக் குப்பை சேகரிப்பவருக்கு, 100 லிட்டர் பெட்டியும் அதைச் சுமந்து செல்ல சைக்கிளும் கொடுக்கிறோம். பெரிய வீதிகளில் உள்ள குப்பை வீடு, தொட்டிகள், கார்னர்களில் கொட்டப்படும் குப்பைகளைச் சேகரிக்க 500 மற்றும் 300 லிட்டர் பெட்டிகள். இவற்றைச் சுமந்துச் செல்ல ஆட்டோவும் கொடுக்கிறோம். சைக்கிளில் சேகரித்து வரும் குப்பைகளை ஆட்டோக்களில் கொடுத்துவிட, ஆட்டோக்கள், நவீன பிரெஞ்ச் தொழில் நுட்பத்தில் தயாரிக்கப்பட்ட லாரியில் பெட்டிகளைக் கொடுத்து விடுவார்கள். இப்போ இந்தப் பெட்டிகள் நிறைய குப்பைகள் இருக்கு. இதை லாரி எப்படி சுத்தம் செய்யுதுன்னு பாருங்க' என்றவர், இரண்டு தொழிலாளர்களைப் பார்த்துக் கையசைத்தார்.



500 லிட்டர் பெட்டி ஒன்றைத் தூக்கிச் சென்ற அவர்கள், அந்த வினோத லாரியின் பின்புறம் இருந்த கொக்கியில் பெட்டியை மாட்டிவிட்டு, டிரைவரைப் பார்த்துக் குரல் கொடுத்தனர்.

உடன், ஹைட்ராலிக் சாதனம் இயங்கியது. குப்பை நிறைந்த பெட்டியை அலேக்காகத் தூக்கி, தலை குப்புற கவிழ்த்ததும் பெட்டியின் மேல்மூடி தானாகத் திறந்துகொண்டது! குப்பைகள் லாரிக்குள் கொட்டின.

கதை அதோடு முடிந்து விட்டதா என்றால் இல்லை. அடுத்து, மற்றொரு சாதனம் இயங்க, கொட்டப்பட்ட குப்பைகளைத் திரட்டி அணைத்து நசுக்கியது. ஒரு குட்டிச் சாத்தான் போல! நசுக்கிய குப்பைகள் பாக்கெட் புளி மாதிரி ஆகி விட்டது!

இதே பாணியில் குப்பைகளை நசுக்கி நாற்பது டன் வரை ஏற்றிச் செல்லும் அறுபது லாரிகளை இறக்குமதி செய்யப் போகிறார்களாம்.

"இனிமேல் குப்பைகளை நாங்க தெரு ஓரத்துலதான் போடுவோம்னு நீங்க பிடிவாதம் பிடிக்க முடியாது. ஏன்னா ஒவ்வொரு 100 மீட்டர் இடைவெளியில் 500 லிட்டர் கொள்ளளவு கொண்ட குப்பை பெட்டியை வைக்கப் போகிறார்கள். பெட்டியின் மேல் மூடியை சுலபமாகத் திறந்து குப்பைகளை அதில்தான் போட வேண்டும்."

இந்தப் புதிய முறையை முதலில் சோதனை முறையில் சில டிவிஷன்களில் அமல்படுத்தப் போகிறார்கள். மார்ச் 4-ஆம் தேதி யிலிருந்து பணியைத் தொடங்குகிறார்கள். கடந்த வாரம் ஐஸ் ஹவுஸ் பகுதியில் சோதனை முறையில் நடைபெற்ற இந்தக் 'குப்பையள்ளும் கண்காட்சி' யின்போது சொன்னார்கள்.

அதே அலுவலகத்தில் டெம்போ டிரைவராகப் பணியாற்றும் சேகர் நம்மைப் பிடித்துக் கொண்டார்.

''எல்லாம் எங்க மேயரோட ஐடியாங்க. மினி மேம்பாலம் பத்தி விண்டலடிச்சவங்க, இப்போ ஜாலியா அதுல சவாரி பண்றாங்க... இப்போ புது குப்பை மிஷினு! வெளிநாட்டுப் பயணம் போயி புதுசு புதுசா பண்றாரு தலைவரு!" என்று உணர்ச்சிவசப்பட்ட உடன்பிறப்பிடம் ''தண்ணீர் பஞ்சத்துக்கும் இதுமாதிரி புதுசா ஏதாவது பண்ணச் சொல்லக் கூடாதா" எனக் கேட்டுவிட்டு வந்தோம்.

**— ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள்: **வெங்கட்**

# என்ன அழகு!

✉ ஜெ.வின் வன்முறை அரசியலில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கும் தமிழகம், மூன்று தொகுதிகளில் இடைத்தேர்தலைச் சந்தித்த தருணத்தில், மக்களை சிந்தித்து வாக்களிக்க கல்கி சென்ற வாரமும் இவ்வாரமும் எழுதிய தலையங்கங்கள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை.

பெங்களூர், அ. சங்கரன்.

✉ அடுப்பு அக்னி மூலையில்தான் இருக்க வேண்டும் என்று வாஸ்து சாஸ்திரம் கூறுகிறது. ஆனால் நாடு நெடுகிலும் நான் பார்த்த அநேக அடுக்குமாடிக் குடியிருப்புகளில் அடுப்பு வாஸ்து சாஸ்திரப்படி காணோம்! ஆனாலும் அவர்களும் மகிழ்ச்சிகரமாக வாழ்ந்து கொண்டுதானிருக்கிறார்கள்.

கும்பகோணம்,
கே. என். பாலகிருஷ்ணன்.

✉ 'டெலி ஷாப்பிங்' மைதிலியுடன் டெலிபோனிலேயே நடத்திய உரையாடல் வித்தியாசம்.

புனே, ஜெ. ரஜினிராம்கி.

✉ வீடு கண்காட்சியில் தேக்கு மரங்களைக் கொண்டு கட்டப்பட்ட அழகிய வீடுகளை, நானும் சுற்றிச் சுற்றி ஓடி வந்தேன். என்ன அழகு.

சாத்தியாகுளம், க. பாக்யமலர்.

✉ ஸ்வீட் ஹோம் ஸ்பெஷலில் என்னைக் கவர்ந்தது, இதழ் முழுவதும் 'ஸ்வீட் ஹோம் என்பது...' என்ற தலைப்பின் கீழ் பிரபலங்கள் கூறிய விஷயங்கள்தான். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விஷயங்களைப் பயனுள்ளவிதமாகக் கூறியது சிறப்பு.

மொரட்டுப்பாளையம், க. நா. இராஜேஸ்வரன்.

✉ 'தவறுக்கு இடமில்லை' என்று அமைச்சர் தமிழ்க்குடிமகன் கூறும் விளக்கம் போதுமானதாக இல்லை. புத்தகங்களை வாங்கப் பரிந்துரைக்கும் குழு அமைக்கப்படுவதற்கு முன்பே எந்தப் பதிப்பகங்களிலிருந்து வாங்க வேண்டுமென முடிவாகி விட்ட நிலையை அவர் மறந்து விட்டார். ஏற்கெனவே பரிதாப நிலையிலிருக்கும் கிளை நூலகங்களை கவனிக்காமல் அய்யன் திருவள்ளுவர் நூலகம் புதிதாக ஏன் என்ற குற்றச்சாட்டுக்கும் மறுப்பில்லை.

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ வையவனின் கிரஹப்பிரவேசம், ரமாமணி சுந்தரின் கொஞ்சும் புறாவே! சிறுகதைகள் ஸ்வீட் ஹோம் ஸ்பெஷலுக்கு மேலும் பெருமை சேர்த்தன!

நெய்வேலி, க. இந்துமதி.

✉ 2-.2.2000 தேதியிட்ட தங்கள் வார இதழில் 'காதில் விழுந்தவை' பகுதியில் நூலகத்தில் இழப்பான நூல்களுக்கு நூலகரிடம் தொகை பிடித்தம் செய்வது தொடர்பாக வெளியான செய்தி பிழையானது. நூலகங்களில் இழப்பான நூல்களுக்கான தொகையை உரியவர்களிடமிருந்து பிடித்தம் செய்யப்பட வேண்டும் என்ற அரசு ஆணையின்படி செயல்படும்போது, நூல் இருப்பு சரிபார்க்கப்பட்டு அதில் குறைவுள்ள நூல்களுக்கான தொகை கணக்கிடப்பட்டு பிடித்தம் செய்யப்படுகிறது. 'நூல் இழப்பிற்காக தொகை பிடித்தம் செய்யப்படுவதால், கலைக் களஞ்சியம், பொன்னியின் செல்வன் போன்ற நூல்களை நூலகர்கள் எடுத்துச் சென்று விடுகின்றனர்' என்பது முற்றிலும் தவறான செய்தியாகும்.

சென்னை – 2, சி. லட்சுமி, பொதுநூலக இயக்குநர்.



✉ அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நூற்றாண்டு சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டதையொட்டி அவரது கடிதங்களைத் தொகுத்து நூல் வடிவம் பெறச் செய்யலாம் என்ற யோசனை தெரிவிக்கப்பட்டுள்ளது. குடும்பத்தினருக்கு அவர் எழுதிய கடிதங்கள் தவிர நண்பர்கள், விகடன் – கல்கி வாசகர்கள் முதலியோருக்கு எழுதிய கடிதங்களையும் இத் தொகுப்பில் சேர்க்க உத்தேசம். கல்கி அவர்களுடைய கடிதங்களைப் பாதுகாத்து வைத்திருப்பவர்கள் (அல்லது அவர்களுடைய வாரிசுகள்) கடிதங்களின் ஜெராக்ஸ் நகலை அனுப்பி உதவுமாறு கோருகிறேன்.

சுப்ரபாலன், தொகுப்பாசிரியர்.
III-A, Peniel Complex, 5, Jaya St., KADAPERI,
Thambaram (W), Chennai - 600 045.

■ TRAVELS

ABIRAAMI

# அபிராமி டிராவல்ஸ்



டிராவல் ஏஜெண்ட்ஸ் & டூர் ஆபரேட்டர்ஸ்

அரசு அங்கீகாரம் பெற்ற சுற்றுலா கார், வேன் மற்றும் பேருந்து இயக்குனர்

13-A, ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், பெசன்ட் நகர், சென்னை – 600 090.

(வரசித்தி விநாயகர் கோயில் எதிரில்),

Ph: (Off)- 490 1188, 491 0209, 491 7017, Res: 491 7733

# பாலாஜி தரிசனம்

*திருமலை – திருப்பதி – திருச்சானூர்*

உலகெங்கும் கோடிக்கணக்கான பக்தர்களால் குலதெய்வமாக கொண்டாடப்படும் பெருமாள் வெங்கடேஸ்வரர் இருக்கும் இடம் திருமலை. கடல் மட்டத்திலிருந்து 860 மீட்டர் உயரத்தில் நான்கு சதுர கிலோ மீட்டர் பரப்பளவில், வருடம் முழுவதும் ரம்யமான சீதோஷ்ண நிலையை கொண்ட இடம். திருமலையின் அடிவாரத்தில் உள்ள திருப்பதிதான் திருமலைக்குச் செல்லும் அனைவருக்கும் நுழைவு வாயில். இது சென்னையிலிருந்து 161 கிலோ மீட்டர் தொலைவில் ஆந்திர மாநிலத்தில் உள்ளது. திருப்பதியிலிருந்து 2 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள திருச்சானூரில், கி.பி. 12ம் நூற்றாண்டில் ஸ்ரீ ராமானுஜரால் குடமுழுக்கு செய்யப்பட்ட ஸ்ரீ பத்மாவதி தாயார் கோவில் உள்ளது. திருச்சானூர் செல்லாத திருப்பதி தரிசனம் நிறைவாகாது.

தினமும் 2 x 2 இருக்கைகள் கொண்ட சூப்பர் டீலக்ஸ் கலர் வீடியோ கோச் பேருந்துகள் விடப்படுகின்றன.

**தினமும் கிளம்பும் நேரம்: காலை 5 மணி. கட்டணம் ரூ. 350/-**

கிளம்பும் இடம்: வரசித்தி விநாயகர் கோயில், பெசன்ட் நகர்.

கட்டணம்– காலைச் சிற்றுண்டி, மதிய சாப்பாடு மற்றும் ரூ. 40க்கான சிறப்பு தரிசன டிக்கெட் உட்பட.

- டூரிஸ்ட் கார், ஏ.சி. கார், வேன், சுமோ, டெம்போ டிராவலர்
- டூரிஸ்ட் பஸ் 35, 40, 50, 55 இருக்கைகள் கொண்டவை. ◆ விமான டிக்கெட்டுகள் கிடைக்கும்.

ஆம்னி பஸ்சில் செல்ல தினமும் டிக்கெட்கள் வழங்கப்படுகின்றன.

◆ திருப்பதி ◆ திண்டுக்கல் ◆ கீழக்கரை ◆ பாலக்காடு ◆ மதுரை ◆ கரூர் ◆ ராஜபாளையம் ◆ வேளாங்கன்னி ◆ ஈரோடு ◆ திருச்செந்தூர் ◆ உடன்குடி ◆ புதுக்கோட்டை ◆ கும்பகோணம் ◆ திருச்சூர் ◆ திருச்சி ◆ பழனி ◆ ஸ்ரீ வில்லிபுத்தூர் ◆ நாமக்கல் ◆ திருப்பூர் ◆ திருநெல்வேலி ◆ விருதுநகர் ◆ ஸ்பிக் நகர் ◆ மும்பை ◆ எர்ணாகுளம் ◆ பெங்களூர் ◆ பொள்ளாச்சி ◆ ராமநாதபுரம் ◆ திருவாரூர் ◆ கோயம்புத்தூர் ◆ தூத்துக்குடி ◆ சிவகாசி ◆ கோவில்பட்டி ◆ ஹைதராபாத் ◆ சேலம் ◆ போடி

---



**வேதாரண்யம்**

**மகளிர் தொண்டு நிறுவனம்**

## கஸ்தூர்பா காந்தி கன்யா

## குருகுலத்திற்கு உதவுங்கள்



*அரை நூற்றாண்டு காலமாக இலவசமாய் உணவு, கல்வி, தொழிற் பயிற்சி ஆகியன தந்து பெண் குழந்தைகளை ஆதரிக்கும், அவர்களுக்கு வாழ்க்கையில் பிடிப்பு ஏற்படுத்தி தரும் அறநிலையத்திற்கு உதவுங்கள். மகிழுங்கள். கொடுத்தால் வரும்.*



நிறுவனர் அமரர். சர்தார்.

வேதரத்னம்

**கஸ்தூர்பா காந்தி கன்யா**

**குருகுலம்**

**வேதாரண்யம் - 614 810,**

**நாகை மாவட்டம்,**

**தமிழ்நாடு, இந்தியா**

போன் : (04369) 50227, 50017, 50011

தந்தி: குருகுலம்



**வி**ஜய் டிவியில் திங்கள் தோறும் இரவு 9.00 மணிக்கு. ஃபேவரைட் டெலிவிஷன் தயாரித்து வழங்கும் 'இரண்டாம் பிறை' என்ற புதிய 52 வாரத் தொடர் ஜனவரி 24 முதல் ஒளிபரப்பாக உள்ளது. நீண்ட இடைவெளிக்குப் பின்னர் ஜெயசித்ரா முற்றிலும் மாறுபட்ட கதாபாத்திரத்தில் இத்தொடரில் தோன்றுகிறார். அவருடன் நடிகை கஸ்தூரி, விஜய் ஆதிராஜ் மற்றும் கே.எஸ்.ஜி. வெங்கடேஷ் நடிப்பில் வெளிவரும் பரபரப்பான தொடர் இரண்டாம் பிறை.

# இரண்டாம் பிறை



கணவனின் உயிரைக் காப்பாற்றுவதற்காக ஜமீனின் வாரிசான தனது எட்டு வயது மகன் முத்தரசுவிற்கு, ஏழைத் தொழிலாளியின் ஐந்து வயது மகளை மணமுடிக்கிறார் முத்து நாச்சியார். விடுதலையடைந்த ஜமீந்தார் அத் தொழிலாளியின் குடும்பத்தை குடிசையுடன் தீக்கிரையாக்குகிறார். ஆனால் அந்த சிறுமி மட்டும் தப்பி வேறொரு இடத்தில் வளர்கிறாள். பல ஆண்டுகளுக்குப் பின்னர் படிப்பு முடித்து வெளிநாட்டில் இருந்து திரும்பும் முத்தரசிற்கு தீக்கிரையான குடிசையின் உருவம் அடிக்கடி நினைவில் வந்து துன்புறுத்துகிறது. உண்மையறிந்த முத்தரசு, அப்பெண்ணை தேடி அலைகிறான். அவனது முயற்சிக்கு தடைகள் உண்டு பண்ணுகிறார் முத்து நாச்சியார். முடிவு சின்னத் திரையில்.

இத் தொடரினை எம்.எம். ரங்கசாமி இயக்கியுள்ளார்.




விஜய் டி.வியில் ஒவ்வொரு திங்கட்கிழமையும்
இரவு 9.00 மணிக்கு

- ADVT -

## சினி கோனார் நோட்ஸ்
## வினா-விடை பகுதி

**வினா:** "தை பொறந்தாச்சு"- டைட்டிலை நியாயப்படுத்துக.

**விடை:** வழி பிறந்துவிட்டது. நல்ல காமெடிக்கு வழி பிறந்து விட்டது. ஆபாசமில்லாத, அருவருப்பில்லாத காமெடிக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. 'நாயே-பேயே', 'தடியா-பொடியா' என்ற வசனங்களை எல்லாம் கேட்டு சிரிக்க வேண்டிய பரிதாப நிலையில் இருந்த நமக்கு எல்லாம் நல்ல காலம் பிறந்து விட்டது.

விவேக் இன் ஃபுல் ஃபார்ம். காட்சிக்குக்காட்சி சிரிக்க வைக்கிறார்.

இவர் போதாதென்று, கார்த்திக்-சின்னி ஜெயந்த் டீம் ஒரு பக்கமும், பிரபு-பொன்னம்பலம்-வையாபுரி டீம் மற்றொரு பக்கமும் கூத்தடிக்கிறார்கள்.

காமெடிக்கு இவ்வளவு முக்கியத்துவம் தந்திருக்கிற டைரக்டர் வாழ்க!

**வினா:** "ஜெனடிக் தியரி"- ருசுப்படுத்துக.

**விடை:** அக்கா பெண்ணின் மேல் தனக்கு இருக்கும் காதலைச் சுற்றித்தான் தன் கேரக்டரே பின்னப்பட்டிருக்கின்றது என்கிற விஷயத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு, அதனை ஃப்ரேம் டு ஃப்ரேம் வெகு நேர்த்தியாக வெளிப்படுத்தி, அப்பாவின் ஜீன்ஸ் எங்கே போய்விட முடியும் என்று நம்மைப் பார்த்துக் குழியுடன் சிரிக்கிறார் 'மகா' பிரபு.

**வினா:** "அர்த்தமற்ற பயம்"- ஓர் உதாரணம் தருக.

**விடை:** ரயில்கள் நானா-நீயா என்று போட்டி போட்டுக் கொண்டு தடம்புரண்டு கொண்டிருக்கும் இந்த வேளையில், குழப்பமில்லாமல் தெளிவான கதையை எடுத்துக் கொண்டிருக்கும் டைரக்டர் எங்கே 'தடால்' என்று தடம் புரண்டு விடுவாரோ என்ற பயத்தை, 'நானாவது, கதையின் மெயின் 'டிராக்'ஐ விட்டு ஒரு அங்குலம் இப்படி அப்படி நகருவதாவது' என்று அர்த்தமற்றதாக்கி விடுகின்றார் அவர்.

**வினா:** "தேவா சென்ட்டிமெண்ட்"- மேற்கோள் காட்டி விளக்குக.

**விடை:** "கடவுளின் பெயரை முதல் வார்த்தையாகக் கொண்டு எழுதப்படும் பாடல் என்னைப் பொறுத்தவரை சென்ட்டிமெண்ட்டாக ஹிட்டாகி விடுகின்றது"- தேவா ஒரு பத்திரிகைப் பேட்டியில் கூறியது. "கோபாலா சேஷ கோபாலா", 'சென்ட்டிமெண்ட்'ஐ பலப்படுத்தப்போகிறது.

**வினா:** "மகிழ்ச்சியிலும் சோகம்"- உதாரணத்துடன் விளக்குக.

**விடை:** 'ஆடியன்ஸின் முழு கவனமும் தன் காரெக்டரில் இருக்க வேண்டும். தன்னுடைய உடையோ, 'மேக்-அப்'போ தேவையற்ற 'ஸ்டைல்-மானெரிஸமோ அதனை டிஸ்ட்ராக்ட் பண்ணிவிடக் கூடாது என்று அதிக எச்சரிக்கையுடன் இருப்பதில்




கௌசல்யாவின் ப்ரொஃபஷனலிஸம் தெரிகிறது. மகிழ்ச்சியூட்டுகிறது நமக்கு. ஆனால் டைரக்டருக்கு? 'கிளாமர் இல்லாமல் படமா?' என்று டென்ஷனாகி ரெகார்ட்-டான்ஸ் ஸ்டைலில் ஒரு பாடல் காட்சியை, அதுவும் கண்ணியமான ரெஸிடன்ஷியல் காலனியில் நடப்பது போல் பொருத்தமில்லாமல் புகுத்தியிருப்பது ஒரு சோகக் கதை.

**வினா:** மண்டையைக் குடையும் கேள்வி ஏதாவது?

**விடை:** கார்த்திக்குக்கு மட்டும் வயது ஏறவே ஏறாதா?

**— கிருஷ்ணா சிதம்பரம்**

# AAA

கிரிஸில் மற்றும் டிசிஆர்
வழங்கும் மதிப்பீடு

ஐடிபிஐ
ஃப்ளெக்ஸிபாண்ட்ஸ் 8

## ரெகுலர் இன்கம் பாண்ட்

- ஆண்டிற்கு 11% வீதம் வருடாந்தர வட்டி அல்லது ஆண்டிற்கு 10.60% வீதம் அரை வருடத்திற்கு அல்லது ஆண்டிற்கு 10.30% வீதம் மாதாந்தர வட்டி.
- 5 வருட திட்டம்
- முறையே 11% / 10.88% / 10.80% ஒய்டிஎம்.

## குரோயிங் இன்டரெஸ்ட் பாண்ட்

- வருடாந்தர வட்டி, முதல் ஆண்டிற்கு 9.75% வட்டி 5வது ஆண்டிற்கு 10.50% ஆக வளருகிறது (ஒய்டிஎம் 10.12%)
- 12 மாதங்களுக்குப் பிறகு, அனைத்து தனித்த முதலீடு செய்யும் நபருக்கும் பணத்தைத் திரும்பப் பெறும் வசதி.

## ஃப்ளோட்டிங் ரேட் பாண்ட்

- 364 நாட்கள் டி-பில்களின் மீது வெயிட்டெட் அவரேஜ் வருவாய் 0.50% கூடுதல்
- வட்டி அரை வருடத்தில் கொடுக்கப்படும்.
- வட்டி 10.25% வீதம் முதல் ஆறு மாத காலவரைக்கு.
- 5 வருட திட்டம்
- 3வது வருட இறுதியில் திரும்பப் பெறும்/ திருப்பிக் கொடுக்கும் வசதி.

## இன்ஃப்ராஸ்ட்ரக்சர் (வரி சேமிப்பு) பாண்ட்

- 88, 54EA மற்றும் 54EB பிரிவின் கீழ் வரி கழிப்புப் பயன்கள்
- பகிர்ந்து கொடுத்தலில் சலுகை.
- ஆண்டிற்கு 10.25% வீதம் வட்டி 3 வருடங்களுக்கு (88 மற்றும் 54EA பிரிவின் கீழ்) மற்றும் ஆண்டிற்கு 10.50% வீதம் 85 மாதங்களுக்கு (54EB பிரிவின் கீழ்)
- ஆன்யுவல் மற்றும் க்யுமுலேட்டிவ் வட்டி வசதிகள்.

# காட்சிகள் ஆறு காதல் ஒன்று!



● அல்வா தராமல்
சாக்லேட் தருகிறேன்.
அதற்குப் பெயர்தான் காதல்!

படங்கள் உதவி : ஜான்சன்

• பார்க்கிற இடமெல்லாம்
பாவியுன் முகந்தான்!
பயிலத் தொடங்கினேன் காதல்!



• என் கரமிரண்டையும்
உன்னிடம் தந்தேன்
எதனால் தெரியுமா, காதல்!





• எதிர்ப்புகள் மீறியும்
இறுகப் பிடித்தேன்;
ஏனென்று தெரியுமா? காதல்!

• அசைய விடாமல்
அணைத்திருப்பதற்கு
அர்த்தம் தெரியுமா, காதல்!





• பணிவாய்க் கூப்பிய
கரங்களெதற்கு?
பறக்கலாம் வா நாம் வானில்!

— குரோம்பேட்டை கவிராயர்




இது வரை கண்டிராத மாயா ஜால தந்திரக் காட்சிகள் நிறைந்த ஜாலியான தொடர்.

சித்தர் மலையில் 2000 ஆண்டுகளாக வாழும் ஜிங்கலன் என்ற சித்தர் கர்ணனின் கவசத்தையும், ஆயுதங்களையும் தகுந்த ஒருவரிடம் ஒப்படைப்பதற்காக பாதுகாத்து வருகிறார். மூன்று குள்ளர்களும் அந்த மலையில் வசிக்கிறனர். அருகில் உள்ள மிதிலாபுரத்தில் மாரகன் என்ற மந்திரவாதி தனது மந்திர சக்தியினால் மக்களை துன்புறுத்தி வருகிறான். அவனிடம் பிடிபடும் ஒரு குள்ளன் உயிருக்குப் பயந்து சித்தரிடம் உள்ள கவசத்தைப் பற்றி அவனிடம் கூறிவிடுகிறான். அதைக் கைப்பற்ற வரும் மாரகனுக்கும், சித்தருக்கும் நடைபெறும் மந்திர தந்திரப் போரில், சித்தர் அருகில் உள்ள பாண்டவபுரத்தை சேர்ந்த அப்பாவி சுயம்புவால் காப்பாற்றப்படுகிறார். சுயம்புவின் நல்ல உள்ளத்தை அறிந்த சித்தர், அவனுக்கு மந்திர தந்திரங்கள் கற்றுக் கொடுப்பதுடன், கவசத்தையும் அளிக்கிறார். சுயம்பு கவசம் அணிந்த உடன் மறையும் 'மாயா' என்ற வீரனாகி அநீதியை எதிர்த்து தனது போராட்டத்தை தொடர்கிறான்.

சித்தர் மலைக்கு மூலிகைகள் பற்றி எழுத வந்த பத்திரிகை நிருபர் நிவேதிதா சுயம்புவின் அப்பாவித்தனத்தால் ஈர்க்கப்படுகிறாள். ஆனால் சுயம்புதான் மாயா என்று அறியாமல் மாயாவை நேசிக்கிறாள். நிவேதிதாவை நேசிக்கும் சுயம்பு தனது காதலை வெளிப்படுத்த முடியாமல் தவிக்கிறான். விடை சின்னத்திரையில்.

*நடிப்பு :* நாகேந்திர பிரசாத் (பிரபு தேவாவின் தம்பி) ஸ்வர்ணா, காந்திமதி.

*இயக்கம் :* பி.ஆர். விஜயலக்ஷ்மி




*விஜய் டி.வியில் அக். 27 முதல் ஒவ்வொரு புதன்கிழமையும் இரவு 8.00 மணிக்கு*

காதில் விழுந்தவை :

# பரம ரகசியம்!


• பொன்னுசாமி

● விதிகளை மீறி கட்டப்பட்டுள்ள கட்டுமானங்களை முறைப்படுத்துவது தொடர்பாக சி.எம்.டி.ஏ. போட்ட குளறுபடி ஆர்டர் காரணமாக, அரசுக்கு பல நூறு கோடி ரூபாய் வருவாய் இழப்பு ஏற்படுவது குறித்து சில வாரங்களுக்கு முன்னர் இப் பகுதியில் குறிப்பிட்டிருந்தோம். இது சம்பந்தமாக அடுக்குமாடி பிரமோட்டர்கள் சமீபத்தில் சம்பந்தப்பட்ட அமைச்சரைச் சந்தித்து குளறுபடி உத்தரவை மறு பரிசீலனை செய்து, சரியான உத்தரவு போடும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அப்போது அமைச்சர், "எவ்வளவு சொன்னாலும் அதிகாரிகள் கேட்காமல் இருக்கிறார்கள்; அவர்களின் இந்த ஒத்துழையாமை காரணமாக முதல்வரிடம் எனக்குத்தான் கெட்ட பெயர்" என்று புலம்பினாராம். அவர் என்ன செய்வார் பாவம்! செல்வாக்குமிக்க சென்னை மாநகராட்சியிலிருந்து போகும் பரிந்துரைகளையும், திட்ட யோசனைகளையுமே தலைமைச் செயலகத்தில் அமர்ந்துள்ள சீனியர் பெண் அதிகாரி திருப்பியனுப்பும் நிலை இருக்கிறதே! இதற்கிடையில் தனி நீதிமன்றத்தில் அதிகாரிகள் சந்திக்கும் வழக்குகள் காரணமாக கோட்டை சீனியர் அதிகாரிகள் மத்தியில் ஒரு கலக்கம் இருக்கிறது. பல கோடி மதிப்புள்ள டெண்டர்களைப் பரிசீலித்து உத்தரவிடும் பொறுப்பிலுள்ள பல துறைகளைச் சேர்ந்த அதிகாரிகள் தங்களை முக்கியமில்லாதத் துறைக்கு மாற்றி விடும்படி தலைமைச் செயலாளரிடம் வேண்டுகோள் வைத்திருக்கிறார்களாம். சட்டமன்றத்திற்கு பொதுத் தேர்தல் வர இன்னமும் ஒரு வருடம் இருக்கும் நிலையில் நேர்மையாக செயல்பட்டாலும் 'லைம் லைட்டி'லிருந்து சற்று ஒதுங்கி இருப்பது அரசியல் தட்ப வெப்ப நிலையிலிருந்து காத்துக் கொள்ள உதவும் என்று நினைக்கிறார்களாம் அவர்கள்.

● தமிழகமெங்கும் சமத்துவபுரங்களை உருவாக்கி ஜாதி பேதமற்ற சமுதாயத்தை உருவாக்க ஒரு பக்கம் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார் முதல்வர். ஆனால் அவர் அருகிலேயே இருக்கும் அமைச்சர் ஒருவர் உட்கட்சித் தேர்தலில் ஜாதி மனோபாவத்தோடு செயல்பட்டு வருகிறாராம். வடசென்னை மற்றும் மத்திய சென்னையில் நடந்த உட்கட்சித் தேர்தல்களில் அந்த அமைச்சரைச் 'சேர்ந்தவர்கள்' ஒரு குழுவாகச் செயல்பட்டு மாற்று அணியினரை நோகடித்தார்களாம். தி.மு.க. மனத்துடன் த.மா.காவில் இருக்கும் சட்டமன்ற உறுப்பினர் ஒருவரும் தன் பங்குக்கு, ஜாதி அபிமானம் காரணமாக அமைச்சருக்கு ஆதரவாகச் செயல்பட்டு தி.மு.க. உட்கட்சித் தேர்தலில் ஆட்கள், பணம் என்று ரொம்பவே ஒத்துழைத்தாராம்.

● சென்ற முறை பெட்ரோலியத் துறை கேபினட் அமைச்சராக இருந்த வாழப்பாடியார் தம் பங்குக்கு மீறி காஸ் கோட்டா மற்றும் பெட்ரோல் பங்க் ஏஜென்ஸிகளைக் கொடுத்து விட்டதால் இந்த முறை பெட்ரோலியத் துறை பா.ம.க. அமைச்சர் கையிலிருந்தும் ஒன்றும் செய்ய முடியவில்லையாம். கடந்த நான்கைந்து மாதங்களாக பா.ம.க. அமைச்சர் கையில் ஆயிரக்கணக்கில் காஸ் அலாட்மெண்ட் கேட்டு மனுக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதுவரை எதுவும் அலாட் செய்யப்படாததால் தொண்டர்கள் வெறுத்துப் போயிருக்கிறார்கள். இந்த வருட கோட்டாவை ஃபிக்ஸ் செய்து மாநிலவாரியாக ஒதுக்குவது கேபினட் அமைச்சர் ராம்நாயக் கையில் இருப்பதால் பா.ம.க பொன்னுசாமியால் ஒன்றும் செய்ய முடியவில்லை! விவகாரத்தை பிரதமர் வரையில் எடுத்துச் சென்றும் காரியம் நடக்கவில்லையாம்!

— சஞ்சயன்



# நீதியை நிமிரச் செய்தவர்!

"நாடொறும்
நாடி முறை செய்யா
மன்னவன்
நாடொறும் நாடு கெடும்"

'அய்யன்' வள்ளுவரின் இந்தக் குறளுக்குப் பொருள், "முறையாக ஆட்சி செய்யாத மன்னனால் நாடும் அவனது மக்களும் அழிந்து போவார்கள்" என்பதுதான்.

சமீபத்தில் தனி நீதிமன்றம் ஜெயலலிதாவுக்கு சிறைத்தண்டனை வழங்கி, தீர்ப் பளித்த கொடைக்கானல் ஓட்டல் விவகாரம், சில வருடங்களுக்கு முன் உயர்நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டபோது நீதிபதி எம். சீனிவாசன் தனது தீர்ப்பில் சொன்ன குறள் இது!

அப்போது முதல்வராக இருந்தவர் ஜெயலலிதா.

நீதிபதி தமது தீர்ப்பில் ஆட்சியாளர்களைக் குட்டிய பாங்கு, ரத்தத்தின் ரத்தங்களுக்கு எரிச்சலை உண்டாக்க, அவர்கள் கலாசாரப்படி ஆட்டோக்களில் நீதிபதி வீட்டுக்கு வந்து 'பயமுறுத்தி'விட்டுப் போனார்கள்.

"சட்டம் மற்றும் என் மனசாட்சிப்படி கடமையாற்றுவதால் நான் யாருக்கும் பயப்படத் தேவையில்லை" என்று நெருங்கியவர்களிடம் அப்போது சொன்னார் சென்ற வாரம் தில்லியில் காலமான நீதிபதி சீனிவாசன்.

கொடைக்கானல் ஓட்டல் வழக்கில் மட்டுமல்ல. ஆனந்த விகடன் ஆசிரியர் பாலசுப்பிரமணியனுக்கு, 'வானளாவிய அதிகாரம்' கொண்ட சபாநாயகர் பி.எச்.பாண்டியன் சிறைத் தண்டனை கொடுத்தது தவறு என்று தமிழக அரசுக்கு அபராதம் விதித்து, தீர்ப்பு வழங்கிய வரும் சீனிவாசன்தான்.

அதே போல் சகட்டுமேனிக்கு அ.தி.மு.க. அரசால் அனுமதி வழங்கப்பட்ட ஆசிரியர் பயிற்சிப் பள்ளி விவகாரத்தில் சீனிவாசன் கொடுத்த தீர்ப்பால் அமைச்சர் அரங்கநாயகத்தின் பதவி ஆட்டம் கண்டது! தன் மீது வழக்குப் போட கவர்னர் சு. சுவாமிக்கு அனுமதி கொடுத்தது தவறு என்ற ஜெவின் மனுவை தள்ளுபடி செய்தவரும் இவர்தான்.

இப்படிப் பல வரலாற்றுச் சிறப்புமிக்க வழக்குகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். ஒரே வாக்கியத்தில் சொல்வதென்றால் 'நீதியை நிமிரச் செய்தவர்.'

நேர்மை, துணிவு, எளிமை ஆகியவற்றின் முகவரியாக இருந்த நீதிபதி சீனிவாசன் பிறந்தது தஞ்சை மாவட்டம் சித்தாடி கிராமத்தில். சென்னை ராமகிருஷ்ணாமிஷன் பள்ளி, விவேகானந்தா மற்றும் லயோலா கல்லூரிகளில் படித்துவிட்டு சட்டக் கல்லூரியில் சேர்ந்தார்.

பின்னர் பிரபல வழக்கறிஞரும் சொந்த மாமாவுமான ஆர். கோபாலசுவாமி அய்யங்காரின் கீழ் தமது வழக்கறிஞர் பணியைத் துவக்கினார் சீனிவாசன்.

தலையில் டர்பன், நெற்றியில் திருமண் – ஸ்ரீசூர்ணம், காலரில்லாத கோட்டு, பனிச் சென்ற தும்பைப் பூ பஞ்சகச்சம். இதுதான் நீதிபதி சீனிவாசன். அவர் வருகிறார் என்றால் நீதிமன்றத்தின் தாழ்வாரங்கள் கூட அமைதியாகிப் போய்விடும். தான் உண்டு; தன் பணி உண்டு என்று செயல்பட்டாலும் கர்நாடக இசைக் கச்சேரிகளைக் கேட்கவும், கிரிக்கெட் மாட்சுகளைப் பார்க்கவும் மிகவும் விருப்பப் படுவார்.

ஹிமாசலப் பிரதேச உயர்நீதி மன்றத்தில் தலைமை நீதிபதியாகவும், பின்னர் உச்சநீதி மன்ற நீதிபதியாகவும் அவர் வழங்கிய பல தீர்ப்புகள் சட்ட வட்டாரத்தில் என்றும் பேசப் படுபவையாக இருக்கும்.

மாறுதல் பெற்று சிம்லாவுக்குச் செல்லும் போது, தமது உறவினரான ராமானுஜத்திடம், "சிம்லாவில் 'கல்கி' தொடர்ந்து சரியாகக் கிடைக்குமா என்று தெரியவில்லை; எனவே சந்தா கட்டிவிடு" என்று சொல்லிச் சென்றாராம்!

— ப்ரியன்

தேவி அபிராமி அகஸ்தியா AVM ராஜேஸ்வரி

10.15, 2,6, 10 PM 10.45,2.30,6.15,10 PM 10.00,2.00,6.00,10 PM 10.45,2.30,6.15,9.45



ராஜ்கமலின்...

# ஹேராம்

கமல்ஹாசன்

இளையராஜா

A

ELEGANT


• ர.சு. நல்லபெருமாள்

நைஸா மறைச்சுட்டார்னு தெரியலை.

கல்கி ரீடர்ஸுக்கு ர.சு. நல்லபெருமாளையும் அவரோட 'கல்லுக்குள் ஈரம்' நாவலையும் புதுசா அறிமுகப்படுத்த வேண்டாம்னு நினைக்கறேன்.

காந்திக்கு எதிரான சிந்தனைகளோட உருவாகற இளைஞன், கடைசில காந்தியிடமே சரணாகதி அடையற நாட், நல்லபெருமாளுடையதில்லையா?

கமல் இந்த நாவலைப் படிச்சிருக்க மாட்டார்னு நான் நம்பலை. அப்படியே படிக்காட்டாலும் சுஜாதாலேருந்து ஞானக்கூத்தன் வரைக்கும் - இந்தப் பட ப்ராஜக்ட்ல அவர்கூட ஒத்துழைச்சிருக்கற இலக்கியவாதிகளாவது சொல்லாமலா இருந்திருப்பாங்க? ரொம்ப பெரிய ப்ளண்டர்.

ஃபர்ஸ்ட் டே தேவி தியேட்டர்ல ப்ரீமியர் ஷோ நடந்தப்ப, எத்தனையோ கார்ல யார் யாரையோ உட்கார வெச்சி ஊர்வலம் விட்ட கமல், ர.சு. நல்லபெருமாளுக்கு நியாயமா ஒரு தனி கார் தந்து கூட்டிட்டு வந்திருக்கணும். குறைந்த பட்சம், இருந்த கார்கள்ல ஒண்ணுலயாவது உட்கார வெச்சிருக்கணும்.

நல்லபெருமாள், இந்தப் படத்தைப் பார்த்தா எப்படித் துடிச்சிப் போவார், வருத்தப்படுவார்னு இப்ப கண்ணை மூடிட்டு யோசிச்சிப் பார்த்தா எனக்கே கஷ்டமா இருக்கு. 'கல்லுக்குள் ஈரம்' படிச்சிருக்கற கல்கி ரீடர்ஸும் அந்தக் கஷ்டத்தை உணர முடியும்.

**ஹே**ராம் பார்த்துட்டேன். ஐ திங்க், தமிழ்ல வந்திருக்கற முதல் 'சினிமா' இதுதான். நம்மாட்கள் இதுவரைக்கும் நாடகங்களைத்தான் ஸ்கிரீன்ல குடுத்திட்டிருந்தாங்க.

படம் பார்த்துட்டு மக்கள் காந்தியைப் புரிஞ்சிக்கறாங்களோ இல்லியோ, கோடம்பாக்கத்து டைரக்டர்ஸுக்கு 'சினிமா' புரிஞ்சுடும்னு நினைக்கறேன். ஹாட்ஸ் ஆஃப் டு டைரக்டர் கமல்!

பட், ஒரே ஒரு விஷயத்தைக் கண்டிப்பா சொல்லிடணும். ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்லேருந்து திருவல்லிக்கேணி ஞானக்கூத்தன் வரைக்கும் டைட்டில் கார்டுல நேம் க்ரெடிட் குடுத்திருக்கற கமல், மூலக் கதைக்கு இன்ஸ்பிரேஷனா இருந்திருக்கக்கூடிய ர.சு. நல்லபெருமாளை ஏன்

• • •

**க**ல்வித் திட்ட மாறுதல் பத்தி இப்ப தலைக்குத் தலை ஐடியா குடுத்திட்டிருக்காங்க. இப்ப இருக்கற எஜுகேஷனல் சிஸ்டம் சரியில்லை; லைஃப்க்கு உதவாத பாடங்களை நீக்கணும்; பாடம் சொல்லித் தர்ற முறைகளை மாத்தணும் அப்படி இப்படின்னு சொல்றாங்க.



## சுமி

## சூப்பர்மார்க்கெட்

எதையெல்லாம் மாத்தணும், எதையெல்லாம் புதுசா கொண்டு வரணும்னு சொல்றாங்களோ, அதெல்லாம் நம்ம வேதங்களிலேயும், உபநிஷத், கீதை, யுவான்சுவாங்கோட பயணக் குறிப்புகள்ல இருக்குங்கறார் ஐ.வி. சலபதி ராவ்னு ஒரு ரைட்டர்.

'சப்தகிரி'ன்னு ஒரு மாகஸின் கேள்விப்பட்டிருக்கீங்களா? திருப்பதி தேவஸ்தானத்துலேர்ந்து வர்ற ரிலிஜியஸ் இங்கிலீஷ் மாகஸின். அதுல லேட்டஸ்ட் இஷ்யூல வந்திருக்கு இந்தக் கட்டுரை.

பசங்க படிப்புச் செலவை முழுக்க முழுக்க கவர்ன்மென்ட்டும் பணக்காரப் பிரமுகர்களும் ஏத்துக்கிட்டு, பசங்ககிட்டேருந்து ஒரு பைசாகூட ஃபீஸ் வாங்கக் கூடாது.

எக்ஸாமினேஷன்னு பக்கம் பக்கமா எழுத வெக்கக் கூடாது;

டீச்சர், கிளாஸ்ல லெக்சர் அடிக்காம, கான்வர்ஸேஷன் மாதிரி கிளாஸ் எடுக்கணும்;

தொழில் கல்விக்கு அதிக இம்பார்டன்ஸ் தரணும்.

லேடீஸுக்கு யூஷுவல் பாடங்களோட, ஸ்பெஷலா

ம்யூஸிக் உள்ளிட்ட நுண்கலைகள் சிலதையாவது கத்துக் கொடுக்கணும்;

சிறந்த ஸ்டூடன்ஸ்ஸோட முகத்தை ஸ்கூல்ல வரைஞ்சு வெக்கணும் –

இப்படி அடுக்கிட்டே போறார், சலபதிராவ். எல்லாமே வேதங்களும் உபநிஷத்தும் சொல்ற ஸ்கூல் எஜுகேஷன் பற்றிய குறிப்புகள்.

படிக்கும்போது ரொம்ப ஆச்சர்யமா இருந்தது. இதெல்லாம் அப்ளை ஆகும்போது இன்னும் ஆச்சர்யமான ரிஸல்ட்ஸ் கிடைக்கும்.

• • •

ஆர். வெங்கடேஷோட ரெண்டாவது ஷார்ட் ஸ்டோரி கலெக்ஷன் 'கரைந்தவர்கள்' வெளிவந்திருக்கு.

இலக்கியத் தரமான கதைகளை வேகமா படிக்க முடியாதுங்கற கருத்தை

# காரில் இடமில்லையா, கமல்?

ஒவ்வொரு கால கட்டத்திலும் யாராவது ஒருத்தர், ரெண்டு பேர் உடைச்சிட்டு வருவாங்க. நைன்டீஸ்ல எழுத ஆரம்பிச்சவங்கள்ல, அதுக்கு இருக்கற நாலஞ்சு பேர்ல வெங்கடேஷ் ஒருத்தர்.

இரண்டு பிரதிகள், கரைந்தவர்கள், குவிந்த வாய், லேட்னு இதுல இருக்கற பல கதைகள்ல, எவர்சில்வர் தட்டுல நம்ம முகத்தைப் பார்த்துக்கற மாதிரியான – ஒருமாதிரி அவுட் – ஆஃப் – ஃபோகஸ் எபெக்ட்ல – நாமே தெரியறோம். ஐ மீன், சுலபமா நம்மைக் கதைகளோட ஐடன்டிஃபை பண்ணிப் பார்த்துக்க முடியுது.

விறுவிறுவிறுன்னு ஜாகிங் போற மாதிரி ஒரு ரைட்டிங் ஸ்டைல். வருணனைகள்ல ஆலாபனை பண்ணிட்டு நிக்காம சடார் சடார்னு டயலாக்ஸுக்கு வந்துடறார். வசனங்களுக்கு நடுவுல இருக்கற இடைவெளிகள்ல சின்னதா ஒரு ஸ்விம்மிங் பூல் கட்டி நீச்சலடிக்கலாம் போல யோசிக்கப் பல விஷயங்கள்.

வாரப் பத்திரிகைகள் இலக்கியம் வளர்க்கலைன்னு யார் சொன்னது? இந்த கலெக்ஷன்ல உள்ள எல்லாக் கதைகளும் கல்கி, குங்குமம், இதயம் etc., பத்திரிகைகள்ல வந்ததுதான். (மதி நிலையம் வெளியீடு, 45. செல்லபிள்ளையார் கோயில் தெரு, இராயப்பேட்டை.)

— சுமி



# குறையொன்று

அனுஷ்டானங்களிலே உள்ள சிரமத்தைக் காட்டுகிற கதை இதுதான் – கூர்ம புராணம் சொல்கிறது இதை :

ஒருத்தர் இப்படி ரொம்ப சிரமப்பட்டு அனுஷ்டானங்கள் செய்து வந்தாராம். நாரதர் அவரிடத்திலே போய், "இவ்வளவு சிரமப்படுகிறீர்களே, எதற்கு?" என்று கேட்டிருக்கிறார்.

"மோக்ஷார்த்தம்" என்று பதில் சொல்லியிருக்கிறார் அவர்.

நாரதர் சொன்னாராம் : "நான் வைகுண்டத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்... நாராயணனிடத்திலே பேசி விட்டு வரப் போகிறேன். 'உமக்கு எப்போது மோக்ஷம்?' என்று அவரிடம் கேட்டு வரவா...?"

"ஆஹா! கேட்டுக் கொண்டு வாருமே! எனக்கெப்போது மோக்ஷம் என்று கேட்டு வாருமே..." என பதில் சொல்லியிருக்கிறார்.

அங்கேயிருந்து கிளம்பினார் நாரதர். அப்படியே ஊருக்குள்ளே வந்தார். ஊருக்குள்ளே ஒரு பஜனை கோஷ்டி. எல்லோரும் பஜனை, நாம சங்கீர்த்தனம் பண்ணிக் கொண்டு வருகிறார்கள். நடுவிலே ஒருத்தர் ஆடி, பாடிக் கொண்டு வருகிறார். கையிலே தாளம் போட்டுக் கொண்டிருக்கிறார். கால்களிலே சதங்கையெல்லாம் கட்டிக் கொண்டிருக்கிறார்...

அவரைப் போய் நாரதர் கேட்கிறார் : "எதற்காக இப்படிப் பண்ணுகிறீர்?"

ஆடிக் கொண்டிருந்தவரும் பதில் சொன்னார் : "மோக்ஷார்த்தம்!"

அவரிடமும் அதையே கேட்டார் நாரதர் : "நான் வைகுண்டம் போகப் போறேன். உமக்கெப்போது மோக்ஷம் என்று கேட்டுக் கொண்டு வரட்டுமா?"

"ஆஹா! கேட்டுக் கொண்டு வாரும்!"

கொஞ்சம் நாளானதும் நாரதர் திரும்பி வந்தார்.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

பஜனை பாடி ஆடிக் கொண்டிருந்தாரே, அந்த மனிதர், மோக்ஷம் எப்போது என்று தாம் கேட்டுக் கொண்டு வரச் சொன்னதையே மறந்து போயிருந்தார்! அதை அவருக்கு நாரதரே ஞாபகப்படுத்தவேண்டியதாகி விட்டது!

"உமக்கு மோக்ஷம் எப்போது என்று கேட்டு வரச் சொன்னீரே... கேட்டு வந்திருக்கிறேன், சொல்லட்டுமா?" என்றார் நாரதர்.

"சொல்லும்! எப்போது கொடுக்கிறேன் என்றான் பகவான்...?"

"இன்னும் எழுபது ஜன்மா நீர் எடுக்கணுமாம். அதற்கப்புறம்தான் மோக்ஷம்" என்றார்.

அவர் பார்த்தார்... "எழுபதா? எழுபதானாலும் பரவாயில்லை; எழுநூறானாலும் பரவாயில்லை, ஏழாயிரமானாலும் பரவாயில்லை, ஏழு கோடியானாலும் பரவாயில்லை... எனக்கொன்றும் கஷ்டமேயில்லை..." என்று அடித்துச் சொல்லிவிட்டார்!

"ஏன்...?"

"எனக்கென்ன கஷ்டம்? இந்த மாதிரி பாடிக் கொண்டே போகிறேன் – ஒரு கிருஹத்திலே போனால் நல்ல குழம்பாகக் காய்ச்சி கடச் கட பாலைத் தந்து உபசாரம் பண்ணுகிறார்கள். பழம் தருகிறார்கள். பக்த குழாங்களுடன் ஆடிப்பாடி களிக்கிறேன்.

"நரகத்திலிருந்தால் என்ன, புவியிலிருந்தால் என்ன... பகவானை நினைக்காமலிருந்தால் அது நரகமேயொழிய நினைக்க வல்லாருக்கு வைகுண்டமாகும் நம்மூரெல்லாம். அவனை நினைப்போருக்கு எல்லாமே வைகுண்டம். அவன் கொடுக்கிற வைகுண்டம் இதைக் காட்டிலும் ஆனந்தமாக இருக்குமா என்ன? அது எனக்கு வேண்டியதில்லை" என்று சொல்லி விட்டார், அவர்!

பஞ்சாக்னியிலே கஷ்டப்பட்டுக் கொண்டு அனுஷ்டானத்திலே முழுகியிருக்காரே ஒருத்தர் – அவரிடம் அடுத்துப் போனார் நாரதர்.



# 58

அவரானால், சாதக பட்சி மாதிரி நாரதர் எப்போது வருவார் என்று காத்துக் கொண்டிருக்கிறார்!

நாரதரைப் பார்த்ததுமே, "கேட்டுக் கொண்டு வந்தீரா? -கேட்டுக் கொண்டு வந்தீரா?" என்றார்.

"கேட்டுக் கொண்டு வந்து விட்டேன். நீர் இன்னும் ஏழு ஜன்மா எடுக்க வேண்டும்" என்றார்.

அவர் பார்த்தார், "ஹா!" என்று மயங்கிக் கீழே விழுந்து விட்டார்.

அவர் பண்ணுகிற காரியம் மிகவும் கடினமான காரியம். இதிலே உடனே, கடுக மோக்ஷம் வராதா? வராதா? என்று பார்த்துக் கொண்டேயிருக்கிறார். அப்படிப்பட்டவர் இன்னும் ஏழு ஜன்மா பொறுக்க வேண்டும் என்றால் எங்கே யிருந்து பொறுப்பார்? நடுங்கிப் போய் கீழே விழுந்து விட்டார்.

ஆகவே, கடின நியமத்துடன் பண்ணக்கூடியவை பிரும்ம வித்யைகள். அவற்றின் கிட்டே நாம் போக முடியுமா...? அகிஞ்சனர்களாக, அனன்

யகதிகளாக இந்த யுகத்திலே வாழ்ந்து கொண்டிருக்கக்கூடிய நமக்கு ஒரே ஒரு வித்யை – சுலபமான வித்யை – பரத்வாஜ மஹரிஷி அதை அழகாகச் சொல்கிறார் :

பிரபத்தி – பர சமர்ப்பணம், ஆத்ம சமர்ப்பணம், சரணாகதி. – இதற்குப் பல பெயர்கள் – பர சமர்ப்பணம் பரண்யாஸம், ஆத்ம சமர்ப்பணம், – எல்லாமே பிரபத்தி. அந்த எம்பெருமானுடைய திருவடியிலே சரணாகதி தவிர வேறு கத்யந்தம் அற்றவர்கள் நாம். சரணாகதிக்கே உரியவர்கள் – அவன் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் பண்ண வேண்டும். அதை எப்போது வேண்டுமானாலும் பண்ணலாம். உடனே பண்ணிவிட வேண்டும். அதைத்தான் பகவான் எதிர்பார்க்கிறான். சரணாகதி.

இந்தச் சரணாகதிக்கும் ஒரு நியமம் உண்டு. அது என்னவென்றால், ஐந்து அங்கங்களோடு கூடிய ஆத்ம சமர்ப்பணம். இதில் அங்கியானது ஆத்ம சமர்ப்பணம்.

தைத்ரிய உபநிஷத்திலே, 'அஹம் அன்னம்' 'அஹம் அன்னம்' என்று வருகிறது. பகவானுக்கு எதிரிலே நமது ஆத்மாவை அன்னமாகப் படைக்க வேண்டும் என்று பொருள்.

புளியோதரை, வெண்பொங்கல், தொத்யோனம் என்று எதற்காக வைத்து பகவானுக்கு நிவேதனம் பண்ணுகிறோம்? எதற்காக என்றால், இந்த நிவேதனம் என்கிற காரியம் நமக்குத் தெரியவேண்டுமில்லையா? சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், புளியோதரை, தொத்யோன்னமெல்லாம் பகவானுக்கு இல்லையா என்ன...? அதை நாம் கொடுத்துத்தான் அவன் ஏற்க வேண்டுமா...?

அப்படியில்லை. ஏன் அவனுக்கு இதெல்லாம் நிவேதனம் பண்ண வேண்டும் என்றால், பெரிய நிவேதனம் நாம் அவனுக்கு ஒன்று பண்ணியாக வேண்டும். அதற்காக இப்போதே பழக்கிக் கொள்ளத்தான் இந்தப் பொங்கல் நிவேதனம். பெரிய நிவேதனம் – ஆத்மா என்கிற அன்னத்தை பகவானுக்கு நிவேதனம் பண்ணுவதுதான்.

இந்த ஆத்ம நிவேதனம் என்பதுதான் அங்கி. மற்ற ஐந்து அங்கங்கள் தவிர சரணாகதிக்கு வேறெதுவும் தேவையில்லை.

ஐந்து அங்கங்கள் இருந்ததானால் அங்கியான ஆத்ம சமர்ப்பணம் பகவானிடத்திலே நடக்கும். இதைத் தவிர வேறு ஒன்றையும் எதிர்பார்க்காது சரணாகதி.

அந்த ஐந்து அங்கங்கள் என்னென்ன...?

முதல் அங்கம் – ஆனுகூலஸ்ய சங்கல்பம் – அனுகூலனாக இருப்பது. அதாவது பகவத் விஷயத்திலேயும் பாகவத விஷயத்திலேயும் நான் எப்போதும் அனுகூல புத்தியுடன் இருக்கிறேன் என்று சங்கல்பம் பண்ணிக் கொள்ள வேண்டும். பகவத் விஷயத்தை எடுத்தாலே முகத்தைச் சுளிக்கக் கூடாது. பகவத் குணத்தை இன்னும் கேட்க வேண்டும், கேட்க வேண்டும் என்று ஆனந்தமாகக் கேட்க வேண்டும். பகவத் விஷயத்திலே ஈடுபடக்கூடியவர்களிடத்திலே பக்தியாய் இருக்க வேண்டும் – பாகவத பிரபத்தி – இதெல்லாம் அனுகூலத்தில் சேரும்.



## அருள்வாக்கு

**"எத்தனையோ வாழ்க்கை ப்ரச்னை எங்களுக்கு. ஆபீஸ் கார்யம், வீட்டுக் கார்யம் என்று அலைகிறோம், அவதிப்படுகிறோம். அது தெரியாமல், எங்கேயோ மடத்தில் உட்கார்ந்து கொண்டு 'அதைக் கத்துக்கோ, இதைக் கத்துக்கோ' என்று நீங்கள் உபதேசம் பண்ணினால் எப்படி?" என்று கேட்கலாம். மனஸிருந்தால் எதையும் செய்து விடலாம். இத்தனை வாழ்க்கை ப்ரச்னை இருந்தாலும் எத்தனை பொழுது அரட்டை, ந்யூஸ் பேப்பர், ஸினிமா, சீட்டுக் கட்டு இத்யாதியிலே போகிறது? இப்படி வீணாகப் போகிற காலத்தில் பாதி பொது நலப் பணிகளுக்கு என்றும், பாதி ஏதாவது வித்யாப்யாஸத்துக்கு என்றும் வைத்து விட்டால் போதும் – ஸமூஹப் பணிகளும் நடந்துவிடும், நம்முடைய வித்யைகளும் ப்ரகாசம் பெற்று விடும், நாமும் ப்ரகாசம் பெற்று விடுவோம்.**

**வேலை – வெட்டி, குடும்பத் தொல்லை என்று மன்றாடுபவர்களுக்கு 'டைவர்ஷன்' வேண்டாமா என்று கேட்கலாம். ஆசையோடு மனஸ் ஈடுபட்டு ஏதாவது ஒரு வித்யை அப்யஸிக்க ஆரம்பித்தீர்களானால் உங்களுக்கே தெரியும், இந்த அப்யாஸத்தை விடப் பெரிய 'டைவர்ஷன்' எதுவும் இல்லையென்று. களைத்துப் போன மனஸுக்கு வேண்டிய உத்ஸாஹத்தை இவையே**

அடுத்து வரும் அங்கம் - அனுகூலத்துக்குத் தடையாய் இருப்பதையெல்லாம் விட்டுவிட வேண்டும்! - பிரதிகூலஸ்ய வர்ஜனம் - பகவத் விஷயத்திலே ஈடுபடுவதைத் தடுக்கிற எத்தனைவிதமான தடைகள் இருந்தாலும், எவ்வளவு நமக்கு நெருக்கமாய் இருந்தாலும் அதை விட்டுவிட வேண்டும்.

யாரிடத்தில் நாம் சரணாகதி பண்ணுகிறோமோ அவனிடத்திலே பூரண விச்வாசம் - அவன் கட்டாயம் ரக்ஷிப்பான் என்ற விச்வாசம் இருக்க வேண்டும். சரணாகதியில் ஒரு பெரிய, முக்கியமான அங்கம் இந்த விச்வாசம். மஹா விச்வாசம் என்று இதற்குப் பெயர். அக்கம்பக்கத்திலே, சாமான்ய மனிதர்களிடத்திலே வைக்கிற விச்வாசம் கூட பகவானிடத்திலே நமக்கு ஏற்படுவதில்லை. ஆனால் பகவான் அந்த மகா விச்வாசத்தைத்தான் நம்மிடம் எதிர் பார்க்கிறான்.

பிரஹலாதனை தரதரவென்று இழுத்துக் கொண்டு வந்து ஸ்தம்பத்தெதிரிலே நிறுத்தி வைத்துக் கேட்கிறான் : "நாராயணன் இந்த ஸ்தம்பத்தில் தெரியறான் என்றாயே! இப்போது என் ஆயுதத்தை எடுத்து உன் தலையை வெட்டித் தள்ளுகிறேன். இந்த ஸ்தம்பத்திலே இருப்பவன் வந்து உன் தலையையும் உடம்பையும் தைத்து உனக்குப் பிராணனை உண்டுபண்ணுவானா...?"

"அந்தக் காரியம் அவன் பண்ண மாட்டான் அப்பா!" என்றது குழந்தை!

''அந்தக் காரியம் பண்ணமாட்டானெனில் நீ ஏண்டா அவனைப் பற்று



''ஜெராக்ஸ் கடை திறப்பு விழாவுக்குப் போன நம்ம தலைவரு, ஏன் ரொம்பக் கடுப்பா இருக்காரு?''

''நூறு ரூபாய் நோட்டை நிறைய ஜெராக்ஸ் எடுத்து, மாலையாகப் போட்டு அனுப்பிட்டாங்களாம்!''

— வை.தே. கண்ணன்

கிறாய்?"

''அப்பா! நான் சொல்வது உனக்குப் புரியவில்லையே! நீ கத்தியை எடுத்து என் தலையை வெட்டுகிறேன் என்கிறாய். கழுத்து கிட்டே கத்தியைக் கொண்டு வர அவன் விடுவானா...? அப்புறம்தானே வெட்டுகிற காரியம்! கத்தி வருமா என்று முதலில் பார்!" என்றான் பிரஹலாதன்.

என்ன விச்வாசம்! அதுதான் மஹா விச்வாசம். பெற்றெடுத்த தந்தை எதிரிலே நிற்கிறான். சர்வலோக பிதா ஸ்தம்பத்திலே இருக்கிறான். அந்தக் குழந்தை அவ்வளவு விச்வாசமாகப் பேசுகிறது. அதுதான் மகாவிச்வாசம்.

அந்த விச்வாசம் நமக்கு இருந்தால் நாமும் கட்டாயம் ரக்ஷிக்கப்படுவோம். ஆனால் அந்த விச்வாசம் நமக்கு ஏற்படுவதில்லையே...! அதனால் பிரஹலாதனைப் பார்த்து நிஜ பக்தன் என்று சொல்கிறோம். கபட பக்தி நம்மிடமிருந்தால் அவன் நம்மை ரக்ஷிப்பானா? உத்தமமான விச்வாசம் அல்லவா வேண்டும்.

நீ ரக்ஷித்தால் வேறு யார் ரக்ஷகர்கள் எனக்கு? வேறு யாரும் ரக்ஷிக்கத் தேவையில்லையே! நீ கைவிட்டால் வேறு யார் ரக்ஷகர் எனக்கு? உன்னால் கைவிடப்பட்ட என்னை வேறு யாரால் ரக்ஷிக்க முடியும்?

'நீ கோபித்துக் கொண்டால் நான் எங்கு போவேன்? நீ ரக்ஷித்து விட்டால் நான் வேறு எங்கும் போவானேன்...! நீயே எனக்குச் சரண்' என்பது மகாவிச்வாசம்.

மற்ற இரு அங்கங்கள் அடுத்த வாரம்.

(தொடரும்)

**(வித்யைகளே) ஊட்டி விடும். அப்படியும் ஒரேயடியாக நீங்கள் 'டைவர்ஷன்' என்பதை விட்டு விடும்படிச் சொல்லவில்லை. அதுவும் கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்களே ஆலோசித்துப் பார்த்து, ''இப்படிப் பொழுதை வேஸ்ட் பண்ணுகிறோமே'' என்று நினைக்கக்கூடியவைகளை விட்டு விட்டு - இப்படி நிறைய அகப்படும் - அந்தப் பொழுதை இப்படியொரு Pursuit-ல் (தேட்டத்தில்) செலவிட்டால் போதும், ஏதாவதொரு ஸ்வதேச வித்யையில் ஈடுபட்டுத் தேர்ச்சி பெற்றுவிடலாம். நம் முன்னோர்கள் போன வழி அதுதான்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



• ஆர். பி. சீனிவாசன்

# பாடப் புத்தகம் இல்லாத பள்ளி!

பல் டாக்டர் ஒருவர் சேலத்தில் பள்ளிக்கூடம் நடத்தி வருகிறார். டாக்டரின் பெயர் : ஆர். பி. சீனிவாசன். பள்ளியின் பெயர் : வித்யா பீடம் மெட்ரிகுலேஷன் ஸ்கூல்.

எல்கேஜி, யுகேஜி, முதல் வகுப்பு – மூன்றிலுமாக 51 குழந்தைகள். ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு வகுப்பு சேரும். சாதாரணமாக 51 குழந்தைகளுக்கும் சேர்த்து ஒரே ஒரு டீச்சர் இருப்பார், இல்லையா? இங்கே நான்கு டீச்சர்கள்!

பாடப் புத்தகம் என்ற பேச்சே இல்லை! எல்லாம் ஒர்க் ஷீட்தான்! "டிபன் பாக்சும், தண்ணீர் பாட்டிலும்தான் குழந்தைகள் எடுத்து வரும் அதிகபட்ச சுமை!" என்கிறார் டாக்டர் சீனிவாசன். (ஆர்.கே. நாராயண் பார்த்தால் சந்தோஷப் படுவார்!)

"ஐந்தரை அல்லது ஆறு வயதுப் பையன் இங்கே எளிதாக கம்ப்யூட்டர் கற்றுக் கொள்ள முடியும்!" என்று டாக்டர் சொன்னபோது மரியாதையாக ஒப்புக் கொண்டோம் : ஏனென்றால் நேரிலே பார்த்தோம்!

"விவேகானந்தரையும், வேதங்களையும், உபநிஷதங்களையும் அவ்வப்போது படிக்க நேர்ந்தது. நம் பள்ளிக்கூடங்களிலேயே நம் குழந்தைகள் நம் கலாசாரத்தைக் கற்க முடியவில்லை என்றால், வேறு எங்கே போய்த் தெரிந்து கொள்வார்கள்?

"எளிமையான வழிமுறைகளை நாம் சொல்லித் தருவதில்லை. கிரகித்துக்கொண்டு, பயன்படுத்தக் கூடிய விஷயங்களைச் சொல்லித் தருவதில்லை. தேவையில்லாததைத் திணிக்கிறோம். போக்ரன்–2 பற்றி நமக்குள்ளேயே இன்னும் தெரிந்து கொள்ள வேண்டியவை நிறைய இருக்கிறது. இதில் பானிபட் போர் – 1, பானிபட் போர் – 2 பற்றி இப்போது படித்து என்ன ஆகப் போகிறது? முகலாயர்கள் ஏன் நம் நாட்டில் வெற்றிகரமாக ஆட்சி செய்தார்கள்? வீரமிக்க ராஜபுத்திரர்கள் பலர் இருந்தும் அவர்களிடம் ஒற்றுமை ஏன் இல்லாது போயிற்று? வெள்ளைக்காரன் எப்படி நம்மை வென்றான்? சரித்திரம் அறிய இவை தெரிந்தால் போதாதா? பாண்டிச்சேரியில் நடந்த ஒர்க்ஷாப் ஒன்றில் கேட்டேன் : எந்த மாநிலத்தில் கனிமவளம் இருக்கிறது, பஞ்சாபில் பாயும் நதிகள் என்ன – இவை எல்லாம் தெரியாததால், வாழ்க்கையில் என்ன இழந்து விட்டீர்கள்? எல்லாரும் கல்வியாளர்கள். யாரும் பதில் சொல்லவில்லை!"

வெறும் வகுப்பறைப் பாடங்களோடு நின்று விடாமல், இமோஷனல் இன்டெலிஜென்ஸ் அடிப்படையில் தமது பள்ளியை நடத்துவதாகச் சொன்னார் டாக்டர் சீனிவாசன்.

"அமெரிக்காவில் பல பள்ளிகளில் இந்த முறை இருக்கிறது. ஆப்டிமிஸ்டிக்காக இருப்பது எப்படி, கோபத்தை அடக்குவது எப்படி, உடன் இருப்பவர்களுடன் ஒத்திசைந்து போவது எப்படி, எல்லாம் படிக்கும்போதே கற்றுக் கொள்கிறார்கள். டேனியல் கோல்மேன் இதுபற்றி ஒரு புத்தகமே எழுதியிருக்கிறார். இந்தப் பள்ளிக் குழந்தைகள் டீச்சரைக் கண்டு பயந்து நடுங்குவதில்லை. தெரியாததை, 'மிஸ், ப்ளீஸ் ரெபீட்' என்று தைரியமாகக் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். வகுப்பறையிலேயே குழந்தைகளின் உணர்வு பூர்வமான சந்தர்ப்பங்களை உருவாக்கி, அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள், எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை விளக்குகிறோம்."

"குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்கு வர ஆசைப்பட வேண்டும். அவர்களைப் பயமுறுத்திப் பாடம் கற்பித்தல் சரியல்ல!" என்கிறார் டாக்டர் சீனிவாசன். ⭘



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை-63. Tel & FAX: 2376129,
E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com website: www.intamm.com/sspeetam

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம், வரும் புத்தாயிரமாண்டில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

✱ குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

✱ குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ● காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ | 1000/- |
| ● மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 2,000/- |
| ● இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| ● இனிப்பு மற்றும் பால், வழங்குதல் | ரூ | 750/- |
| ● ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| ● ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| ● ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓர்ாண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 9,000/- |
| ● குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.



## விவேகானந்தர் தேசீய இயக்கம்

(ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின் கீழ் நிறுவனம்)

### புத்தாயிரமாண்டில் எழுச்சிமிகு இயக்கம்!
### 21வது நூற்றாண்டில் ஏற்றமிகு புதிய இயக்கம்!

இது ஒரு மக்கள் இயக்கம்! நாட்டுக்கு தொண்டாற்ற முனையும் தேசீய இயக்கம்! பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், வீரத்துறவி சுவாமி விவேகானந்தரின் வழியில், வீறுநடை போடும், அன்பு இயக்கம்!

சென்னையில் 10,11,12 மார்ச் 2000, மேட்டுபாளையத்தில் (கோவை மாவட்டம்) 18,19,20 மார்ச் 2000, மொரப்பூர் (தருமபுரி மாவட்டம்) 24,25,26 மார்ச் 2000 இவற்றில் ஏதேனும் ஒன்றில் நடக்கும் 3 நாள் பயிற்சி முகாமில் கலந்து கொள்ளும்படி இவ்வியக்கம் அன்புடன் அழைக்கிறது. விருப்பமுடையவர்கள் ரூ 3/- அஞ்சல் தலையொட்டிய சுயவிலாசமிட்ட உறையை அனுப்பி விவரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

முகவரி: **விவேகானந்தர் தேசீய இயக்கம்**
72, காமராஜ்சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.



# ஜே ஜே விட்டல்!

**ஊ**ழல் பேர்வழிகளுக்குப் புதிய 'வலை' ஒன்றை விரித்து இந்தியாவையே நிமிர்ந்து உட்காரச் செய்திருக்கிறார் விட்டல் – விஜிலன்ஸ் கமிஷனின் தலைவர். விஜிலன்ஸ் கமிஷனுக்கு ஓர் இணையம் (வெப் சைட்) ஏற்படுத்தி அதில் 88 ஊழல் குற்றம் சாட்டப்பட்ட அதிகாரிகள் மற்றும் காவல் துறையினரின் பெயர் பட்டியலை வெளியிட்டார் விட்டல்!

அவ்வளவுதான்! டெல்லி அரசுத் துறை வட்டாரம் சவுக்கடிபட்டது போல் விழித்துக் கொண்டிருக்கிறது. ஓர் உயர் போலீஸ் அதிகாரி வீட்டில் ரெய்ட் நடத்தப்பட்டு வருமானத்துக்குத் துளியும் பொருந்தாத அளவு அவர் சொத்து சேர்த்து வைத்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

விட்டலின் பட்டியலில் தினமும் சில புதுப் பெயர்கள் சேர்கின்றன. விஜிலன்ஸ் கமிஷன் இணையத்தின் (முகவரி: cvc.nic.in) வருகையாளர் எண்ணிக்கை மளமளவென்று உயர்ந்து வருகிறது. பல அதிகாரிகள் தங்கள் பெயர் சேர்க்கப்பட்டுள்ளதா என்று பதற்றத்துடன் அவ்வப்போது கவனித்து வருகிறார்கள்.

முப்பத்து நான்கு ஆண்டுகளாக வெறுமே அறிக்கைகள் வெளியிட்டு வந்தது விஜிலன்ஸ் கமிஷன். பல்வேறு அரசாங்கங்களும் அவ்வறிக்கைகளை வாங்கி கிடப்பில் போட்டு வந்தன.

''ஊழல் என்பது குறைந்த அபாயத்துடன் நிறைய லாபம் சம்பாதிக்கும் தொழிலாகவே மாறிவிட்டது இந்தியாவில். என்னால் முயன்றவரை அபாயத்தை அதிகப்படுத்துவேன்'' என்று களத்தில் இறங்கினார் விட்டல். இவர் பொறுப்பேற்றது 1998 இல்.

ஊழல் பேர்வழிகளைக் காப்பாற்றி வந்த பாதுகாப்புக் கவசம் இப்போது விரிசல் கண்டிருக்கிறது. இந்தியத் துறைமுகங்களிலிருந்து சரக்குகளை எடுக்கும் கஸ்டம்ஸ் ஹவுஸ் ஏஜெண்டுகளை கஸ்டம்ஸ் அதிகாரிகள் லஞ்சம் கேட்டு கசக்கிப் பிழிவது வழக்கம். இவர்கள் விட்டலிடம் முறையிட்டிருக்கிறார்கள். 'லஞ்சம் தர மறுத்து விடுங்கள்' என்று அவர் அளித்த தைரியத்தில் கஸ்டம்ஸ் ஏஜெண்ட்ஸ் அசோசியேஷன் என்கிற அமைப்பு அவ்வாறே ஒரு தீர்மானம் இயற்றிவிட்டது. அதன் உறுப்பினர்களாக இருக்கும் நிறுவனங்கள் கஸ்டம்ஸ் அதிகாரிகளுக்கு லஞ்சம் தர மறுக்கின்றன. கஸ்டம்ஸ் அதிகாரிகளின் கோபம் எத்தகையதாக இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை!

ரிடயர் ஆகும் தருவாயிலிருந்த ஓர் உயர் அதிகாரி பேரில் ஊழல் நடவடிக்கை எடுத்து அவரைப் பதவி நீக்கம் செய்யும்படி அரசை வலியுறுத்தியிருக்கிறார் விட்டல்! யாரிடமும் கருணை காட்ட அவர் தயாராயில்லை.

முறைகேடாகச் சேர்த்த சொத்து அவரைக் கொதிப்படையச் செய்கிறதாம்.

'தலைவிதியே' என்று லஞ்ச ஊழலை சகித்துக் கொண்டிருக்கும் கோடானு கோடி இந்தியர்களிடையே இப்படியொரு ஜே ஜே விட்டல்!

— வீரபத்திரன்

**கே. பாலச்சந்தர் வழங்கும்**

# ஊஞ்சல்



பைரவியும் விஷ்ணுவும் எதிரெதிர் வீட்டில் வசிப்பவர்கள். இரண்டு குடும்பங்களும் நல்ல நட்பு. விதவைத் தாயுடன் வசிக்கும் விஷ்ணு ஏர் இந்தியாவின் உயர் அதிகாரி. பைரவியோ மத்திய குடும்பத்தைச் சேர்ந்த டைப்பிஸ்டாக பணிபுரிபவள். அவளை விட குறைவாக சம்பாதிக்கும் தந்தையும், 12 வயதில் ஒரு தம்பியும். பைரவி விஷ்ணுவை மனதாரக் காதலிக்கிறாள். ஆனால் விஷ்ணுவோ, பாடகியான பல்லவியை பெற்றோர் சம்மதத்துடன் காதலித்து நிச்சயதார்த்தமும் நடக்கிறது.

பைரவிக்கு அதிர்ச்சி! விஷ்ணுவை எக்காரணத்திற்காகவும் இழக்கத் தயாராயில்லை அவள்! ஒரு முடிவுக்கு வருகிறாள் – உடனே பல்லவியுடன் நெருங்கிப் பழகி அவளுடைய தீவிர நட்புக்கு ஆளாகிறாள்! இப்பொழுது தன்னுடைய திட்டத்தை செயல்படுத்த தொடங்குகிறாள். பல்லவியையும், விஷ்ணுவையும் பிரிப்பதற்கு!

அநாமதேய கடிதங்கள், நம்பக்கூடிய கிசுகிசு, விஷ்ணுவின் பேச்சுக்கள் அடங்கிய குறிப்பிட்ட கேசட் – இது போல எத்தனையோ முயற்சிகள் மூலம் அவள் விஷ்ணுவை பல்லவியிடமிருந்து பிரிக்க பார்க்கிறாள். ஏனென்றால் அவள் எக்காரணத்திற்காகவும் விஷ்ணுவை இழக்கத் தயாராயில்லை!

ஆனால் பைரவியின் ஒவ்வொரு முயற்சியும் முறியடிக்கப்படுகிறது! யாரால்?

அவள் விஷ்ணுவை அடைந்தாளா? அல்லது விஷ்ணு தடைகளைத் தாண்டி பல்லவியை மணந்தானா?

விஷ்ணுவை யார் அடைந்தார்கள்?




இந்த இழையில்தான் கதையின் ஓட்டம்! விறுவிறுப்பு!
இது ஒரு இளமையான சங்கீதக் காதல் கதை!
காணத் தவறாதீர்கள்! உங்கள் விஜய் டிவியில்!

கதை, திரைக்கதை & வசனம் : தேவிபாலா

இயக்கம் : சுந்தர் கே. விஜயன்

நடிகர்கள் : எஸ்.பி.பி., சரண், ஷாலினி & ஸ்ரீதுர்கா.

**விஜய் டி.வியில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் இரவு 8.30 மணிக்கு**

- ADVT -

ஆட்டோ ஒரு மேம்பாலத்தின் மீது ஏறியது.

"ரொம்ப வேகம் வேண்டாம்" என்று ஆட்டோ டிரைவரிடம் கூறிய கோமளா, சுவாதியிடம் திரும்பினாள். "கடையை சரியாக ஒன்பது மணிக்குத் திறந்தாகனும். சாவி என்கிட்டே இருக்கு. என் அஸிஸ்டெண்ட் ஒன்பதரை மணிக்கு வந்துடுவா. அவ வந்தவுடன் நாம எல்லாரும் வீட்டுக்கு வந்துடலாம். கடைக்குப் போனதும் பக்கத்து ரெஸ்டாரண்ட்டிலிருந்து ஏதாவது டிபன், காப்பி வரவழைச்சுக்கலாம் அல்லது போய்ச் சாப்பிடலாம். வீட்டுக்குப் போன பிறகு என் சமையல். ஓகேவா?"

சுவாதி பதிலேதும் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டிருக்க, கோமளா அவளைக் கனிவுடன் பார்த்தாள்.



"புரியுது சுவாதி. இவ்வளவு வருஷங்கள் கழித்து அம்மாவைப் பார்க்க வந்திருக்கே. அவளை அறிமுகப்படுத்தாமல் நான் பாட்டுக்கு கடை, சாவி, டிபன்னு பேசிக்கிட்டிருக்கேனேன்னு பார்க்கிறே இல்லையா?... உங்கம்மா சத்யா இப்போ ஆந்திராவிலே இருக்கா. சென்னையை நோக்கி வரும் புயல் திசை திரும்பி விசாகப்பட்டினத்தைத் தாக்குவது வழக்கமில்லையா? இந்த முறையும் அப்படி ஆகியிருக்கு. பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்ய உங்கம்மா போயிருக்கா. நிஜமான சமூகசேவகியாச்சே. அதுக்காக நீயும் விசாகப்பட்டினத்துக்கு கிளம்பத் துடிக்காதே. அங்கேயெல்லாம் போவது இப்போதைக்குச் சுலபமில்லை. தவிர சத்யாவை அங்கே தேடிப் பிடிப்பதும் கஷ்டம். எப்படியும் இன்னும் ரெண்டு மூணு வாரத்திலே வந்திடுவா. அதுவரை நீ என்னோடு தாராளமாகத் தங்கிக்கலாம். என்ன சொல்றே?"

'யாராவது தன் விரலை நீட்டினால் போதும். அதைப் பிடித்துக் கொண்டு தன் வாழ்நாள் முழுதும் அவர்களோடு கண்ணை மூடிக்கொண்டு நடந்து விடலாம். அம்மாவின் விரலும் இப்போதைக்குக் கிடைக்கவில்லையே' என்ற பயம்தான் சுவாதியின் மனம் முழுவதும் நிறைந்திருந்தது.

"இங்கேதான், நிறுத்திக்கோப்பா ஆட்டோ." அந்தப் பெரிய காம்ப்ளெக்ஸின் முதல் மாடிக்குப் போனார்கள்.

கோமளா சரசரவென்று நடந்து கடையின் முன் நின்றாள். கடைக்கு வெளியே இதமான வண்ணத்தில் 'அதெல்லாம் எங்கள் பொறுப்பு' என்று எழுதியிருந்தது.




''என்ன பார்க்கிறே? என் கடையின் பெயரே 'அதெல்லாம் எங்கள் பொறுப்பு' தான்'' என்றாள் கோமளா புன்னகையுடன். பூட்டைத் திறந்து ஷட்டரை மேலேற்றி விட்டு உள்ளே நுழைந்தாள். மின் விசிறியை ஆன் செய்து விட்டு உட்கார்ந்து கொண்டாள். ''வந்து உட்காருங்க''

அருண் சரண்யா

என்றாள்.

சின்னக் கடைதான் என்றாலும் வெகு சுத்தமாகவும், அழகாகவும் இருந்தது. ஒரு அலமாரியில் விதவிதமான வாழ்த்து அட்டைகள். இன்னொன்றில் சிறுசிறு பரிசுப் பொருட்கள். வேலைப்பாடமைந்த மர ஹாங்கர் ஒன்றிலிருந்து கண்ணை உறுத்தாத வண்ணங்களும், டிசைன்களும் அமைந்த பரிசு உறைகள் தொங்கிக் கொண்டிருந்தன. சுவரில் அடுக்கடுக்காக வெவ்வேறு அளவினாலான மரப் புறாக்கள் பறக்கும் நிலையில் காட்சியளித்தன.

மேஜையின் டிராயரைத் திறந்து ஒரு புனித நூலை எடுப்பதுபோன்ற ஜாக்கிரதையுடன் கோமளா ஒரு தடியான நோட்டுப் புத்தகத்தை எடுத்தாள். பெரிய சைஸ் டைரி போலும். புரட்டிக் கொண்டே வந்தவள் அன்றைய தேதி வந்ததும் கையசைவை நிறுத்தினாள்.

'கோட்டூரிலிருக்கும் சுந்தராம்பாளுக்கு ஐம்பதாவது பிறந்தநாள். வாழ்த்துவது பெங்களூரிலிருக்கும் அவரது மகன். அப்புறம், பெசன்ட் நகரிலிருக்கும் ராம்குமாருக்கு ஆவடியிலிருக்கும் அவர் நண்பர் அனுப்ப வேண்டிய பிறந்த நாள் வாழ்த்து.'

அவள் படித்துக் கொண்டிருக்கும் போதே ஷார்ட்ஸும் டீ-ஷர்ட்டுமாக ஒரு பையன் வந்தான்.

"அட, நர்சரியிலேயிருந்து வந்தாச்சா? இன்னிக்குத்தான் சரியான நேரத்திற்கு வந்திருக்கே. இதே நேரம் தவறாமை இனிமே எப்பவும் இருக்கணும்" என்றபடி அவன் கொண்டு வந்த அழகிய ரோஜாக்கள், குரோட்டன்ஸ் இலைகள், நீண்ட அழகான புற்கள் ஆகியவற்றை வாங்கி மின் விசிறியின் காற்று படக்கூடிய இடத்தில் வைத்தாள்.

"இந்த அவசர யுகத்திலே ஆளாளுக்கு ஆயிரம் வேலைகள். அதே சமயம் மனித உறவுகள் மங்காமலிருக்கணும்னு ஆசையும் இருக்கு. இது இரண்டையும் யோசித்துதான் இந்தக் கடையைத் தொடங்கினேன். வருடம் முழுதும் வரக்கூடிய தன் உறவினர்கள் மற்றும் நண்பர்களின் விசேஷ நாட்களை எங்களிடம் சொல்லிவிட்டு குறிப்பிட்ட தொகையை செலுத்தி விட்டால் போதும், மறக்காமல் குறிப்பிட்ட நாட்களில் வாழ்த்து அட்டைகள், பூங்கொத்து மற்றும் பரிசுப் பொருள்களை நாங்களே அவரது சார்பாக நேரடியாகக் கொடுத்து அனுப்பி விடுவோம்" என்றாள் கோமளா.

சுவாதிக்கு ஆச்சரியமாக இருந்தது. 'இதையெல்லாம் கூடப் பணம் கொடுத்து இன்னொருவரை செய்யச் சொல்வார்களா?' எதுவும் பேசாமலிருந்தால் நன்றாக இருக்காதே என்று "அந்தப் புறா பொம்மைகள் ரொம்ப அழகாக இருக்கு" என்றாள்.

"அசடே, பார்க்க வேண்டிய முக்கியமான இடத்தைவிட்டு எதையெதையோ பார்க்கிறாயே! கழுத்தைத் திருப்பி உன் பின் பக்கமாகப் பார்" என்றாள் கோமளா. என்னவாக இருக்கும் என்ற புதிருடன் திரும்பிய சுவாதியின் கண்களில் பட்டது அந்தப் புகைப்படம். கோமளா ஆன்ட்டி. பக்கத்தில் சிரித்தவாறு அம்மா!

தன்னிச்சையாக எழுந்து அதனருகே சென்றாள். வீட்டில் காணப்பட்ட அம்மாவின் புகைப்படத்திற்கும் இதற்கும் நிறைய வித்தியாசங்கள் தென்பட்டன. அதில் முகத்தில் நிறைய இளமை. இதில் ஒருவித பக்குவம். அதில் பட்டுப் புடவையும், நிறைய நகைகளும், பெரிய சைஸ் குங்குமமும். இதில் பருத்திப்புடவை, மெல்லிய சங்கிலி மட்டுமே. சிறிய திலகம். இந்த அம்மாவை சுவாதிக்கு



**"ஜோக்ஸ் எழுதறதுல உங்களுக்கு மாதம் எவ்வளவு சார் கிடைக்கும்?"**

**"சராசரியா 200 ரூபாய் கிடைக்கும்; ஏன் கேக்கறீங்க?"**

**"மாசத்துக்கு நான் 250 ரூபாய் தர்றேன், எழுதறதை விட்டுடறீங்களா...?"**

**— சீர்காழி ரேவதி**

அதிகம் பிடித்துப் போனது. 'எப்போது வந்து என்னை விரல் நீட்டி வழிநடத்தப் போகிறாய் அம்மா?'

''சத்யாவைத் தோழியாக அடைய நான் கொடுத்து வச்சிருக்கணும். தனியார் நிறுவனத்திலே குமாஸ்தாவாகக் காலம் தள்ளிக்கிட்டிருந்தேன். திருமணமான ஐந்தாவது நாளே கணவனை விபத் தொன்றில் பறி கொடுத்துட்டேன். அப் போது உங்கம்மா தான் எனக்குப் பெரிய ஆறுதல். 'வாழ்க்கையே விபத்துதான் கோமளா. உன் கணவரை நீ விபத்தில் இழந்தாய். என் கணவரை விவாகரத்தில் இழந்துட்டேன். அவ்வளவுதான் வித்தி யாசம்'னு சொல்லுவா.''

மீண்டும் அதிர்ச்சி. அப்பாவுக்கும், அம்மாவுக்குமிடையே விவாகரத்து நடந் ததா? மறைமுகமாகக் கூட அப்பா இதைச் சொல்லவில்லையே. தவிர அம்மா இறந்து விட்டதாக அவர் தன்னிடம் கூறவேண் டிய அவசியம் என்ன? வழக்கமாக சுவாதியைச் சூழும் உணர்ச்சி- அதுதான் குழப்பம்- இம்முறையும் எழுந்தது.

இதையெல்லாம் அறியாமல் கோமளா தொடர்ந்து கொண்டிருந்தாள். ''உங்கம்மா பலதடவை சொல்லியிருக்கா 'ஏதோ நாமும் பிறந்தோம், வாழ்ந்தோம், இறந்தோம்னு' இருக்கக்கூடாது. உன் திறமைகள் வெளிப் படுகிறமாதிரி, உனக்குத் திருப்தி வரமாதிரி ஒரு பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்' என்பாள் அடிக்கடி. ஒருமுறை பூங்காவில் ஒரு கணவன் தன் மனைவியை சமாதானப் படுத்திக்கொண்டிருந்தான். 'எதுக்குக் கோவிச்சுக்கறே மாலா? உன் பிறந்த நாளைக்கு வேணா பட்டுப் புடைவை வாங்கித் தரேன்'னு கெஞ்சினான். 'மண் ணாங்கட்டி.. இன்னைக்குதான் என் பிறந்த நாள். இதைக் கூட நீங்க மறந்துட்டீங்க ளேன்னு தான் எனக்குக் கோபமே'ன்னா அவ. அந்தப் பேச்சில் கிடைத்த ஐடியாதான் இந்தக் கடைக்கான வித்து''

**ஏ**தோ சாவி கொடுக்கப்பட்ட பொம்மை போல் ஹோட்டலுக்குள் நுழைந்தாளே தவிர, சுவாதியின் மனம் திரும்பத் திரும்ப ஒரு வாக்கியத்தையே ஆக்ஷன் ரிப்ளே செய்து கொண்டிருந்தது. 'ஏதோ நாமும் பிறந்தோம், வாழ்ந்தோம், இறந்தோம்னு இருக்கக் கூடாது. உனக்குத் திருப்தியான, உன் திறமைக்குத் தேவைப் படும் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்.' ஒரு மெழுகுவர்த்தி போல அந்த வாக்கியங்கள் செயல்பட்டு சுவாதியின் மனத்தில் அடைத்துக் கொண்டிருந்த இருட்டின் ஒரு பகுதியை விலக்கியது. 'வழிகாட்டும் விரல்' வெளியிலிருந்து வரத் தேவையில்லையோ? அது உள்ளுக்குள் தான் உள்ளதோ?

''முதல்லே ஆளுக்கொரு ப்ளேட் இட்லி வடை சாப்பிடலாம்'' என்று சர் வரிடம் ஆர்டர் கொடுக்கத் தொடங் கினாள் கோமளா. ஹோட்டலுக்குப் போனால் அப்பா கூட அவருக்கு விருப்பமான ஐட்டத்தைதான் தங்கள் மூவருக்குமாகச் சேர்த்து ஆர்டர் செய்வார் என்பது நினைவுக்கு வந்தது.

சடாரென்று பேசினான். ''ஆன்ட்டி, எனக்கு இட்லி வேணாம். தோசை வாங் கிக்கறேன். முன்னா, உனக்கு என்ன வேணும்?''

''பூரி ஆலூ'' என்று அவன் சொல்ல, சர்வரிடம் ''ஓகே, ஒரு ப்ளேட் இட்லி வடை, ஒரு தோசை, ஒரு செட் பூரி கிழங்கு'' என்று ஆர்டரை மாற்றிச் சொன்ன கோமளாவுக்குப் புரியவில்லை, சுவாதியின் முகத்தில் எதற்கு இந்த திடீர் பெருமிதம் என்று!

(தொடர்ந்து பறக்கும்)



''உங்க கதைதான் பிரசுரமாயிடுச்சே; அப்புறம் ஏன் சோகமா இருக்கீங்க?''

''மேலட்டையைப் பாருங்க. இது 'காப்பியடிச்சு எழுதின கதைகள்' ஸ்பெ ஷலாம்.''

— பா.ஜெயக்குமார்

# பாக். அரசியலில் இன்னொரு அம்மணி!

"ஜனநாயகத்தின் சின்னம் எது? அதன் பெயர், நவாஸ் ஷெரீப். இன்று அவர் சிறையிலிருக்கின்றார் எனில், ஜனநாயகமே சிறைப்பட்டிருப்பதாகத்தான் அர்த்தம்!"

பர்வேஸ் முஷாரஃபின் ராணுவ அரசால் நவாஸ் கைது செய்யப்பட்டு இத்தனை நாட்கள் கழித்து, இப்போது முதல் முறையாக இப்படி வாய் திறந்திருப்பவர், நவாஸ் ஷெரீபின் மனைவி குல்ஸூம் நவாஸ்.

"பக்கத்து நாடான இந்தியாவைப் பாருங்கள். எப்போதாவது அங்கே ஆட்சியில் ராணுவம் நுழைந்திருக்கிறதா? பாகிஸ்தானுக்கு மட்டும் ஏன் இந்தச் சாபக்கேடு?" என்று புலம்புகிறார் குல்ஸூம்.

"என் கணவர் கைதாவதற்கு ஒரு வாரம் முன்பு முஷாரஃப் தன் மனைவியுடன் எங்கள் வீட்டுக்கு வந்தார். சிரித்துப் பேசி, விருந்தெல்லாம் சாப்பிட்டுப் போனார். இப்படியெல்லாம் நடக்கக் கூடுமென்று நவாஸ் ஒரு சந்தேகமாகக்கூட என்னிடம் ஏதும் சொல்லவில்லை!" - இது புலம்பலின் அடுத்தக்கட்டம்.

"அவர் ஒரு அமைதிப் பிரியர் (!) இந்தியாவுடன் நல்லுறவு காணவே விழைந்தார். அமைதிப் பேச்சுவார்த்தைதான் அவரது முதல் நோக்கமாயிருந்தது. வாஜ்பாயியைக் கூட இங்கே (பஸ்ஸில்) வரவழைத்தாரே! எல்லையில் அமைதி கண்டாலொழிய இரு நாடுகளும் வளர்ச்சிப் பாதையில் முன்னேற முடியாது என்பதுதான் அவரது தீர்மானமான கருத்து."

இப்படியெல்லாம் சொல்பவரின் உச்சபட்ச கருத்து என்ன தெரியுமா?

"பாகிஸ்தானின் நலனுக்காக, இந்தியா விஷயத்தில் என் கணவர் சில 'தியாகங்கள்' செய்யவும் தயாராக இருந்தார்!"

நவாஸ் ஷெரீபும் அவரது மகன் ஹுஸைன் நவாஸும் பாகிஸ்தானிலேயே வேறு வேறு சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள்.

வாரம் இருமுறை (தலா அரை மணி நேரம் மட்டும்) நவாசைச் சந்திக்க, குல்ஸூமுக்கு அனுமதியளித்திருக்கிறார் முஷாரஃப்.

"அந்த அரைமணி நேரம் கூடத் தனியே விடுவதில்லை. அந்தரங்கமாகப் பேசிக் கொள்ளக்கூட முடியாது. வெறுமனே வீட்டைப் பற்றியும் குழந்தைகளைப் பற்றியும் தான் பேசுவோம். ஆனால் ராவல் பிண்டியில் சிறை வைக்கப் பட்டுள்ள என் மகனுடன் வாரமொருமுறை இரண்டு மணி நேரம் பேச அனுமதிக்கிறார்கள்" என்கிறார் குல்ஸூம்.

"ராணுவ ஆட்சி விலகும் வரை நான் அரசியலில் ஈடுபடலாமென்றிருக்கிறேன். பாகிஸ்தானில் மறுபடி ஜனநாயகம் மலர்ந்துவிட்டால், நான் அரசியலைத் துறந்து, வீட்டுக்குப் போய் விடுவேன். வயதான என் மாமனாருக்கு உடம்பு சரியில்லை. நவாஸின் தாயார் ரொம்பக் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார். அவர்களுக்கு நம்பிக்கை தரும் விதமாக கவனித்துக் கொண்டே போராடப் போகிறேன்!" என்கிறார் குல்ஸூம் நவாஸ்.

— ஔரங்கசீப்

ஆதாரம் : அவுட்லுக்



Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)




# THE MAYAVARAM FINANCIAL CHIT CORPORATION LIMITED

Regd. & Admn. Office: 13-A1, Cutchery Road,
**Mayiladuturai - 609 001 Tamil Nadu**

**HIGHER DENOMINATION AUCTION CHIT PROMOTERS SINCE 1947**

## MEMBERS OF BOARD



Mayiladuthurai
17.02.2000

**K. Jeyachundhren**
Managing Director

